# தாய்மார்களே!
# டாக்டர்கள் குழந்தை உணவில் எதை எதிர்பார்க்கிறார்களோ, அது அமுல்ஸ்ப்ரேயில் உள்ளது.

அமுல்ஸ்ப்ரேயில் உங்கள் குழந்தை ஆரோக்கியமாகவும், வலுவுடனும் வளருவதற்குத் தேவையான வைட்டமின்கள், கனிமப் பொருட்கள் மற்றும் புரதங்கள் அடங்கியுள்ளன.

வைட்டமின்கள்—நோய்த்தொற்றை எதிர்க்க, நன்றாக பசி எடுக்க, ஆரோக்கியமான நரம்புகள், ஈறுகள், கண்கள் மற்றும் பற்களுக்கு.

நியாஸின்—சீரண சக்தியை வளர்க்க, உடல் உறிஞ்சிக் கொள்ள, ஆரோக்கியமான சருமத்துக்கு. கால்ஷியம், பாஸ்பரஸ் போன்ற கனிமங்கள் எலும்புகள் சீராக அமைய. இரும்புச் சத்து, ரத்த அமைப்புக்கு.
புரதம், செல் அமைப்புக்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையானது.
அமுல்ஸ்ப்ரேயில் தாமுயர்ந்த புரதங்கள் அடங்கியுள்ளன.

அமுல்ஸ்ப்ரேயை, பிறந்து சில நாட்களான குழந்தைகள் கூட சீரணிக்க முடியும்.
ஒவ்வொரு சொட்டுப் பாலும் மிக நுண்ணிய பவுடராக மாற்றப்படுகிறது. கொழுப்பும் அவ்வாறே மாற்றப் படுகிறது. இதனால் குழந்தை இதை எளிதில் சீரணிக்க முடிகிறது.

அமுல்ஸ்ப்ரே விரைவில் எளிதாகத் தயாரிக்கவல்லது.
ஸ்ப்ரே-ட்ரை முறையில் தயாரிக்கப் படும் நுண்ணிய பவுடரான அமுல்-ஸ்ப்ரே எளிதில் விரைவில் கரைகிறது. ஆகையால் அது பாட்டிலின் நிப்பின் துவாரத்தில் அடைத்துக் கொள்வதில்லை. எனவே, குழந்தை அதிக காற்றை விழுங்குவதில்லை.




**பாலஅமுல் மற்றும் வளரும் குழந்தை**
3-வது மாதத்தில் உங்கள் குழந்தைக்கு, அமுல்ஸ்ப்ரேயைத் தவிர, பாலஅமுல் தானிய உணவு தரத் தொடங்குங்கள்.
**அதிக விவரங்கட்கு இலவசமாக அமுல் குழந்தைப் புத்தகம்.**
அமுல் குழந்தைப் புத்தகத்தை இலவசமாகப் பெற த.பெ. 10124, பம்பாய் 400 001 என்னும் முகவரிக்கு எழுதுக. 50 பைசா தபால் தலையுடன் உங்கள் முழு முகவரியையும் அனுப்புக.

## அமுல்ஸ்ப்ரே
தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது.





விற்பனைக்கு விடுப்போர்: குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

ASP-AS-26

# கல்கி

ராக்ஷஸ ஆவணி 8
ஆகஸ்டு 24, 1975


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



## ராஜி-ரோஸி













தேசவிரோதிகள்
என்று தணியும்
என் சுதந்திர தாகம்?
மிஸா

# நெல்லை மாநாடு

நெல்லை தி. மு. க. மகாநாடு பல விதங்களிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது என்றாலும் சில அம்சங்களை மட்டுமே கவனிப்போம்.

மாநில சுயாட்சி கோஷம் மீண்டும் இங்கே எழுப்பப்பட்டது. முதல்வருக்கு நாம் சாணக்கியத்தைக் கற்றுத் தர வேண்டியதில்லை. ஆனால் இன்றையச் சூழலில் மாநில சுயாட்சியை வற்புறுத்துவதில் நெருப்புடன் விளையாடுகிற அபாயம் இருப்பதை உணர்கிறோம். இது தி. மு. க.வுக்கோ அல்லது தமிழகத்தின் எதிர்காலத்துக்கோ நல்லதல்ல.

கல்கி

மலர் 35

இதழ் 4

அடுத்து நமது கவனத்தை ஈர்ப்பது தி. மு. க.வின் பொருளாதாரக் கொள்கை. ஆங்கிலத்தில் 'மோர் ராயல் தேன் தி கிங்' என்று ஒரு வசனம் உண்டு. அதுபோல, மத்திய அமைச்சர் திரு சி. எஸ், 'அவசியமானால் தொழிலகங்களை அரசுடைமையாக்குவோம்' என்னும்போது, தி. மு. க., 'அவசியமானால் என்ன, அவசியம் பெரிய தொழிலகங்களை அரசுடைமை யாக்குங்கள்' என்கிறது. அனைத்தையும் அரசுடைமையாக்குவது கம்யூனிஸ சித்தாந்தம். இது தொடர்பாக 'சுயராஜ்யா' ஆசிரியர் திரு ஆர். வேங்கடராமன் எழுதியிருப்பது கவனத்துக்குரியது:

திரு டி. ஏ. பை, 'எந்தத் தனியார் துறைத் தொழிலகமாவது தனது ஆற்றலில் எழுபத்தைந்து சத வீதத்துக்குக் குறைவாக உற்பத்தி செய்து கொண்டிருந்தால் அரசு அதனைத் தட்டிக் கேட்கும்' என்றார். திரு ஆர். வி., அரசாங்கத்துக்குச் சொந்தமான சில பெரிய தொழிலகங்களிலேயே இந்த நிலை நிலவுகிறது என்று அமைச்சருக்குச் சுட்டிக் காட்டினார்.

தனியார் துறையினர் நன்றாக நடத்த முடியாத, லாபம் தராத தொழிலகங்களை அரசு ஏற்று நடத்துவது மனிதாபிமான நோக்கில் சரியாக இருக்கலாம்; ஆனால் பொருளாதார நோக்கில் சரியல்ல என்ற கருத்தும் இன்று வலுப்பெற்று வருகிறது.

இதையெல்லாம் தி. மு. க. கவனித்து, பிரத்யட்ச நோக்கில் பொருளாதாரக் கொள்கையை அமைத்துக்கொள்வது நலம்.

கல்கி ஆகஸ்டு 3உ இதழில், கலைஞருக்கு இன்று நாடு தழுவிய நோக்கு வேண்டும் என்றும் எதிர்க் கட்சிகளின் இரண்டாவது அணி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

யினரை உசுப்பிவிட வேண்டிய பணி இன்று அவருக்கு உண்டு என்றும் தலையங்கத்தில் எழுதியிருந்தோம். தி.மு.க. மகாநாடு இதற்கு இரண்டு படி மேலே போய்த் தீர்மானம் போட்டிருக்கிறது. முடிந்தால் முதல் அணித் தலைவர்களையே சந்திக்க வேண்டும் என்றும் பிறகு பிரதமரையும் பார்த்துப் பேச வேண்டும் என்றும் முதல்வரை இத்தீர்மானம் கேட்டுக் கொள்கிறது.

முதல்வரின் முயற்சி வெல்ல வாழ்த்துகிறோம்.

# சாசன மாறுதல்கள்

நமது அரசியல் சாசனத்தில் மீண்டும் மாறுதல்கள் செய்யப் பட்டுள்ளன. மேலும் பல மாறுதல்களுக்குத் தயாராகுமாறு மக்களுக்கு முன்னறிவிப்புத் தந்திருக்கிறார் திரு கோகலே. அவை சமதர்ம நோக்குடன் அமைந் திருக்க வேண்டும்.

சமதர்மம் என்பது அனைத்தையும் அரசுடைமையாக்கி ஒருவருக்கும் ஒன்றும் சொந்த மில்லை என்று கையை விரித்துவிடுவதல்ல. அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி முன்னுக்கு வர அனைவருக்கும் சம வாய்ப்புக்கள் அளித்தல், தொழில் செய்யும் சுதந்திரம், வேலை பார்க்கும் சுதந்திரம், கல்வி பெறும் உரிமை, வழிபாடு உரிமை எந்தப் பதவியையும் வகிக்க அனைவருக்கும் சம வாய்ப்புக்கள் போன்ற பல, சமதர்ம சமுதாயத்தில் இன்றியமையாதவை.

ராஜாஜி சிந்தனை

## சமுதாயத் தர்மம்

ஒப்புரவுடன் கடமைகளை ஆற்றுமாறு வற்புறுத்தும் சக்திக்குச் சமுதாய தர்மம் என நீதி நிபுணர் ஆஸ்டின் பெயர் தந்தார். இது சட்டத்தினின்று மாறுபட்டது என்றார். சட்டத்துக்குக் கீழ்ப்படியாதிருக்க முடியாது; ஆனால் சமுதாய தர்மத்தைப் புறக்கணிக்கலாம். ஆகவே, சமுதாய தர்மத்தைக் கடைப்பிடிப்பவன் அதனைச் சுதந்திர உணர்வோடு செய்பவனாகிறான். இவ்விதம் சுதந்திர உணர்வோடு கீழ்ப்படிந்து நடப்பதால் கிடைக்கும் சேவை, மக்கள் நலனுக்கு நீண்ட கால நோக்கில் பூரணமான அதிகப் பயன் தருகிறது. இது சட்டம் வற்புறுத்துகிறதே, தண்டனை கிடைக்குமே என்று எண்ணிச் செய்வதால் கிடைக்கும் பயனை விட அதிகம். இந்தியாவிலும் வேறு பல நாடுகளிலும் தர்ம ஸ்தாபனங்கள் சட்டத்தின் உத்தரவால் ஏற்பட்டதை விட அதிகமான அளவில் தார்மீக வற்புறுத்தலாலும் மக்கள் அபிப்பிராயத்தாலும் தோன்றின.

நல்ல மனிதர்களின் கருத்து, சமுதாய ஒழுக்கத்தை உருவாக்குகிறது.

சுயராஜ்யா, ஜூலை, 27, 1963.

# முருகப்பெருமான் 24

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்**

பரமேச்வரன் பச்சைப் பசேலென்று கப்பும் கிளையுமாக ஒரு மரம் மாதிரி இருந்தால் அம்பாள் ஒரு பசுங்கொடியாக அவரைச் சுற்றிக் கொண்டிருப்பாள். அவர் பட்ட மரமாக, காய்ந்த கட்டையாக இருக்கும் போது அவள் என்ன செய்கிறாள்? அப்போதும் அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். ஆனால் பச்சைக் கொடியாக இல்லை. இலையே இல்லாமல் நார் மாதிரியான கொடியாக அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். அபர்ணா, அபர்ணா என்று அவளுக்கு ஒரு பெயர். 'பர்ணம்' என்றால் இலை. இலையே இல்லாத கொடியாக இருக்கும்போது அம்பாள் அபர்ணாவாகிறாள். பர்வத ராஜகுமாரியாகப் பிறந்து ஈச்வரனைப் பதியாக அடைவதற்காக அம்பாள் தபஸ் பண்ணினபோது இலையைக் கூடச் சாப்பிடாமல், கடும் நியமத்தோடு இருந்ததாலேயே இந்தப் பெயர் உண்டாயிற்று என்று ஓர் அர்த்தம் சொல்வதுண்டு. எனக்கென்னவோ 'ஸ்தாணு'வாக ஈச்வரன் இருக்கும்போதும் அவனை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிற அம்பாள் கொடிதான் 'அபர்ணா' என்று தோன்றுகிறது.

ஈச்வரனும் அம்பாளும் இருந்தால் ஸோமாஸ்கந்தமாக அங்கே சுப்ரம்மண்யரும் இருக்க வேண்டும் அல்லவா? ஈச்வரன் 'ஸ்தாணு'வாகவும், அம்பாள் 'அபர்ணா'வாகவும் இருக்கும்போது முருகன் எப்படியிருக்கிறார்? 'விசாக'ராக இருக்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. 'சாகை' என்றால் கிளை என்று அர்த்தம். வேதத்தில் பல கிளைகள் உண்டு. அது ஒவ்வொன்றுக்கும் இன்ன வேத சாகை என்கிற பெயர் சொல்வார்கள். 'வி' என்பது பல அர்த்தங்களில் வரும். சில சமயங்களில் ஒன்றை உயர்த்திக் காட்ட 'வி' சேர்ப்பதுண்டு. உதாரணமாக, ஜயம் — விஜயம். ஆனால் 'வி'க்கு எதிர்மறை (Negative)ப் பொருளும் உண்டு. 'தவா' என்றால் புருஷனை உடையவள்; 'விதவா' என்றால் புருஷன் இல்லாதவள். இந்த ரீதியில் 'வி–சாக' என்றால் 'கிளை இல்லாத' என்று அர்த்தம். அப்பா பட்ட கட்டையாகவும், அம்மா இலை இல்லாத கொடியாகவும் இருக்கும் போது குழந்தை முருகனும் கிளையே இல்லாத கீழ்க் கன்றாக இருக்கிறார். அது பரம வைராக்கிய ஸ்வரூபம்.

சுப்பிரமணியர் பரம வைராக்கியமாக, ஞானியாக, ஆண்டியாக, தண்டாயுதபாணியாக இருக்கிறார். அவரே வள்ளி தேவஸேனா சமேதராகக் கல்யாண சுப்பிரம்மண்யராகவும் இருக்கிறார். இம்மை மறுமை இரண்டுக்கும் உதவுபவராகவும், வழி காட்டுபவராகவும் அவர் இருப்பதையே அந்த இரண்டு கோலங்களும் காட்டுகின்றன. பாமர ஜனங்களிலிருந்து தேவர் வரையில் எல்லோரையும் ஒரே போல் அநுக்கிரஹிக்கிறவர் அவர். வேடஸ்திரீயான வள்ளியை ஒரு பத்தினியாகவும், தேவராஜகுமாரியை இன்னொரு பத்தினியாகவும் கொண்டவர். பார்வதீ பரமேச்வரர்களின் கடைக்குட்டியான அவர்தான் தேவர்களில் ரொம்பவும் குழந்தை; அவரே தேவநாயகனாக இருக்கிறார். தேனாம்பேட்டையில் சுப்பிரமணிய ஸ்வாமி கும்பாபிஷேகம் நடந்தபோது, 'தேவநாயகன் பேட்டை' தான் 'தேனாம்பேட்டை' ஆயிற்றோ என்று தோன்றிற்று.

அவரை நாம் எல்லோரும் பக்தி செய்து இகபர க்ஷேமத்தைப் பெற வேண்டும். இவ்விதப் பக்தி செய்வதற்காக நம்மை நக்கீரர் 'ஆற்றுப்படுத்திய' நூல்தான் திருமுருகாற்றுப் படை. ஆற்றுப் படை உடைய முருகன் கங்கை ஆற்றில் பிறந்தவர். ஆறு தங்கிய ஜோதியான அவர் ஆறெழுத்துமந்திரமூர்த்தி; ஆறுதலைக் கொடுக்கும் ஆறுமுகர்; ஆறுபடை வீரர். அவரது வெற்றிநாளான மகா சஷ்டி துலா மாதத்தின் வளர்பிறை ஆறாம் நாள். துலா என்பது அவரது சம நிலையாம் தராசு முனையைக் காட்டுவது. ஞானத்தில் எங்கும் சமமாக இருந்து கொண்டே லோகாநுக்கிரகத்துக்காக அசுரர்களை வென்று பக்தர்களை ரட்சிப்பவர் அவர். வெளிப் பகையோடு உட்பகைவர் அறுவரையும் அழித்து நம்மை ஜோதி ஸ்வரூபமாக்குகிற சிகரஜோதி அவர். மலைகளில் எல்லாம் மணிவிளக்காக மேலே நிற்பவர் அவர். கைலாச மலையில் ஜோதிர் பொறியாய் உதித்தார்; திருப்பரங்குன்ற மலையிலும் திருத்தணிகை மலையிலும் தேவயானை, வள்ளியரை மணந்தார்; பல மலைகளில் சேனையை வகுத்தார்; கந்தமாதன மலையில் சூரனை வதைத்தார்; பழனி மலையில் ஆண்டியாய் நின்றார்; சுவாமிமலையில் ஞான மொழி பேசினார். பெரியரில் பெரியவர். நாம் சின்னஞ் சிறியர். சின்னஞ் சிறிய நாம் தானியங்களுள் சின்னஞ் சிறிய தினையைக் காட்டி அழைத்தால் அந்தப் பெரியோன் வருவான். சின்னச் சின்ன தேனீக்கள் சின்ன மலர்களிலிருந்து எடுத்த தேனை விட்டுத் தினை மாப் பிசைந்து அவருக்கு நிவேதனம் செய்தால், நமக்கு மன மலர்ச்சி என்ற தேனின் இனிமையைத் தருவார். தாவர லோகம் — இயற்கை அழகு — முழுவதற்கும் சாரமாகத் தூய பசு மேய்ந்த உணவெல்லாம் திரண்டு வந்த பசு நெய்யை மாவில் வார்த்து, ஜோதி விளக்கேற்றினால் நம் மனத் திரியிலும் அவர் ஞானச் சுடரை ஏற்றி வைப்பார்! பரமேச்வர ஸ்வரூபமான அவருக்கு, அரஹரோ ஹரோ சொல்லி நாம் பாவத்தையெல்லாம் எரித்துப் பரமானந்த ஜோதியாக இருப்போமாக!

அரஹரோஹரா!

---

**1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.**

# பொருளைக் கொடுங்கள்,

**கா**லையில் எழுந்ததுமே வீட்டில் ரகளை. பால்காரன் வரவில்லை. குழாயில் தண்ணீரும் வரவில்லை. இரண்டும் சேர்ந்து குடும்பத்தினர் ஒவ்வொரு முகத்திலும் எள்ளும் கொள்ளும் வெடித்தது : குழந்தைகள் மூலைக்கொன்றாக உட்கார்ந்து, 'காப்பி — பால்' என்று அழ ஆரம்பித்தன. மருமகள் கல்யாணி சமையற்கட்டுக்கும் வாசலுக்குமாய் நடப்பதும் கண்முன் கண்டவர்களையெல்லாம் திட்டிக் கொண்டும் தன் தலைவிதியை நொந்துகொண்டும் இருந்தாள். '' எல்லாம் என் தலையெழுத்து. இப்படி — வாடகை வீட்டில் குடியிருந்து தண்ணீருக்கும், காற்றுக்கும் ஏங்கிச் சாக வேண்டும் என்று. என்னுடன் பிறந்த இருவரும் சொந்த வீடு வாசல் என்று வாழவில்லையா? எல்லாம் என் தலைவிதி. நான் புகுந்த வீடு இப்படி இருக்கிறது.'' தனக்குள் புலம்பிக் கொண்டே தூளியை வீசி வீசி ஆட்டி அழும் குழந்தையைச் சமாதானம் செய்ய முயன்றாள். கூடத்தில் உட்கார்ந்து அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த அலமுவின் காதில் மருமகளின் பேச்சு நாராசமாக விழுந்தது.

''டேய், ராமு! ரோடு குழாயிலிருந்தாவது இரண்டு பக்கெட் தண்ணீர் கொண்டு வந்து தொலை. குளித்துவிட்டு ஒன்பது மணிக்கெல்லாம் ஆபீசிலே இருக்கணும். ஆடிட்டர் வருகிறார். நிம்மதியாகக் குளித்துச் சாப்பிட்டுவிட்டு ஆபீஸ் போகணும்னா அப்பா— சொந்த வீடு கட்டியிருக்கணும். எனக்கு அது கொடுத்து வைக்கலையே!'' — இது பிள்ளையின் இரண்டாவது சாட்டையடி.

அலமுவுக்குக் கண்ணில் நீர் நிறைந்துவிட்டது. முறத்து அரிசியில் இரண்டு சொட்டுக் கண்ணீர் விழுந்தது. ஒரு நாளைக்கு ஒரு பொழுதாவது இறந்து போன கணவரைப் பற்றிப் பிள்ளை, மருமகள், பேரன், பேத்தி உள்படக் குறை கூறாத நாளே கிடையாது. அப்படி அவர் இவர்களுக்கு என்ன துரோகம் செய்து விட்டார்? தலைமை குமாஸ்தா உத்தியோகத்தில் கல்யாணம் செய்து வைத்தார். கௌரவமாகக் குடும்பம் நடத்தி வந்தார். தமக்கென்று அவர் எதையுமே செய்து கொள்ளவில்லை. ஹோட்டலுக்குக் காலணா செலவு பண்ணமாட்டார். பகல் டிபனுக்கு அலமு கட்டிக் கொடுக்கும் சாதத்தைச் சாப்பிடுவாரே தவிர, டிபனுக்கென்று செலவு பண்ண மாட்டார்.

''கூடியவரையில் வேட்டியைத் தோய்த்துக் கட்டுவார். ஒரு சினிமா, நாடகம் என்று போகமாட்டார். அப்படித் தனக்கென்று வாழாமல் குழந்தைகள் குடும்பம் என்று வாழ்ந்தவர். இப்பொழுது பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் அவர் இன்னும் வீடு வாசல் என்று சம்பாதித்து வைக்கவில்லையே என்ற குறை. ஒரு சமயம் அலமு நினைத்துக் கொள்வாள். இவர்கள் தங்கள் குழந்தைகளுக்குச் சம்பாதித்து வைப்பதைப் பார்த்துவிடுகிறேன்' என்று.

ஆனால் அவர்களைச் சொல்லியும் குற்றம் இல்லை. காலம் மாறிக் கொண்டு வருகிறது. எத்தனை பணம் வந்தாலும் போதவில்லை. மூத்த பெண்ணின் மகளுக்குக் கல்யாணம். பிள்ளை வீட்டுக்காரர்கள் இருபது பவுன் நகை போட வேண்டும் என்று கேட்கிறார்கள். கைவசம் பணம் இல்லை.

''அம்மா, அந்தக் காலத்திலே பவுன் இருபத்தைந்து ரூபாய் வித்துதாமே. அப்போ நீ ஒரு பவுன் மாலை போட்டுக் கொண்டிருக்கக் கூடாதா அம்மா. இப்போ நானூறு ரூபாய் விற்கிறதே !'' என்றாள் பெண்.

இதற்கு என்ன பதில் சொல்வது ? நகை நட்டு சேர்த்து வைக்கவில்லை. எல்லோருக்கும் இருக்கும் ஒரே குறை — அப்பா பணம் சேர்த்து வைக்கவில்லை....

நினைத்துப் பார்த்தால் நிம்மதியே இல்லை. அலமு யோசனையில் மூழ்கி உட்கார்ந்திருந்தாள். பொழுது போனதே தெரியவில்லை. முறத்திலிருந்த அரிசியில் திரும்பத் திரும்பக் கல்லைப் பொறுக்கிக் கொண்டேயிருந்தாள்.

பேரன் பாலு, பேனாவைத் தொலைத்துவிட்டு வேறு பேனா வேண்டும் என்று அழுகிறான். மருமகள் வந்த கோபத்தில், ''ஒரு



ஜி. கே. பொன்னம்மாள்

# அன்னைப் பெறுங்கள்!

பேரு வாங்கவே கஷ்டமாயிருக்கு. தினம் ஒரு பேரு வாங்க இங்கே பணம் கொட்டிக் கிடக்கிறதா ?'' அவன் முதுகில் இரண்டு அறை விழுகிறது. குழந்தை 'ஓ'வென்று அழுகிறான். சமையற்கட்டில், ''சமையல் நன்றாகவே இல்லே. இந்த வேகாத கறியும் தண்ணீர்க் குழம்பையும் நீயே சாப்பிடு.''

பின்னே தட்டை உதறிவிட்டு எழுந்துவிட்டான். அவன் சாப்பிடாமல் டிபனும் எடுத்துக் கொள்ளாமல் ஆபீசுக்குக் கிளம்பிவிட்டான். கல்லூரியில் படிக்கும் பேத்தி பாட்டியிடமே, ''பாரு பாட்டி ! என் தாவணி யெல்லாம் கிழிந்து விட்டது. அம்மாகிட்டே சொன்னா திட்டறா. அப்பா காதிலே போட்டுக்க மாட்டேன் என்கிறார். நான் இப்படிக் கந்தல் தாவணியோட கல்லூரிக்குப் போனால் எல்லாரும் சிரிப்பார்கள்.'' — கண்ணைக் கசக்கிக் கொண்டே போய்விட்டாள். அவளுக்கு என்ன பதில் சொல்லுவது ? 'இந்தாடி, ஐம்பது ரூபாய். தாவணி வாங்கிக்கோ' என்று சொல்ல வக்கில்லையே. வழக்கப்படி நாமும் அவர் சம்பாதித்து வைக்கவில்லையே என்று குறை சொல்லலாம். வேறு என்ன செய்ய முடியும் ? எத்தனையோ தடவை அவரிடம் இது விஷயமாகப் பேசியிருக்கிறாள். 'ஏதாவது கொஞ்சம் பணம் என் பேருக்குப் பாங்கியிலே போடுங்களேன்' என்று. அவர் கடகடவென்று சிரிப்பார். 'இதோ பாரு, அலமு! நீ ஒண்ணுக்கும் பயப் படாதே. நான்உன்னை அப் படி விட்டுவிட்டுப்போகமாட்டேன். உன்னைப் பூவோட பொட்டோட, ஜாம் ஜாம் என்று அனுப்பிச்சுட்டுத்தான் நான் போவேன். தவிரவும் உனக்கு நம் குழந்தைகள்தான் சொத்து. மூத்தவன் பாலு கெட்டிக்காரன். நல்ல உத்தியோகத்திலே வந்திடுவான். இரண்டாமவன் புத்திசாலி. இப்பவே அவன் பேசற பேச்சுக்குப் பதில் சொல்ல முடியவில்லே. அவன் ஒவ்வொரு கேள்வியும் அவ்வளவு அழகா ஆணித்தரமாயிருக்கு. அவன் ஒரு கம்பெனிக்கு மானேஜரா வரப் போகிறான், பாரு. இரண்டு பிள்ளைகளும் உன்னை எப்படி வைத்துக் கொள்ளப் போகிறார்கள் என்று பாரு. பெண்களுக்குக் கல்யாணம் ஆயிடுத்து. அவர்களைப் பற்றிக் கவலை இல்லே'' என்று சொன்னவர் திடுதிப்பென்று கண்களை மூடிவிட்டார். அவர் பாக்கியசாலி, யாருக்கும் தொந்தரவு கொடுக்காமல், பேச்சு வாங்காமல் போய்விட்டார்.

மூத்தவன் பாலுவிடம்தான் அலமு தங்கியிருக்கிறாள். பாலு நல்லவன்தான். தாயிடம் அன்பு இல்லாதவன் அல்ல. அந்த அன்பில் குறையும் சொல்ல முடியாது. அவன் குடும்பம் பெருகிவிட்டது. அவனுக்கு உடம்பில் தெம்பும் குறைந்து விட்டது. எதற்கெடுத்தாலும் கோபம் வருகிறது. யாரிடம் கோபித்துக் கொள்வது? கடல் அலைகள் திரும்பத் திரும்பக் கரையில் வந்து மோதுவது போல் பெற்ற தாயிடம்தான் மோதிக் கொள்ள முடியும். இளையவன் பம்பாயில் இருக்கிறான். பணக்கார இடத்தில் பெண் எடுத்து மாமனார் வீட்டு மருமகனாக பம்பாய்க்கே போய்விட்



டான். கட்டடம் கட்டுவதற்குத்தான் சாரம் தேவை. கட்டட வேலை முடிந்துவிட்டால் அந்தச் சாரக் கொம்பைத் தூக்கி எறிந்துவிடுவார்கள். பிறகு அந்தக் கொம்புகளைப் பற்றி யாரும் நினைப்பதே இல்லை. அந்த மூன்று மாடிக் கட்டடத்தைப் பார்த்து அந்தச் சாரக் கொம்பு — இந்தக் கட்டடம் இத்தனை அழகாக வளருவதற்கே நான்தான் காரணம்'' என்று சொல்லுவது போல்தான் — என் பிள்ளை இன்று இத்தனை பெரியவனாக நல்ல நிலையில் இருப்பதற்கு நான்தான் காரணம் என்று தாய் பெருமைப்பட்டுக் கொள்வது — இந்த உலகுக்குத் தாயைத் தெரியாது. பிள்ளையின் வளர்ச்சிதான் தெரியும். இதையெல்லாம் நி னை க் க நினைக்கக் கரிப்பாக வந்தது அலமுவுக்கு.

கடைசிப் பெண் மாலதி கெட்டிக்காரி. கல்கத்தாவில் இருக்கிறாள். ஒரே பிள்ளை. கணவன் நன்றாகச் சம்பாதிக்கிறான். அவளும் தையல் வகுப்பு — பஜன் வகுப்பு — ஹிந்தி வகுப்பு — என்று வீட்டிலேயே வகுப்புக்கள் வைத்துச் சம்பாதிக்கிறாள். விதம் விதமான புடவை. புதுப் புது நகைகள் என்று ஒளிவிடுவாள். வருஷத்துக்கு ஒரு முறை பிறந்த வீட்டுக்கு வருவாள்.

அன்று காலையிலிருந்தே அலமுவுக்குத் தலை வலியும் ஜுரமுமாக இருந்தது. படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே முடியவில்லை. பின் ளைக்குச் சாதம் போடும்போது மருமகள் சொன்னாள்: ''அம்மாவுக்கு உடம்பு சரியில்லை. ஜுரம். டாக்டர்கிட்டே...''—அவள் பேச்சை முடிக்கவில்லை. பிள்ளை குறுக்கிட்டு, ''எல்லாம் அஜீரணமாக இருக்கும். நேற்று ஜாங்கிரி பண்ணினையே, அதில் நாலைந்து சாப்பிட்டிருப்பாள். நெய் உடலுக்கு ஒத்துக்கலை. சுக்குக் கஷாயம் போட்டுக் கொடு. இன்னிக்கு லங்கணம் போடு. எல்லாம் சரியாய்ப் போயிடும். இந்த மாசக் கடைசியிலே டாக்டருக்குக் கொடுக்க என்கிட்டே பணம் இல்லே.'' என்று எரிந்து விழுந்தான்.

பாலுவா இப்படிப் பேசுகிறான்? அலமுவால் நம்பவே முடியவில்லை. ஜாங்கிரி போன்ற நெய்ப் பலகாரங்களை மருமகள் எப்பவுமே ஒன்றுக்கு மேல் கொடுக்கமாட்டாள். உடம்புக்கு ஆகாது என்று காரணம் காட்டி விடுவாள். எத்தனை ஆசையாக இருந்தாலும், விருப்பம் போல் சமையல்கட்டுக்குப் போய் எடுத்துச் சாப்பிடுவது என்பது நினைக்கக்கூட முடியாத காரியம். மருமகள் கொடுத்தால் தான் உண்டு.

இந்த நிலைமை எப்படி எதனால் ஏற்பட்டது? வீட்டுக் காரியங்களிலெல்லாம் முன்போலத் தலையிட்டு நடத்த முடியவில்லையே! ஒரு டிபன் பண்ணக்கூட மருமகளிடம், ''கல்

□□□□ □□□ □□□ □□□ □□□□

## ஆயிரம் விஷயங்களில் ஆறு!



- வெட்டுக் கிளிகளின் இரத்தம் வெண்மையாக இருக்கும்.
- ஏழு பவுண்டு எடையுள்ள ஒரு காட்மீன் ஒரே சமயத்தில் 70 லட்சம் முட்டைகள் இடும்.
- நீர்க் குதிரைகளில் ஆணின் வயிற்றில் ஒரு பை இருக்கும். பெண் இடும் முட்டைகளை அதில் வைத்து ஆண்தான் அடை காக்கிறது.
- ஒட்டகம் இறந்து கிடக்கும் மற்றொரு ஒட்டகத்தைப் பார்த்தால் அதிர்ச்சியில் தானும் உயிரை விட்டுவிடும்.
- சிங்கத்தின் வாலில் இருக்கும் மயிர்க் கற்றையைத் தேர்ச்சியிருந்து விலக்கிப் பார்த்தால் நுனியில் ஆணி போல் பலமான ஒரு நகம் இருக்கக் காணலாம்!
- ஆண் சிலந்தியுடன் கொஞ்சிக் குலவிய பின்பு பெண் சிலந்தி ஆண் சிலந்தியைத் தன் மார்பில் அணைத்தவாறே அழுத்திக் கொன்று தின்று விடுகிறது.

(எஸ். சங்கர், தொகுத்த அறிவு வளர்ச்சிக்கு ஆயிரம் விஷயங்கள் என்ற நூலிலிருந்து)
—ப. ஜெயராஜா



சர்ச்சில் ஒருநாள் சட்டை தைத்துக் கொள்ள எண்ணித் துணியை எடுத்துக் கொண்டு தையற்காரனிடம் சென்றார். அவன் இத்துணி ''உங்களுக்குப் போதாது. இன்னும் அரை மீட்டர் வேண்டும்!'' என்றான். அதே துணியைப் பக்கத்துத் தையற்காரனிடம் எடுத்துச் சென்றார். அவன் துணியை வாங்கி வைத்துக்கொண்டு ஒரு வாரம் கழித்துவரும்படி கூறினான். ஒரு வாரம் கழித்து வந்த சர்ச்சில் தம் சட்டைத் துணியைப்போல் தையற்காரனது மகனின் சட்டையும் இருப்பதைப் பார்த்து ''என்னப்பா, என் துணியில் உன் பையனுக்கும் சட்டை தைத்து விட்டாயா?'' என்றார். ''கொஞ்சம் துணி மீதி இருந்தது. தைத்து விட்டேன்'' என்று கூறினான் தையற்காரன்.

தம் புதிய சட்டையை எடுத்துக் கொண்டு பக்கத்துத் தையற்கடைக்குச் சென்று ''பார்த்தாயா, பக்கத்துக் கடைக்காரன் எனக்கும் சட்டை தைத்து தனது ஐந்து வயது மகனுக்கும் சட்டை தைத்திருக்கிறான்'' என்றார்.

அதற்கு அந்தத் தையற்காரன் ''எனக்கு ஐந்து வயதில் மகன் இல்லை; இருபது வயதில் அல்லவா மகன் இருக்கிறான்!'' என்றான்.

— எஸ். சந்திரசேகர்

# காயங்கள் வெவ்வேறு உருவங்களிலும் அளவுகளிலும் ஏற்படுகின்றன.

# ஆகையால் அவற்றுக்கேற்ப வருகின்றன, புதிய 'பாண்டு-எய்ட்'* டிரஸ்ஸிங்குகள்.






காயங்களால் தொற்று நோய் பரவக்கூடும். எனவே, புதிய பாண்டு-எய்ட் * டிரஸ்ஸிங் பயன்படுத்தி, அவற்றைப் பாதுகாருங்கள். இப்போது அவை வெவ்வேறு உருவங்களிலும் அளவுகளிலும் கிடைக்கின்றன 5 எண்ணிக்கை கொண்ட ஸ்ட்ரிப்புகளில் வசதியாக வருகின்றன.

பாண்டு-எய்ட் * டிரஸ்ஸிங்கைப் பயன்படுத்தி முன் ஜாக்கிரதையுடன் இருங்கள். எப்பொழுதும் சில டிரஸ்ஸிங்குகள் கைவசமிருக்கட்டும்.




Johnson & Johnson®




மகன் (தந்தையிடம்) :
அந்த நாளிலும் பஞ்சம்தானா
அப்பா ?

யாணி, இன்னிக்கு அடைக்கு நனைக்கட்டுமா?'' என்று கேட்டால், 'வேண்டாம், அம்மா. மாசக் கடைசி. துவரம் பருப்பு இல்லே. பேசாமே அரிசி உப்புமா பண்ணி ஒரு சட்னி பண்ணிவிடலாம்'' என்பாள். அப்படிச் சின்ன விஷயங்களுக்குக்கூட முடிவு எடுக்கத் தனக்கு உரிமை இல்லாமல் போய்விட்டதே. சே, சே. எல்லாம் வெளி வேஷம். அன்பு, பாசம், பிணைப்பு எல்லாமே பணத்தில்தானா? இந்த உரிமை பறி போனதற்குக் காரணம் பணம் தானோ ?

அலமுவுக்குத் தலைவலி மண்டையைப் பிளந்தது. ஒரு தலைவலி மாத்திரை வாங்கக் கூட மருமகன் தயவுதானே வேண்டும் ? மெதுவாக எழுந்து, தனது பழைய தகரப் பெட்டியைத் துழாவினாள். பழநி விபூதி. இரண்டு நார்ப்பட்டுப் புடவை. அவர் படித்துக் கொண்டிருந்த 'கீதை'ப் புத்தகம் அவர் மூக்குக் கண்ணாடிக்கு இதைத் தவிர வேறு எதுவுமே இல்லை. ஏதோ நினைவில் அவர் கண்ணாடிக்கூடைத் திறந்து பார்த்தாள். இந்தக் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு தானே அவர் பத்திரிகை படித்துக்கொண்டே சிரிக்கச் சிரிக்கப் பேசுவார். அவர் முகம் நினைவுக்கு வந்து அவள் கண்களில் நீர் நிறைந்தது. 'இப்படி நாலணா எட்டணா தேட வைத்து விட்டீர்களே' என்று ஒரு கணம் நினைத்தாள். மறுகணம் 'சீ, நாமும் அப்படி நினைக்கக் கூடாது' என்று அந்த எண்ணத்தை ஒதுக்கிவிட்டுத் தூசு படிந்திருந்த கண்ணாடியைத் துடைக்கக் கண்ணாடிப் பெட்டிக்குள் இருந்த மஞ்சள் துணியை எடுத்தாள். அதற்கடியில் ஒரு ரூபாய் நோட்டு இருந்தது. அலமுவுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை.

அன்று கூடத்தில் உட்கார்ந்து காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தாள் அலமு. பம்பாயிலிருந்து பிள்ளை, கல்கத்தாவிலிருந்து பெண் எல்லோரும் வந்திருந்தார்கள். மார்க்கெட்டுக்குப் போன பிள்ளை பாலு மகிழ்ச்சியுடன் ஓடி வந்து, ''நீ லாட்டரிச் சீட்டு வாங்கினையே. உன் அதிருஷ்டம் லட்சம் ரூபாய் பரிசு விழுந்திருக்கிறது. இதனாலே நம்ப பிராப்ளம் எல்லாம் தீர்ந்தது.'' என்று குதித்தான். ''அம்மா, உனக்கு லாட்டரியிலே பிரைஸ் கிடைச்சது உன் பெண் வஸந்தியின் அதிருஷ்டம்தான். மாப்பிள்ளை வீட்டார் கேட்டபடி நகைகளைப் போட்டு ஜாம் ஜாம் என்று கல்யாணத்தை நடத்திவிடலாம்'' என்று சந்தோஷப்பட்டாள்.

பம்பாய்ப் பிள்ளை, ''என் கார் ரொம்பப் பழசாயிடுத்து. ஒரு புது வண்டி வாங்கணும் என்று நினைச்சுக்கிட்டிருந்தேன். இப்போ அம்மா தயவிலே அது நடந்துடும்'' என்றான். ஆக வீட்டில் ஒரே சந்தோஷம். ஒரே கும்மாளம். 'லட்சம் ரூபாயை எப்படிச் செலவிடலாம்?' என்று நினைத்துப் பேசிக் கும்மாளம் போட்டார்கள் மற்றவர்கள். ஆனால் அலமு மட்டும் சிரிக்கவில்லை. மகிழவும் இல்லை.

**ம**று நாள் காலை மாமியாருக்கு ஸ்பெஷல் காப்பியுடன் — கூடத்துக்கு வந்த கல்யாணி படுக்கையில் மாமியாரைக் காணாது அதிர்ந்து போனாள். அம்மா எங்கே? எங்கே? எத்தனையோ குரல்கள் கூடத்தில் எதிரொலித்தன. மடித்து வைத்த ஜமுக்காளத்தின் அடியில் இருந்த கடிதம் இதற்குப் பதில் சொல்லிற்று :

''அன்புள்ள பாலுவுக்கு, அம்மா எழுதியது- எனக்குக் கிடைத்த லட்சம் ரூபாய் எனக்குக் கிடைத்ததல்ல. இது உங்கள் அப்பாவின் சம்பாத்தியமாகக் கொள்ளவும். காரணம் அவர் மூக்குக் கண்ணாடிப் பெட்டியில் என்றோ வைத்திருந்த அவர் சம்பாத்தியமான ஒரு ரூபாயில் நான் வாங்கியதுதான் அந்த லாட்டரிச் சீட்டு. ஆக வாழ்க்கையில் எனக்கு இருந்த ஒரே குறை நீங்கியது. அப்பா சம்பாதித்து வைக்கவில்லையே என்று நீங்கள் குறைப்பட்டுக்கொள்ளும்போது எனக்கு அது வேதனையாக இருந்தது. அந்த வேதனை இப்பொழுது நீங்கிவிட்டது. உலகத்தில் பாசத்தைவிட, அன்பைவிட, உறவைவிட உயர்ந்தது பணம் என்கிற இந்தக் காலத்துத் தத்துவம் உன் அப்பாவுக்குப் புரியவில்லை. உன் அப்பாவைப் போன்ற எத்தனையோ பேர்களுக்கும் புரியவில்லை. அவர்கள் புரியாமல் செய்த பிழையை நான் உணர்ந்தேன். ஏதாவது கிடைக்காதா என்று ஏங்கினேன். உங்க அப்பாவே அதற்கு வழி வகுத்தது போல் — அவர் பணமே எனக்கு உதவியது. நீங்கள் எல்லாரும் பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். நான் இனி மேல் நிம்மதியாக, குறை இல்லாதவளாக, கணவர் சம்பாதித்து வைத்திருக்கிறார் என்று நிமிர்ந்த தலையுடன் குடும்ப வாழ்க்கைச் சமுத்திரத்திலிருந்து சற்று ஒதுங்கிக் கோயில் குளம் என்று போகிறேன். என்னைத் தேட வேண்டாம். என் தங்கச் சங்கிலியை விற்றுப் பணம் எடுத்துக் கொள்கிறேன். எங்கிருந்தாலும் உங்களை வாழ்த்திக் கொண்டிருப்பேன். எனக்குப் பணம் தேவை இல்லை. அன்புதான் தேவை. நான் அந்தக் காலத்து மனுஷி. அதை மனத்தில் கொண்டு கூடிய அளவு பணத்தைச் சேர்த்து வைத்து உங்கள் குழந்தைகளிடமிருந்து அன்பைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

அம்மா.''

கடிதத்தைப் படித்துவிட்டு அந்தக் கூடத்திலிருந்த இந்தக் காலத்து மனிதர்கள் கண்ணீர் விட்டார்கள். அன்புக்கு அந்தக் காலம், இந்தக் காலம் என்ற பாகுபாடு கிடையாதே !

நான் வணங்கும் மனித தெய்வம்-4.

# இடுக்கண் களைந்தவர்...

**''உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு'' — திருக்குறள்**

என் தந்தை காலமானபோது எனக்கு இருபத்திரண்டு வயது. என் தாய், திருமணமாகிவிட்ட இரு சகோதரிகள், ஒரு மூத்த சகோதரன், மூன்று தம்பிகள், இரு தங்கைகள் அடங்கிய என் குடும்பத்தில் அப்போது நானும் என் அண்ணனும் மட்டுமே சம்பாதித்துக் கொண்டிருந்தோம். சென்னையில், நானும் என் அண்ணனும் செலவு போக மிச்சமிருக்கிற பணத்தை மாயவரத்தில் வசித்து வந்த என் தாய்க்கு அனுப்புவோம்.

என் தாய் நாங்கள் அனுப்புகிற பணம் போதாமல் குழந்தைகளுடன் மாயவரத்தில் கஷ்டப்பட்டாள். கடன் வாங்கிச் சமாளித்து வந்தாள்.

சிறுகச் சிறுகக் கடன் ஆயிரக்கணக்கில் பெருகி விட்டது. அநியாய வட்டி வேறு.

என் அண்ணன் சற்று முன்கோபக்காரர். மேலும் திருமணமானவர். ஆகவே, அவருக்கு அதிகப் பணம் கேட்டு எழுத என் தாய் பயந்து கொண்டு ரகசியமாக எனக்கு எழுதுவாள். நானும் என்னால் முடிந்தவரையில் கடன் வாங்கி அனுப்பி வந்தேன்.

எனக்கு அப்போதெல்லாம் அடிக்கடி பணம் கொடுத்து உதவிய என் அலுவலக சக ஊழியர் எஸ். கிருஷ்ணமூர்த்தியின் புகைப் படம்தான் இன்று என் வீட்டில் பூஜை அறையில், மற்ற தெய்வங்களின் படங்களுடன் இடம் பெற்றிருக்கிறது.

தொடக்கத்தில் ஐம்பது நூறாக இருந்து ஒரு சமயத்தில் அவர் எனக்கு அளித்திருந்த கடன் ஆயிரக் கணக்கில் பெருகி விட்டது. வட்டி வாங்க மாட்டார். ஒரு நாள் அம்மா எழுதிய கடிதத்தில் உடனடியாக ஐந்நூறு ரூபாய் அனுப்பாவிட்டால் குடும்பத்தின் மானமே பறிபோய்விடும் என்றிருந்தது. என் நண்பரை அளவுக்கு மேல் கசக்கிப் பிழிய எனக்கு விருப்பம் இல்லாததால், வேறு வழியின்றி வேலையை உடனடியாக ராஜினாமா செய்ய முடிவு எடுத்தேன். பிராவிடெண்டு பண்டு பணத்தில் கடனை அடைத்து விட்டு வேறு வேலை பார்த்துக் கொள்ளலாம் என்பதே என் எண்ணம்.

என் நண்பருக்குத் தெரியாமல் ரகசியமாக நான் எழுதிய ராஜினாமாக் கடிதம் பற்றி எப்படியோ அவர் அறிந்து கொண்டு என்னிடம் ஓடி வந்தார்.

''ஏண்டா, உனக்கு அறிவே கெட்டுப் போய்விட்டதா? உனக்கு உடனடியாகப் பணம்தானே வேண்டும்? நான் தருகிறேன். முதலில் ராஜினாமாக் கடிதத்தைக் கிழித்தெறி'' என்று கடிந்து கொண்டதோடு தேவைப்பட்ட பணத்தையும் கொடுத்து உதவினார்.

கால ஓட்டத்தில் என் தம்பிகள் சம்பாதிக்கத் தொடங்கி, எங்கள் குடும்பக் கஷ்டங்களும் தீர்ந்தன. நண்பருடைய கடனைத் தீர்த்தேன். பணக் கடனைத்தான்; அன்புக் கடன் பட்டுள்ளேன் இன்றும்.

1966ல் மீண்டும் ஒரு சோதனை. எனக்கு அப்போது திருமணமாகி ஒரு மகனும் இருந்தான். என் மனைவி எட்டு மாதக் கர்ப்பிணி. நான் வசித்து வந்த வாடகை வீட்டை, வீட்டுக்காரருடன் ஏற்பட்ட மனஸ்தாபத்தில் உடனடியாகக் காலி செய்யும்படி நேரிட்டது. வேறு வீடும் கிடைக்கவில்லை.

மீண்டும் என் மனித தெய்வம் கை கொடுத்து உதவியது. அவருக்கு மந்தைவெளியில் சொந்த வீடு. என் நெருக்கடியைக் கேள்விப்பட்டதும் அவர், ''உன் அதிருஷ்டம், என் வீட்டு மாடியில் வசித்தவர் காலி செய்து விட்டார். இன்று மாலையே உன் குடும்பத்தை அழைத்துக்கொண்டு அங்கு வந்து தங்கிக்கொள். எப்போது உனக்கு வீடு கிடைக்கிறதோ, அப்போது போய்க் கொள்ளலாம்!'' என்றார்.

''கிருஷ்ணமூர்த்தி! என்னால் இருநூற்றைம்பது ரூபாய் வாடகை கொடுக்க முடியாதே.''

''வாடகையா? ஒரு பைசாக்கூட உன்னிடமிருந்து வாங்க மாட்டேன். ஆபத்துக்கு உதவாத நண்பனாக இருக்க நான் விரும்பவில்லை. உதவுகிற ஆப்தனாக இருக்கவே ஆசைப்படுகிறேன்.''

என் கண்கள் அவர் கூறியதைக் கேட்டதும் குளமாகின. இரண்டு மாதங்கள் அவர் வீட்டில் வாடகை கொடுக்காமல் தங்கிவிட்டுப் பிரிந்தபோது அவர் காலில் நானும் என் மனைவியும் விழுந்து எழுந்தோம். மூத்தவர் என்பதற்காக மட்டுமல்ல; தெய்வமாக எனக்குத் தோன்றியதால்தான். — ஆர். வைத்தியநாதன்



# பக்தி மலையில் பத்துச் சிகரங்கள்

நாவைச் சுருதியுடனும், விரலை லயத்துடனும், உயிரை இறைவனிடமும் இசைவிப்பதாலேயே சங்கீதத்தை இசை என்கிறோம். அதோடு, இசையின்பமானது அதனை ரசிப்போரையும் பரஸ்பரம் இசைவிப்பது சாதாரண அனுபவம் ஆகும். இப்படிப்பட்ட மக்களின் இசைப்பை, பரத கண்டம் முழுவமாகப் பரப்பி அசாதாரண அனுபவத்தை உண்டாக்கி விடுகிறது ஸ்ரீமதி எம்.எஸ்ஸின் கண்டத்திலிருந்து தோன்றியுள்ள புது இசைத்தட்டு.

பாரதத்தின் வடக்கே இமயம் சூழ்ந்திருக்கிறது எனில், இத்தேசம் முழுதுமே அநாதி



காலமாக பக்தி எனும் இமயத்தில் மக்கள் சஞ்சரித்திருக்கிறார்கள். இந்த இமாசலத்தின் கொடு முடிகளை எட்டிப் பிடித்த பக்த சிகாமணிகள் பலர் தங்கள் அனுபவத்தைக் கீதமாக்கித் தந்திருக்கிறார்கள். அவற்றில் பத்துச் சிகரங்களில் உலவும் பேறு இவ்விசைத் தட்டின் வழியே நமக்குக் கிடைத்திருக்கிறது. தேசிய ஒருமைப்பாட்டைப் பக்தி கானத்தின் மூலமே அநாயாசமாகச் சாதிக்க முடியும் என்று அறுதியிட்டு உறுதிப்படுத்தும் அரிய இசைத்தட்டு.

ஆன்ம நெறியில் பாரதத்தை ஒன்றுபடுத்திய மகாபுருஷர் ஆதிசங்கரரின் அருள்வாக்கோடு இசைத்தட்டு மலரத் தொடங்குகிறது. 'கோபாலம்' என்று எம்.எஸ்ஸின் ஜீவ சக்தி துளும்பும் காந்தக் குரல் ரீங்கரிக்கத் தொடங்கும் போதே, கோபாலன் நாடு முழுவதையும் பாலிப்பான் என்ற மங்கள உணர்வு உண்டாகிறது. அதையொட்டி கோபாலனின் லீலைகளைக் கூறும் சதாசிவப் பிரம்மேந்திரர்களின் ''பஜரே யது நாதம்.''

பாரத மொழிகள் பத்தில் அமைந்த இந்த இசைத்தட்டு, நம் பண்பாட்டின் அன்னையாம் சம்ஸ்கிருதத்துடன் தொடங்கி, இன்று தேசிய மொழியாக உள்ள ஹிந்திக்குத் தவழுகிறது. அன்று மீரா பாடி, இன்று ஸ்ரீமதி இந்திரா தேவி தம் பரவச நிலையில் ரசித்துத் தந்த 'ஹரி மை தோ' என்ற நெஞ்சையள்ளும் பாடல், தேஷ் ராகத்தில் பலே பேஷாக வடிகிறது.

'வைஷ்ண ஜனதோ'வை அளித்த மகான் நரஸி மேதாவின் 'நாராயணனு' என்ற குஜராத்திப் பாடல் இலங் ராகத்தில் குலுங்கி வந்து நம் இதயத்தே இலங்கி விடுகிறது. அந்த நாரணன் பாதத்திலிருந்து பொசியும் கங்கா தேவியை வங்காள மொழி கொண்டு த்விஜேந்திரலால் ராய் போற்றினார். பாரத மக்களை எல்லாம் இணைக்கும் பாகீரதியின் பாவனப் பெருமைகளைச் சொல்லி, அந்திமத்திலும் அவளது அலையொலியிலேயே தம் ஜீவன் முழுக வேண்டும் என்று அவர் முறையிடுவது எம். எஸ்ஸின் குரலில், கேட்போர் உள்ளம் கரையும் வண்ணம் வெளிவருகிறது.

அந்திமத்திலும் அவனே கதி என்பதைத் தமது மடியிலேயே மரித்த குழந்தையை வைத்துக் கொண்டு கதறிப் பாடினார் மலையாள மகா பக்தர் பூந்தானம். 'கண்டு கண்டு' என்று தொடங்கும் அப்பாடலைக் கேட்டுக் கேட்டுக் கசியவே எந்த பக்த மனமும் விழையும். 'கிருஷ்ண கிருஷ்ண முகுந்தா ஜனார்த்தன' என்ற வரிகளைக் கோஷ்டி கானமாகப் பாடியிருப்பது நம் உணர்வையே ஒரு தூக்குத் தூக்கிவிடுகிறது.

இனி இசைத்தட்டின் மறுபுறத்துக்கு வருகிறோம். கவிசிரேஷ்டரான மிர்ஸா காலிப் இயற்றிய கஜலில் தொடங்குகிறது. மொழி உருது. பழகாதவருக்கு மிக இடரலான வல்லினம், மெல்லினம் நிறைந்த பாஷை; திட்டவட்டமாகப் புரியாத பண் ஒருபுறம்; 'கஜல்' என்ற பாமுறையும் பல காலம் ஊறித் திளைத்தவருக்கே கைவருகிற கலை; பாட்டின் பொருளைப் பார்த்தாலோ சிருங்காரத்தையும் — ஞானத்தையும், சேர்த்துப் பிசைந்திருக்கிறது! இப்படிப்பட்ட ஒரு பாடலை ஸ்ரீமதி எம். எஸ். தேர்ந்த கஜல் விதுஷி போலப் பரிமளிக்கப் பாடியிருக்கிறார் எனில் அது அவரது அயராத சிரத்தைக்கும், அந்தரங்க ஈடுபாட்டுக்கும், மாணாக்க மனப்பான்மைக்கும் கிடைத்த வெற்றி என்றே சொல்ல வேண்டும். நீள நீள வீசி அடங்கும் மெல்லலைகளின் மீது அன்னப் படகில் ஏறிச் செல்வது போன்ற சாந்த சௌக்கிய உணர்வை அல்லவோ உண்டாக்கிவிடுகிறார்?

போபாலியாகிற மோகன ராகத்தில் நம்மை மோகிக்கச் செய்கிறது, ஏகநாதரின் 'ஹரி போலா' என்ற மராத்திப் பாடல். நரஸிமேதா சகலத்தையும் விட்டு விட்டு நாராயணனை பஜிக்கச் சொன்னார். இங்கே ஏகநாதரோ சகலத்தையும் ஹரி ஹரி என்று சொல்லிக் கொண்டு ஹரியின் லீலையாக அநுபவித்து மகிழும்படி உபதேசிக்கிறார்.

அடுத்து, மாசு மருவற்ற கமாஸில் கண்ணனைப் பற்றிய கன்னடப் பாடல். முதலில் விருத்தம், பிறகு கீதம். முற்றிய பிரேமையில் தன்னையே கண்ணனாக எண்ணிக் குழலூதும் சிற்ப நங்கையைக் கண்டு, 'இதென்னம்மா வேஷம்?' என்று கவி கேட்கும் பாடல். முடிவில் உலகமே வேஷமாகிறது. ஆசை, நிராசை யாவும் ஓய்கின்றன. குழலோடு குழைந்துவிடுகிறார் கவி, இன்று நம்மிடை வாழும் புண்ணிய புருஷர் டாக்டர் டி. வி. குண்டப்பா. நம்மையும் அப்படிக் குழைந்து விடுகிறார் எம். எஸ்.

பிறகு செம்மையுடன் சுருண்டு வருகிறது செஞ்சுருட்டி. அநாமதேயப் பாவாணர் ஒருவர் இயற்றி, ஆயிரங் காலப் பயிராகப் பக்தர்களின் நாவில் புரண்டு வரும் 'வாஸுதேவ கமலாஸன' என்ற தெலுங்குப் பத்தியம் நலுங்காமல் வந்து நம் செவியில் நலம் பொழிகிறது. இங்கே, ஸ்ரீ காரைக்குடி மணியின் மிருதங்கம் தங்கமணியாக முழங்கிக் கண்ணனின் நாட்டிய கதிகளையெல்லாம் கொட்டுகிறது!

இசைத்தட்டின் முடிவாக, நிறைவாகத் தமிழன்னையின் அருமைப் புதல்வன் பாரதி, அன்னை பராசக்தியைப் பராவியதைப் பக்தியும் களிப்பும் கலந்து மோதும் பண்ணில் கேட்டு மகிழ்கிறோம். நெஞ்சுக்கு நீதியும், தோளுக்கு வாளும், நாவுக்கு வெள்ளமென அவள் நாமமும் கிட்ட வேண்டுமெனப் பிரார்த்திக்கிறோம். தார ஸ்தாயியில் 'சக்தி வேல் சக்தி வேல் சக்தி வேல்' என்று முடிகிறபோது தாரகனை மாய்த்த அந்தச் சக்தி வேல் நம் நாட்டைக் காக்கும் தாரகமாக வந்தருளும் என்ற உற்சாகத்தைப் பெறுகிறோம்.

ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு உறுதுணையாக உருகிப் பாடியிருக்கிறார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். கஜல் தவிர மீதமுள்ள அத்தனை பாடல்களுக்கும் இழைய இழைய வயலின் வாசித்துள்ள ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியத்துக்கும், மற்ற பின்னணி வாத்தியக்காரர்களுக்கும் பாராட்டு அளிக்கிறோம். இப்பாடல்களுக்குப் பாங்குறப் பண்ணமைத்துத் தந்துள்ள ஸ்ரீ சீனிவாச ராவ், ஸ்ரீ எஸ். வி. வெங்கட்ராமன், கடையநல்லூர் ஸ்ரீ வெங்கட்ராமன் ஆகியோர் ரசிகர்களின் நிறைந்த நன்றிக்குப் பாத்திரராகிறார்கள். வாய்ப்பாட்டும் வாத்தியங்களும் இனிமையுடன் இசைய இசையப் பதிவு செய்த எஞ்சினீயர் ரகுநாதனும் மிகுந்த பாராட்டுக்குரியவர்.



★ தில்லியில் உப ராஷ்டிரபதி ஸ்ரீ ஜட்டி இசைத் தட்டை வெளியிடுகிறார். இடதுபுறம் பிரதம நீதிபதி ஏ. என். ரே.

★ சென்னையில் கவர்னர் ஷா இசைத்தட்டை வெளியிடுகிறார். அருகே ஸ்ரீ ஆல்ஃபிரெட் தங்கையா.



எம். எஸ். இசைத்தட்டு அளித்தா என்றால், அதற்குரிய சம்மானம் ஏதேனும் பொதுநலப் பணிக்குத்தான் செல்லும் என்பது சகலருக்கும் தீர்ந்து போன விஷயம். பாரதத்தின் ஒருமைப்பாட்டைப் பக்தி மூலம் வலியுறுத்தும் இவ்விசைத் தட்டின் 'ராயல்டி' முழுதும் பம்பாய் பாரதீய வித்யா பவனத்தைச் சேருவது மிகப் பொருத்தமாகும்.

விச்வ வித்யாபவனமாக இப்போது உலகெங்குமே பரவி வரும் பாரதீய வித்யா பவனத்தார் இந்த இசைத்தட்டை இம்மாதம் ஒன்பதாம் தேதி பன்னிரண்டு இடங்களில் வெளியிட்டனர். தில்லியில் உபராஷ்டிரபதி ஸ்ரீ ஜட்டி அவர்களும் சென்னையில் மேதகு ஸ்ரீ கே. கே. ஷா அவர்களும் வெளியிட்டனர். லண்டனில்கூட வெளியீட்டு விழா நடந்தது; அங்கு வெளியிட்டவர் ஹாரர்வுட் பிரபு.

தேசமெங்கும், பிற தேசங்களிலும்கூட இவ்விசைத்தட்டு இனிமையும் இறைமையும் பொழியப் போகிறது!

—ரா. கணபதி



பார்ப்பதற்குப் பலசாலியாகவும் ஆரோக்கியமாயும் உள்ள எத்தனையோ பேரின் இதயம் உண்மையில் பலத்தோடும் ஆரோக்கியத்தோடும் இருப்பதில்லை. அதனால்தான் பல சோக முடிவுகள் திடீரென்று நோர்கின்றன. மார்பு வலி தோன்றி, இதய இடர் என்று தெரிந்து, ஏற்ற சிகிச்சை வழங்குவதற்குள் எல்லாம் முடிந்து விடுகிறது. உழைப்பும் ஊக்கமும் கொண்ட சுறுசுறுப்பான பல இளம் திறமைசாலிகளை நாம் இப்படி இழக்கிறோம்.

இப்போது அந்தச் சோக முடிவுகளைக் குறைக்கலாம் என்பது ஓர் அரிய செய்தி.

# எதையும் தாங்கும் இதயம்!

## 'இதயத் தாக்குதல்' எப்படி நேர்கிறது?

ரத்த அழுத்தம் எல்லோருக்கும் தான் உண்டு. ஆனால் 'ரத்த அழுத்த மிகை' என்னும் 'ஹைபர் டென்ஷன்' ஆரோக்கியத்துக்கு அபாயம். நாற்பது வயதான எவரும், முக்கியமாகத் தொல்லைகளும் துரிதங்களும் நிறைந்து வாழ்வோர், தமது ரத்த அழுத்தம் ஏற்றபடி இருக்கிறதா என்று அடிக்கடி பார்த்துக் கொள்வது விவேகம். ரத்தக் குழாயின் உள் பாதை குறுகி விடுவதால், ரத்த அழுத்த மிகை ஏற்பட்டு இதயம் வேகமாகப் பணியாற்ற வேண்டியிருக்கிறது. மிகையான பணியினால் பலவீனமாகத் தொடங்குகிறது.



## ரத்த அழுத்த மிகை யாருக்கு வரும்?

ரத்த அழுத்த மிகை எவருக்கும் வரலாம். ரத்த அழுத்தம் சோதிக்கும்போது அதிக பட்சம் 150 துடிப்பும், குறைந்த பட்சம் 90 துடிப்பும் இருந்தால் சாதாரணம். அதிகம் என்பது மேலும் அதிகரித்து, குறைவு என்பது மேலும் குறைந்து போகும்போது கவலைப்பட வேண்டும். எப்போதாவது ஒரு முறை சோதனையில் அழுத்த மிகை தெரிந்தால் பாராட்ட வேண்டாம். தொடர்ந்து மூன்று முறை அழுத்தம் பார்க்கும் போது மிகை தெரிந்தால் கவனத்துடன் சிகிச்சை பெற வேண்டும். பரபரப்பு, பல வேலைகளை ஒரேயடியாகச் சாதிக்க வேண்டும் என்ற வேகம், முன்கோபம், சகிப்பின்மை மன இயல்புடையவர்களைத் தாக்கக் காத்திருக்கிறது ரத்த அழுத்த மிகை.

சிலருக்குத் தலைவலி, தலைசுற்றல், பார்வையில் மயக்கம், மார்பிலே வலி, மூச்சுவாங்கல், படபடப்பு



☐ டேனியல் ஆஸ்பார்ன் போன்று உலகிலேயே வேறு ஒரு மனிதர் கிடையாது. எல்லாருக்கும் எந்தத் திசையில் ரத்தம் பாயுமோ அதற்கு நேர் எதிர்த்திசையில் இவருக்கு ரத்தம் பாய்கிறது! காரணம், இதயத்திலிருந்து இரத்தம் எடுத்துச் செல்லும் பிரதான ரத்த நாளமான அயோர்டா பழுதுபட்டதால் நடந்த ஓர் ஆபரேஷன். இரு செயற்கை ரத்தக் குழாய்களைப் பயன்படுத்தி, ரத்த ஓட்டத்தைத் திசை திருப்ப ஓர் அடைப்பானையும் பொருத்திய பிறகு பழுதுபட்ட அயோர்டாவை நீக்கி விட்டார்கள்.

☐ ஈ. ஸி. ஜி போன்ற கருவியில் இதய இயக்கத்திறனை அளக்க மூன்று 'எலெக்ட்ரோட்'களை நோயாளியின் நெஞ்சில் பொருத்துவது வழக்கம். இப்போது இதைவிட வசதியான வழி கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. இலகுவாகக் காதிலே பொருத்திக் கொள்ளலாம். இதனை அணிந்து ஒரு பெண் மணி இருந்த இடத்திலேயே இயங்கும் சைக்கிளை ஓட்ட அப்போது ஏற்படும் இதய இயக்க மாறுதல்கள் பதிவாவதைப் படத்தில் பார்க்கலாம்.

போன்ற வெளி அடையாளங்களால் ரத்த அழுத்த மிகை இருப்பது புலனாகும். வேறு சிலருக்கு இந்த வெளி அடையாளம் ஒன்றுமே இராது. உள்ளுக்குள்ளே ரத்த அழுத்த மிகை இருந்திருக்கும். திடீரென்று இதயத் தாக்குதலோ பாரிச வாயுவோ தாக்கும்போதுதான் அப்படி ஒன்று இருந்ததே தெரிய வரும்.

### ரத்த அழுத்தமிகை ஏன் தோன்றுகிறது?

ஆரோக்கியத்தில் கவனமின்மை, உடல் பருத்திருத்தல், பெருந் தீனி, மிகையான புகை, குடி போன்ற இயல்புடையோருக்கு வருகிறது. இப்படி ஒரு பழக்கம் இன்றியே பரம்பரைக் குணம் போலவும் சிலருக்கு வருகிறது.

வயதானவர்களுக்குத்தான் என்பதில்லை. சிறு குழந்தைகளுக்கும் சிறுநீரகம் நோயுறும் போது ரத்த அழுத்தமிகை ஏற்படுகிறது.

### திடீரென்று இதயவலி நேர்ந்தால் என்ன செய்வது?

திடீரென்று இதயவலி நேர்வது இந்தத் தலைமுறை பெற்றுள்ள சாபம் போலும். விஞ்ஞான வேகமும் துரித வாழ்வும் பெற்றதற்கு மனித இனம் தரும் விலை இது. மிக நுட்பமான இதயம் என்னும் கருவி, தன் செயலின்மையைத் தெரிவித்துக் கொள்ளும் அடையாளமே இது. உடனுக்குடன் இதைக் கவனித்து, சிகிச்சை அளிக்க முடிந்தால் இதயத் துடிப்பும் நல்வாழ்வும் நீண்ட காலம் தொடரும். அடுத்தடுத்து இதயத் தாக்குதல் நேராமல் பார்த்துக் கொள்ள முடியும்.

முதல் இதயத் தாக்குதல் நேர்ந்த சில மணி நேரங்கள் பயங்கரமான சோதனைக் காலம். இந்தச் சோதனையில் தேற முடியாமல்தான் பல சோக முடிவுகள் நேர்ந்துள்ளன.

### இதயத் தாக்குதலுக்கு 'முதலுதவி' உண்டா?

இரவும் பகலும் எந்த நேரம் அழைத்தாலும் வரத் தயாராக இருக்கும் தீயணைப்பு நிலையம் போல, இதயத் தாக்குதல் நோயாளிகளை எப்போதும் கவனிக்கச் சில நிலையங்கள் கடந்த பத்தாண்டுகளாக அமெரிக்காவிலும் ஐரோப்பிய நகரங்களிலும் தோன்றியுள்ளன. இன்று பம்பாயில் இப்படிப் பத்து நிலையங்களும் கல்கத்தாவில் எட்டும் உள்ளன. சென்னையிலும் ஆறு—ஏழு உள்ளன.

### இங்கே என்ன செய்கிறார்கள்?

இதயத் தாக்குதல் நேர்பவர்களில் பத்துக்கு ஏழுபேர் விபரீத நிலை அடையாமல் தப்பிவிடுகின்றனர். மீதி மூவரும்கூட முதல் நாற்பத்தெட்டு மணி நேரத்தில்தான் பயங்கர எல்லைவரை செல்கின்றனர். உடனே கவனித்தால் இந்த மூவரைக்கூடக் குணப்படுத்த முடியும்; விபரீதங்களைக் கட்டுப்படுத்த முடியும்.

இந்த இதயத் தாக்குதல் முதலுதவி நிலையங்களில் புதிய விஞ்ஞானக் கருவிகள் இருக்கின்றன. இதயத் துடிப்பையும் ரத்த ஓட்டத்தையும் ஆரோக்கிய கருதியில் வயப்படுத்தும் கருவிகள் இவை. ரத்தத் துடிப்பை ஒலியாகவும், கண்ணால் காணும் வண்ண அலைகளாகவும் மாற்றும் நுண்ணிய எலெக்ட்ரானிக் கருவிகள் இவை. நோயாளியின் இதயத்துடன் இணைந்த கம்பி வழியே கருவி காட்டும் அலைகளையும் அது ஒலிக்கும் ஒலிகளையும் கவனித்தபடியே, தேர்ந்த டாக்டர்களும் சிறப்புப் பயிற்சி பெற்ற உதவியாளர்களும் சிகிச்சை செய்கிறார்கள். இதயம் ஒழுங்கான துடிப்புக்குப் பழக்கப்படும் வரை ''ஆஸிலாஸ்கோப்'' என்னும் ஒரு கருவி துணை புரியும். பிறகு இன்னும் சில நாட்கள் பரிசோதனையிலும் ஓய்விலும் இருந்த பிறகே நோயாளியை இந்த நிலையத்திலிருந்து வீட்டுக்கு அனுப்புவார்கள்.

ஆஸிலாஸ்கோப் கருவி தவிர ''பேஸ்—மேக்கர்'' என்னும் மற்றொரு நுட்பமான கருவி இதயத் துடிப்பு நிதானத்தை ஒழுங்குபடுத்தத் துணை புரிகிறது. இதயத்துக்கு அளவான அதிர்ச்சி கொடுத்துச் சீராகத் துடிக்க வைத்து, இதயத்தை இயக்கும் கருவி இது.

''டிபேபுலேட்டர்'' என்பது மற்றொரு கருவி. இதயத் துடிப்பு தாறுமாறாகி, ரத்த ஓட்டம் நின்றுபோய், மரண வாயிலில் இருக்கும் நோயாளியின் மார்பில் நேரே மின்-அதிர்ச்சி செலுத்தி, தாறுமாறான துடிப்பை நேர் செய்யும் கருவி இது. இதயத் துடிப்பு நான்கு நிமிஷ காலம் நின்று விட்டால் மூளைப் பகுதி உடனே பாதிக்கப்பட்டு விடும். அப்புறம் இதயத் துடிப்பு நிகழ்ந்து குணமடைந்தாலும் ஏதாவது நிரந்தர உடல் குறை நீடிக்கலாம். எனவே இதயத் துடிப்பு புதுப்பிக்கப்படுவது என்றால் இந்த மின் அதிர்ச்சி வைத்தியத்தை உடனுக்குடன் செய்தாக வேண்டும்.

### இதெல்லாம் செலவுமிக்க சிகிச்சையல்லவா?

ஆமாம். இன்று சகஜமாகிவிட்ட பெனிசிலின் மருந்துகூடத்தான் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு முதலில் வந்தபோது செலவு மிக்கதாக இருந்தது. செல்வந்தர்களுக்கு மட்டுமே கட்டுப்படியான வைத்தியமாக இருந்தது. இன்று 'லட்சக்'கணக்கில் எல்லாரும் பெனிசிலின் ஏற்கிறார்களே. அதுபோல் இந்தப் புதிய இதயத் தாக்குச் சிகிச்சைக் கருவிகளும் நாளடைவில் எல்லோருக்கும் எளிதில் எட்டலாம்.

### வந்தபின் காப்பதை விட வருமுன் காப்பது நலமல்லவா?

நிச்சயமாக. இதயம் நன்றாக இயங்கத் தினம் தேகப் பயிற்சி செய்ய வேண்டும். விடுவிடு என்று ஒரு மைல் நடப்பது முதல் தரமான தேகப் பயிற்சி. செலவில்லாதது. சாப்பாடு விஷயத்தில் மிதமாக இருந்து ஆரோக்கிய உணவு உட்கொள்ள வேண்டும். சிகரெட், மது முதலியன தவிர்ப்பது நலம்.

ஆலோசனை: **டாக்டர் டி. எஸ். ராமதுரை (மாடர்ன் மெடிகல் ஹாஸ்பிடல்)**

கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

ஸ்ரீமதி ருக்மிணி பார்த்தசாரதியின் கதைகளில் குடும்பப் பாங்கு மிளிர்வதைக் காண்கிறோம்.

"என்ன ஸார்! நான் ஒரு குறுநாவல் எழுதிக் கொடுத்தேன்! அது துணுக்காக வந்திருக்கிறதே!" என்று சில எழுத்தாளர்கள் கேலியாகக் கூறுவதுண்டு. பதினோராவது வயதில் ஒரு நகைச்சுவைத் துணுக்கு மூலம் கல்கிப் பத்திரிகையில் அறிமுகமான திரு வி. ராமமூர்த்தி இன்று இரண்டாவது பரிசு பெறும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறார்! ஆனந்த விகடன், கலைமகள் தீபாவளி மலர்களில் மலர் எழுத்தாளரான இவர் 'கல்கி'க்குச் சிறுகதை எழுதுவது இதுவே முதல் தடவை. பரிசுக்கதை எழுத்தாளராகக் கல்கி நேயர்களுக்கு அறிமுகமாகிறார்.

1936ல் கல்கத்தாவில் பிறந்தார் திரு வி. ராமமூர்த்தி. 1947ல் நம்நாடு இரண்டுபட்டுப் பிளவுற்ற சமயத்தில் இவர், தந்தை விசுவநாதனோடு கராச்சியில் இருந்தார். மதப் பூசல், கலவரங்களின் பயங்கரங்களைப் பிள்ளைப் பருவத்திலேயே அறிந்து கொண்டவர்.

"என் கல்விக்கு முழு முதல் காரணமாக இருந்தவர் என் அன்னை ஸ்ரீமதி பாகீரதி. கராச்சியில் வசிக்கையில் பள்ளியில் ஆங்கிலமும், பிரஞ்சும் மட்டுமே படிக்க முடியும். அவள்தான் எனக்குத் தமிழ் பயில்வித்த ஆசான். அழ அழ என்னை எழுதவும் படிக்கவும் வைத்தார்கள். கல்கி சிறுவர் பகுதியைப் படிக்கப் புகுந்து, பிறகு தீந்தமிழ் இலக்கியமான சிவகாமியின் சபதத்தால் தமிழ் அறிவு வளர்ந்தது. பின்னால் மதுரையிலும் சென்னையிலும் பள்ளி, கல்லூரிக் கல்விகள் தொடர்ந்தன. எனக்காக என் அன்னை பட்ட சிரமங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. 1957ல் ஆனர்ஸ் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி, பல்கலைக் கழக இலக்கியப் பரிசைப் பெற்றதே அவருக்கு நான் செய்த கைம்மாறு" என்று கண் கலங்கத் திரு வி. ராமமூர்த்தி கூறுகிறார். ஆங்கில விரிவுரையாளராய் விளங்கிப் பிறகு ஐ.ஏ.எஸ். அதிகாரியானார் இவர்.

திரு வி. ராமமூர்த்தியின் மனைவி ஸ்ரீமதி கமலாவும் சிறந்த எழுத்தாளர். பரிசு எழுத்தாளரும்கூட. தினமணி கதிர் நடத்திய சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றிருக்கிறார்.

மூன்றாவது பரிசுகள் இரண்டில் ஒன்றைப் பெற்ற திரு கே. விசுவநாதன் 'அன்னம்' என்ற புனைபெயரில் எழுதி 520க்கு மேற்பட்ட கதைகளை அச்சில் கண்டவர்! அசுர சாதனை!

இவர் பிறந்தது 1930ல் குடந்தைமாநகரத்தில். இவர் சென்னையில் தாய் மாமன் 'தேவன்' அவர்களின் ஆதரவிலும் அரவணைப்பிலும் வளர்ந்தவர். லயோலாக் கல்லூரி பி.ஏ. பட்டதாரி; 1951ம் ஆண்டு இவர் தபால் இலாகாவில் சேர்ந்து இன்று மதுரை மாநகரில் அஞ்சலகங்களின் உதவி கண்காணிப்பாளராகப் பணிபுரிந்து வருகிறார்.

இவரது முதல் கதை 1959ல் தினமணி கதிரில் பிரசுரமாயிற்று.

'அன்னம்' என்பது இவரது அன்புத் தங்கையின் பெயர். அதையே தம் புனைபெயராகச் சூட்டிக்கொண்டிருக்கிறார். இவரது பத்துக்கதைகள் கன்னடத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பிந்துசாரன், காதல் கல்யாணம், பொம்மலாட்டம், பார்வதியின் சங்கல்பம் ஆகிய முழு நேர நாடகங்கள் மேடையேறி விருக்கின்றன. இவரது நாடகங்களில் மேஜர் சுந்தரராஜன், ஸ்ரீகாந்த், ஜெயசங்கர், கோகுல்நாத், வீரராகவன் ஆகியோர் பங்கேற்றுச் சிறப்பித்திருக்கிறார்கள்.

மற்றொரு பெண் இலக்கம் மூன்றாவது பரிசு பெறுவது பெண்குலத்தின் பெருமைக்கு மேலும் புகழ் சேர்க்கிறது.

சிவசங்கரி சிறுகதை உலகில் இன்று சுடர் விடும் தாரகை. இவர் 1942ல் பிறந்தார். ஆடிட்டர் சூரி அவர்களின் கடைக்குட்டிப் பெண்! செல்லமாக வளர்ந்தவர்.

பி. எஸ்ஸி. பட்டதாரி. கல்லூரியில் முதலாவதாகத் தேறிக் கல்லூரிக்குப்பெருமை சேர்த்திருக்கிறார். பரதநாட்டியக் கலையிலும் இவருக்குத் தேர்ச்சி உண்டு.

"முதல் கதை 'அவர்கள் பேசட்டும்' 1968ல் கல்கியில் பிரசுரமானது. அன்று ஆரம்பித்த எழுத்துத்தான் என்னை இந்த அளவுக்கு உயர்த்தியுள்ளது!" என்று நன்றியுடன் நினைவுகூர்கிறார் ஸ்ரீமதி சிவசங்கரி.

சிவசங்கரிக்கு 1963ல் திருமணம் ஆயிற்று. இவரது கணவர் சந்திரசேகர் பி.ஈ., விழுப்புரத்தில் ஆர்.வி.வி. பைப் தொழிற்சாலை நிறுவி நிர்வகித்து வருகிறார்.

சிவசங்கரியின் 'திரிவேணி சங்கமம்' என்ற நாவல் கன்னடத்தில் திரைப்படமாக உருவாகியுள்ளது. இவரது அமெரிக்கப் பயணக் கதை மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

பரிசு பெற்ற நால்வருக்கும் கல்கி நேயர்கள் சார்பாக நமது நல்வாழ்த்துக்கள். அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியின் விளைவாகப் பல புதிய எழுத்தாளர்கள் அறிமுகமாகிறார்கள். அவர்களைப் பிறகு சந்திப்போம்.

—பி.எஸ்.எம்.

---



நாடக மேடையில் இருந்த இருவருக்கும் வசனம் மறந்து விட்டது. ரசிகர்கள் கூச்சலிட ஆரம்பித்தனர். 'ப்ராம்ப்டர்' சத்தம் போட்டே வசனங்களைப் படித்தார்.

ஒரு நடிகர் ப்ராம்ப்டரை நெருங்கி, "நீங்கள் வசனத்தை எடுத்துக் கொடுப்பது எங்கள் இருவருக்குமே கேட்கிறது. ஆனால் அதை யார் சொல்வது என்பதுதான் தெரியவில்லை" என்றார்! —எம். எஸ்.

# சிவகாமியின் சபதம்

இருபத்தெட்டாம் அத்தியாயம்

## விழாவும் விபரீதமும்

எத்தனையோ நூற்றாண்டு காலமாக நெடிது வளர்ந்து நீண்டு படர்ந்து ஓங்கித் தழைத்திருக்கும் ஆல விருக்ஷத்தின் காட்சி அற்புதமானது. அத்தகைய ஆலமரத்தின் விழுதுகள் காரணமாகத் தாய் மரத்தைச் சேர்ந்தாற்போல் இளைமரங்கள் தோன்றித் தனித்த மரங்களைப் போலவே காட்சி தருவதும் உண்டு. ஸநாதன ஹிந்து மதமாகிய ஆலமரத்திலிருந்து அவ்விதம் விழுது இறங்கி வேர் விட்டுத் தனி மரங்களாகி நிற்கும் சமயங்கள் பௌத்தமும் சமணமும் ஆகும். அவ்விரு சமயங்களும் பழைய காலத்தில் பாரத நாட்டில் கலைச்செல்வம் பெருகியதற்குப் பெரிதும் காரணமாயிருந்தன.

அஜந்தா மலைப் பிராந்தியத்துக்குள்ளே மனிதர்கள் எளிதில் எட்ட முடியாத அந்தரங்கமான இடத்தில் மலையைப் பிளந்து கொண்டு பாதி மதியின் வடிவமாகப் பாய்ந்து சென்ற நதிக்கரையிலே இன்றைக்கு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் புத்த பிக்ஷுக்கள் கருங்கற் பாறைகளைக் குடைந்து புத்த சைத்தியங்களையும் விஹாரங்களையும் அமைக்கத் தொடங்கினார்கள். அது முதல், இரண்டாவது புலிகேசிச் சக்கரவர்த்தியின் காலம் வரையில், அதாவது ஏறக்குறைய அறுநூறு ஆண்டு காலம் அந்த அந்தரங்கப் பிரதேசத்தில் அற்புதமான சிற்ப சித்திரக் கலைகள் வளர்ந்து வந்தன. அழியாத கல்லில் அமைத்த சில வடிவங்களும், அமர

அமரர் கல்கி





வர்ணங்களில் தீட்டிய ஓவிய உருவங்களும் பல்கி வந்தன. பார்ப்போரின் கண்களின் மூலம் இதயத்துக்குள்ளே பிரவேசித்து அளவளாவிப் பேசிக் குலாவும் தேவர்களும், தேவியர்களும் வீரர்களும் வீராங்கனைகளும் சௌந்தர்ய புருஷர்களும் அழகே உருவமான நாரீமணிகளும் சைத்ரிக பிரம்மாக்களால் அங்கே சிருஷ்டிக்கப்பட்டு வந்தார்கள்.

அவ்வாறு அஜந்தாவிலே புதிய கலை சிருஷ்டி ஆரம்பிக்கப்பட்ட நாளிலிருந்து அந்தப் பிரதேசம் கண்டிராத கோலாகலத் திருவிழா புலிகேசிச் சக்கரவர்த்தியின் ஆட்சி தொடங்கிய முப்பத்தாறாவது வருஷத்தில் அங்கு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதுவே அந்தச் சளுக்கப் பேரரசன் ஆட்சியின் கடைசி ஆண்டுமாகும்.

பழைய பாரத நாட்டில் இராஜாங்கங்களும் இராஜ வம்சங்களும் மாறிய போது சமயங்களுடைய செல்வாக்கு மாறுவது சர்வ சாதாரணமாயிருந்தது. இந்த நாளில் போலவே அந்தக் காலத்திலும் விசால நோக்கமின்றிக் குறுகிய சமயப் பற்றும் துவேஷ புத்தியும் கொண்ட மக்கள் இருக்கவே செய்தார்கள். சமரச புத்தியுடன் சகல மதங்களையும் ஒருங்கு நோக்கிக் கலைகளை வளர்த்து நாட்டுக்கே மேன்மையளித்த புரவலர்களும் அவ்வப்போது தோன்றினார்கள்.

நம்முடைய கதை நடந்த காலத்தில் வடக்கே ஹர்ஷவர்த்தனரும், தெற்கே மகேந்திர பல்லவர், மாமல்ல நரசிம்மர் ஆகியவர்களும் அத்தகைய சமரச நோக்கம் கொண்ட பேரரசர் இல



கங்களாகப் பாரத நாட்டில் விளங்கினார்கள்.

வாதாபிப் புலிகேசி சக்கரவர்த்தியும் காஞ்சிப் படையெடுப்பிலிருந்து திரும்பி வந்த பிறகு, நாளடைவில் அத்தகைய பெருந்தகையாரில் ஒருவரானார். அஜந்தா புத்த சங்காராமத்துக்கு அவர் அளவில்லாத கொடைகளை அளித்துக்கலை வளர்ச்சியில் ஊக்கம் காட்டி வந்தார். இது காரணமாக, அஜந்தாவின் புத்த பிக்ஷுக்கள் அறுநூறு வருஷங்களாக அங்கு நடவாத காரியத்தைச் செய்யத் தீர்மானித்தார்கள். அதாவது புலிகேசிச் சக்கரவர்த்தியை அஜந்தாவுக்கு அழைத்து உபசரிக்கவும் அது சமயம் சிறப்பாகக் கலை விழாக் கொண்டாடவும் ஏற்பாடு செய்தார்கள்.

சக்கரவர்த்தியும் அவரது பரிவாரங்களும் வந்து சேர்வதற்காகக் காடு மலைகளைச் செப்பனிட்டு ராஜபாட்டை போடப்பட்டது. அந்தப் பாதை வழியாக யானைகளிலும் குதிரைகளிலும் சிவிகைகளிலும் ஏறிச் சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களும் மந்திரி தந்திரிகளும் சேனாபதிகளும் மற்றும் சளுக்க சாம்ராஜ்யத்தின் பிரசித்த கவிஞர்களும் கலை நிபுணர்களும் அயல்நாடுகளிலிருந்து வந்திருந்த விசேஷ விருந்தாளிகளும் மேற்படி கலை விழாவுக்காக அஜந்தா வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் அனைவரும் அஜந்தா புத்த பிக்ஷுக்களால் இராஜோபசார மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்கள். வந்த விருந்தாளிகள் கும்பல் கும்பலாகப் பிரிந்து ஒவ்வொரு சைத்தியத்துக்கும், விஹாரத்துக்கும் சென்று, ஆங்காங்கு அமைக்கப்பட்டிருந்த சிற்பங்களையும் சித்திரங்களையும் பார்த்துக் களித்துக் கொண்டு வந்தார்கள்.

நல்ல வெயில் எரித்த உச்சி வேளையிலேதான் விஹாரங்களின் உட்சுவர்களில் தீட்டியிருந்த உயிரோவியங்களைப் பார்ப்பது சாத்தியமாகையால் விருந்தாளிகள் அன்றிரவு அங்கேயே தங்கியிருந்துவிட்டு மறுநாளும் மேற்படி சித்திரக் காட்சிகளைப் பார்த்து விட்டுப் போவதென்று ஏற்பாடாகியிருந்தது.

சக்கரவர்த்தியின் அன்றைய முக்கிய அலுவல்கள் எல்லாம் முடிந்த பிறகு பிற்பகலில் சிரம பரிகாரமும் செய்து கொண்டாயிற்று.

மாலைப் பொழுது வந்தது. மேற்கே உயரமான மலைச் சிகரங்களுக்குப் பின்னால் சூரியன் மறைந்துகீழே கீழே போய்க் கொண்டிருந்தது. அம்மலைச் சிகரங்களின் நிழல்கள் நேரமாக ஆகக் கிழக்கு நோக்கி நீண்டு கொண்டேவந்தன. கிழக்கேயிருந்த சில உயர்ந்த சிகரங்களில் படிந்த மாலைச் சூர்யனின் பொன் கிரணங்கள் மேற்சொன்ன கரிய நிழற் பூதங்களால் துரத்தப்பட்டு அதிவேகமாகக் கீழ்த் திசையை நோக்கிப் பிரயாணம் செய்துகொண்டிருந்தன.

மலையை அர்த்த சந்திர வடிவமாகப் பிளந்து கொண்டு சென்ற வாகோரா நதியின் வெள்ளமானது ஆடிக்கொண்

டும் பாடிக் கொண்டும் ஆங்காங்கே துள்ளி விளையாடிக் கொண்டும் அந்த விளையாட்டிலே விழுந்து எழுந்து இரைந்து கொண்டும் அதிவிரைவாகச் சென்று கொண்டிருந்தது.

மலைச் சரிவுகளிலே கண்ணுக்கெட்டிய தூரம் பாரிஜாத மரங்கள் இலையும் பூவும் மொட்டுக்களுமாய்க் குலுங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் இடையிடையே சரக்கொன்றை மரங்கள் கண்ணைப் பறித்த பொன்னிறப் பூங்கொத்துக்களைச் சரம் சரமாகத் தொங்க விட்டுக் கொண்டு பரவி நின்றன.

நதி ஓரத்துப் பாறை ஒன்றில் இரண்டு கம்பீர ஆகிருதியுள்ள புருஷர்கள் அமர்ந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள்.

சற்று அருகில் நெருங்கிப் பார்த்தோமானால் அவர்கள் புலிகேசிச் சக்கரவர்த்



தியும் நாகநந்தி பிக்ஷுவுந்தான் என்பதை உடனே தெரிந்துகொள்வோம்.

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் எந்த வாகோரா நதிக் கரையின் பாறையின் மேல் உட்கார்ந்து அண்ணனும் தம்பியும் தங்கள் வருங்காலப் பகற் கனவுகளைப் பற்றிச் சம்பாஷித்தார்களோ, வாதாபி சிம்மாசனத்தைக் கைப்பற்றிச் சளுக்க இராஜ்யத்தை மகோன்னத நிலைக்குக் கொண்டு வருவதைப் பற்றிப் பற்பல திட்டங்களைப் போட்டார்களோ, அதே பாறையில் இன்று அவர்கள் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால், அன்றைக்கும் இன்றைக்கும் அவர்களுடைய தோற்றத்திலேயும் சம்பாஷணையின் போக்கிலேயும் மிக்க வித்தியாசம் இருந்தது. பிராயத்தின் முதிர்ச்சியோடு கூட அவர்களுடைய வெளி உலக அனுபவங்களும் அக உலக அனுபவங்களும் அவர்கள் ஈடுபட்ட கோரமான இருதயப் போராட்டங்களும் ஆசாபாசங்களும் கோப தாபங்களும் சேர்ந்து, முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் அதே நதியில் பிரதிபலித்த பால் வடியும் இளம் முகங்களைக் கோடுகளும் சுருக்கங்களும் விழுந்த கொடூர முகங்களாகச் செய்திருந்தன.

முக்கியமாக, நாகநந்தி பிக்ஷுவின் முகத்தில் கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. இரத்தம் கசிவது போல் சிவந்திருந்த கண்களில் அடிக்கடி கோபாக்னியின் ஜுவாலை மின்னலைப் போல் பிரகாசித்தது.

அவர் கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் நெருப்பைக் கக்கிக்கொண்டு பாயும் அக்னியாஸ்திரத்தைப் போல் புறப்பட்டுச் சீறிக்கொண்டு பாய்ந்தது.

''ஆ! தம்பி! என்னுடைய விருப்பம் என்னவென்று கேட்கிறாய்? சொல்லட்டுமா? இந்தக் கணத்தில் பயங்கர பூகம்பம் ஏற்பட்டு இந்த அஜந்தா மலையானது அப்படியே அதள பாதாளத்தில் அமிழ்ந்து விட வேண்டும் என்பது என் விருப்பம். ஆயிரம் இடிகள் சேர்ந்தாற்போல் விழுந்து இங்குள்ள சைத்தியங்களையும், விஹாரங்களையும் இங்கே வசிக்கும் பிக்ஷுக்களையும், உன்னையும் உன் பரிவாரங்களையும் என்னையும் அடியோடு அழித்து நாசமாக்க வேண்டுமென்பது என் விருப்பம்'' என்றார் நாகநந்தி.

இதைக் கேட்ட புலிகேசி, சாவதானமாக, ''அடிகளே! அஜந்தாவுக்கு வந்தது உண்மையிலேயே பலன் தந்துவிட்டது. எனக்குச் சொல்ல முடியாத சந்தோஷமாக இருக்கிறது. கொஞ்ச காலமாகத் தாங்கள் ரொம்பவும் பரம சாதுவாக மாறிக் கொண்டு வந்தீர்கள். இன்றுதான் பழைய நாகநந்தி பிக்ஷுவாகக் காட்சி அளிக்கிறீர்கள்!'' என்று சொல்லிப் புன்னகை புரிந்தார்.

''ஆம், தம்பி, ஆம்! இன்று பழைய நாகநந்தி ஆகியிருக்கிறேன். அதன் பலனை நீயே அநுபவிக்கப் போகிறாய்! ஜாக்கிரதை!'' என்று பிக்ஷு நாக சர்ப்பத்தைப் போல் சீறினார்.

''அண்ணா! என்னை என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறாய்?'' என்று புலிகேசி கேட்டார்.

''இன்று ராத்திரி நீ தூங்கும்போது இந்த விஷக் கத்தியை உன் மார்பிலே பாய்ச்சி உன்னைக் கொன்றுவிடப் போகிறேன்.''

புலிகேசி, ''ஹா ஹா ஹா'' என்று சிரித்தார். ''அப்புறம் என்ன செய்



'' ஏன் தம்பி, உன் அப்பா உன்னைப்போட்டு இப்படி அடிக்கிறார்; நீ அழவே இல்லையே!''

'' பிரயோஜனம் இல்லீங்க. அவருக்குக் காது கேட்காது.''

— ஜோக்ஸ் - எம். எஸ்.



கற்பூர வில்லைகள் போட்டு வைத்திருக்கும் டப்பாவில், இரண்டு மிளகாய் போட்டு வையுங்கள். அது கற்பூரம் கரைந்து போகாமல் தடுக்கும்.

—க. மாரியப்பன்

---

வீர்கள்? அதாவது என் பிரேதத்தை என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று பரிகாசக் குரலில் வினவினார்.

''இந்த நதியில் கொண்டு வந்து போட்டு விடுவேன்.''

''அப்புறம்? கேட்கிறவர்களுக்கு என்ன சொல்லுவீர்கள்?''

''ஒருவரும் கேட்க மாட்டார்கள்.''

''ஏன் கேட்க மாட்டார்கள்? அஜந்தாவுக்கு வந்த சக்கரவர்த்தி இரவுக்கிரவே எப்படி மறைந்தார் என்று சளுக்க இராஜ்யத்தின் பிரஜைகள் கேட்க மாட்டார்களா?''

''கேட்க மாட்டார்கள்! சக்கரவர்த்தி மறைந்தது அவர்களுக்குத் தெரிந்தால் அல்லவா கேட்பார்கள்? ஒருவருக்கும் அது தெரியப் போவதில்லை.''

''அது எப்படி?''

''ஒரு சமயம் நான் உன் உடைகளைத் தரித்து அடிபட்டுச் சித்திரவதைக்குள்ளாகி உன் உயிரைக் காப்பாற்றினேன். இன்னொரு சமயம் நான் உன்னைப்போல் வேஷம் தரித்துப் போர்க்களத்திலே நின்று மகேந்திரனோடு போராடி அவன் மீது விஷக் கத்தியை எறிந்து கொன்றேன். அதே உருவப் பொருத்தம் இப்போதும் எனக்குத் துணை செய்யும். நீ மறைந்ததையே ஜனங்கள் அறிய மாட்டார்கள். நாகநந்தி பிக்ஷு மறைந்ததைப் பற்றி யாரும் கவனிக்க மாட்டார்கள். நியாயமாக இந்தச் சளுக்கிய இராஜ்யம் எனக்கு உரியது. நான் மனமார இஷ்டப்பட்டு உனக்கு இந்த சாம்ராஜ்யத்தைக் கொடுத்தேன். சென்ற முப்பத்தைந்து வருஷமாக உன்னுடைய க்ஷேமத்தையும் மேன்மையையும் தவிர வேறு எண்ணமே இல்லாமலிருந்தேன். ஆனால், நெஞ்சில் ஈவிரக்கமற்றவனும், சகோதர வாஞ்சையற்றவனும், நன்றியற்ற கிராதகனுமான நீ என்னை இன்று பலர் முன்னிலையில் அவமானப்படுத்தினாய். ஆ! இந்தப் பூமி பிளந்து உன்னை இன்னும் விழுங்கவில்லையே என்பதை நினைத்துப் பார்த்தால் எனக்குப் பரம ஆச்சரியமாக இருக்கிறது!''

''அண்ணா! அண்ணா! நீ என்ன சொல்கிறாய்? என்னை இப்படியெல்லாம் சபிக்க உனக்கு எப்படி மனம் வருகிறது? உன்னை என்ன அவமானப்படுத்திவிட்டேன்?''

''இன்னும் என்ன அவமானம் செய்ய வேண்டும்? சிவகாமி உன் காலில் விழுந்து மன்னிப்புக் கோரியதாக அழியாத வர்ணத்தில் சித்திரம் எழுதச் செய்ததைக் காட்டிலும் வேறு என்ன அவமானம் எனக்கு வேண்டும்? இதற்காகவா என்னை நீ இங்கே அழைத்து வந்தாய்? இதற்காகவா இந்தக் கலை விழா நடத்தினாய்? ஆகா! துஷ்ட மிருகமே! ஒரு கலையைக் கொண்டு இன்னொரு கலையை அவமானப் படுத்திய உனக்காக எரிவாய் நரகம் காத்திருக்கிறது, பார்!''

''அண்ணா! உனக்கு என்ன வந்துவிட்டது? அந்தப் பல்லவ நாட்டு நடனக்காரி உன்னை என்ன செய்துவிட்டாள்? உடல் இரண்டும் உயிர் ஒன்றுமாக இருந்த சகோதரர்களை இப்படிப் பிரிப்பதற்கு அவளிடம் அப்படி என்ன சக்தி இருக்கிறது? அண்ணா! அண்ணா! என் முகத்தைப் பார்த்துச் சொல்லு! நமது முப்பத்தைந்து வருஷ அந்யோந்ய சிநேகத்தை நினைத்துக் கொண்டு சொல்லு! அன்றொரு நாள் இதே பாறை மீது உட்கார்ந்து நாம் கட்டிய ஆகாசக் கோட்டைகளையும், அவற்றை யெல்லாம் பெரும்பாலும் காரியத்தில் நிறைவேற்றி வைத்ததையும் எண்ணிப் பார்த்துச் சொல்லு! இந்தத் தெய்விக வாதோரா நதியின் சாட்சியாக, இந்தப் பர்வத சிகரங்கள் சாட்சியாக, ஆகாசவாணி பூமிதேவி சாட்சியாகச் சொல்லு. என்னைக் காட்டிலும் உனக்கு அந்தக் காஞ்சி நகரத்துப் பெண் மேலாகப் போய்விட்டாளா? அவளுக்காகவா இப்படியெல்லாம் நீ எனக்குச் சாபம் கொடுக்கிறாய்?''



முன்னைக் காட்டிலும் கடினமான குரோதம் நிறைந்த குரலிலே புத்த பிக்ஷு கூறினார்: ''ஆமாம்! ஆமாம்! புத்த பகவானுடைய பத்ம பாதங்கள் சாட்சியாகச் சொல்லுகிறேன். சங்கத்தின் மீதும் தர்மத்தின் மீதும் ஆணையிட்டுச் சொல்கிறேன். உன்னைக் காட்

உடலுக்கழகு
உடைகள்—அவை,
நாளெல்லாம்,
நாளுக்குநாள்
புதுமையுடன்
மிளிர்வது
அவசியம்.

அழகு?
யாருக்கு
வேண்டும்?

# நீடித்து நிற்கும் அழகான துணிகளுக்கு-டெபிலைஸ்ட் குறியைப் பார்த்து வாங்குங்கள்

'டெபிலைஸ்ட்' துணிகள், சுருக்கம் விழாதவை என நிரூபணம் பெற்றவை. கசங்காது, எனவே நாளெல்லாம் நீடித்த புதுமைத் தோற்றம். உலகெங்கும் நம்பகம் பெற்ற 'டெபிலைஸ்ட்' சின்னம், நீங்கள் தேர்ந்தெடுக்கும் துணிகள் மீது இருக்கிறது.

இந்தியாவின் முன்னணியில் நிற்கும் மில்களான அரவிந்த், பாம்பே டையிங், பின்னி, டிஸிஎம், மஃபத்லால், ஸ்ரீ அம்பிகா, டாடா மற்றும் தாக்கர்ஸே ஆகிய மில்கள் 'டெபிலைஸ்ட்' குறியை உபயோகிக்கின்றன. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் "TEBILIZED" சின்னம் இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்.






**TEBILIZED®**
துணிகள் சுருக்கம்
விழாதவை என
நிரூபணம் பெற்றவை—
நீடித்த நல்ல தோற்றத்திற்கு.

மேட்டூர் பியர்ட்ஸெல் லிட்.,
த.பெ. எண் 7, சென்னை 600 001.

Sista's-MBT-336/75 K-Tam

டிலும் ஆயிரம் மடங்கு எனக்குச் சிவகாமி மேலானவள்தான்! நீயும் உன் சாம்ராஜ்யமும் உன் புத்திர மித்திரர்களும் அவளுடைய கால் தூசுக்குச் சமமாக மாட்டீர்கள். அவளை அவமானப் படுத்திய நீயும் உன் சந்ததிகளும் சர்வநாசமடையப் போகிறீர்கள்! அந்தச் சரணாகதி சித்திரத்தை எழுதிய சித்திரக் கலைஞனின் கதி என்ன ஆயிற்று என்று உனக்குத் தெரியுமா?''

''அடிகளே! அந்தத் துர்ப்பாக்கியனைத் தாங்கள் என்ன செய்துவிட்டீர்கள்?''

புத்த பிக்ஷு பயங்கரமான சிரிப்பு ஒன்று சிரித்தார்.

''பார்த்துக் கொண்டே இரு! இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் யாராவது வந்து சொல்வார்கள்!''

''அண்ணா! ஒன்று நான் தெரிந்து கொண்டேன். இளம் பிராயத்திலிருந்தே பிரம்மசரியத்தையும் பிக்ஷு விரதத்தையும் மேற்கொள்வது ரொம்பத் தவறானது. இல்வாழ்க்கையின் இன்ப துன்பங்களை அனுபவித்து, விட்டுத் தொலைத்த பிறகுதான் சந்நியாசம் மேற்கொள்ள வேண்டும். வாலிபத்திலேயே வாழ்க்கை வைராக்கியம் கொள்கிறவர்கள் உன்னைப் போல்தான் பிற்காலத்தில் யாராவது ஒரு மாயக்காரியின் மோக வலையில் விழுந்து பைத்தியமாகி விடுகிறார்கள்!''

''புலிகேசி! இத்தனை நேரம் பொறுத்திருந்தேன். இனிமேல் சிவகாமியைப் பற்றி நீ ஒரு வார்த்தை சொன்னாலும் என்னால் பொறுக்க முடியாது.''

''அடிகளே! சிவகாமி தேவியிடம் தாங்கள் இவ்வளவு பரிவு காட்டுகிறீர்களே? அவளுடைய கௌரவத்தை இவ்வளவு தூரம் காப்பாற்றுகிறீர்களே? தங்களிடம் சிவகாமி தேவிக்கு இவ்வளவு தூரம் பரிவு இருக்கிறதா? தாங்கள் அவளிடம் வைத்திருக்கும் அபிமானத்தில் ஆயிரத்தில் ஒரு பங்காவது அவளுக்கு உண்டா?''

புலிகேசிச் சக்கரவர்த்தியின் மேற்படி கேள்வி புத்த பிக்ஷுவின் உள்ளத்தை வாள் கொண்டு அறுப்பது போல் அறுத்தது என்பதை அவருடைய முகக் குறி காட்டியது. அந்தச் சொல்ல முடியாத வேதனையை வெகுசிக்கிரத்திலேயே நாகநந்தி சமாளித்துக் கொண்டு திடமான குரலில், ''அந்தக் கேள்வி கேட்க உனக்கு யாதொரு பாத்தியதையும் இல்லை, ஆனாலும் சொல்லுகிறேன்: சிவகாமி உன்னைப் போல் அவ்வளவு கல்நெஞ்சம் கொண்டவள் அல்ல. அவளுக்கு என் பேரில் பிரியம் இருக்கத்தான் செய்கிறது'' என்றார்.

''அண்ணா! நீ இப்படி ஏமாறக் கூடியவன் என்று கனவிலும் நான் எதிர்பார்க்கவில்லை!''

''தம்பி! நான் ஏமாறவில்லை. நாம் அஜந்தா யாத்திரை கிளம்பிய அன்று இரவு சிவகாமி என் உயிரைக் காப்பாற்றினாள்.''

''அது என்ன? உன் உயிருக்கு அப்படி என்ன ஆபத்து வந்தது, சிவகாமி காப்பாற்றுவதற்கு?''

''இந்த விஷக் கத்தியால் என்னை நானே குத்திக் கொள்ளப் போனேன். சிவகாமி என் கையைப் பிடித்து என்னைக் காப்பாற்றினாள்'' என்று புத்த பிக்ஷு கூறியபோது, அவரது அகக் கண் முன்னால் அந்தக் காட்சி அப்படியே தோன்றியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

புலிகேசி புன்னகை புரிந்து, ''ஐயோ! மகா மேதாவியான உன்னுடைய புத்தியா இப்படி மாறிப் போய்விட்டது? சிவகாமி எதற்காக உன் உயிரைக் காப்பாற்றினாள், தெரியுமா? அவளுடைய காதலன் மாமல்லனுடைய கையினால் நீ சாக வேண்டும் என்பதற்காகத்தான். அந்த மூடப் பெண்



**ஆலம்பாடி ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள்**

திருக்கோவிலூர் அருகேயுள்ள ஆலம்பாடி என்ற திவ்ய ஸ்தலத்தில் ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் சாலிக்கிராம ஸ்வரூபியாக எழுந்தருளி அருள் பாலித்து வருகிறார். பக்தர்களின் நன்கொடையோடு இக்கோவில் திருப்பணி நடைபெற்றுப் பூர்த்தியுறும் தருவாயில் இருக்கிறது. இன்னும் ஏறக்குறைய ஆறாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. இத்திருப்பணியில் பங்கு ஏற்க விரும்பும் ஆஸ்திக அன்பர்கள் ஸ்ரீ வி. பாலகிருஷ்ணய்யர், பொருளாளர், ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் ஆலயத் திருப்பணிக் குழு, ஆலம்பாடி போஸ்ட், கண்டாச்சிபுரம் - 60571 தென்ஆர்க்காடு மாவட்டம் என்ற முகவரியோடு தொடர்பு கொள்ளவும்.

---

இன்னமும் அப்படிக் கனவு கண்டு கொண்டிருக்கிறான்!'' என்றார்.

மேலே விவரித்த அண்ணன் தம்பி சம்பாஷணை நேயர்களுக்கு நன்கு விளங்கும் பொருட்டு அன்று மத்தியான்னம் நடந்த ஒரு சம்பவத்தை விவரிக்க வேண்டும். புலிகேசிச் சக்கரவர்த்தியும் புத்தபிக்ஷுவும் சீன யாத்திரிகரும் மற்றும் சாம்ராஜ்யத்தின் பிரமுகர்களும் ஒரு கும்பலாக அஜந்தாவின் அதிசயச் சித்திரங்களைப் பார்வை யிட்டுக் கொண்டு வந்தார்கள். சைத்தியங்கள், விஹாரங்கள் இவற்றின் உள் சுவர்களிலே புத்த பகவானுடைய தெய்விக வாழ்க்கை வரலாறும், அவருடைய பூர்வ அவதாரங்களின் சம்பவங்களும் சித்திரிக்கப்பட்டிருந்தன. வெளித் தாழ்வாரச் சுவர்களிலோ அந்தக் காலத்துச் சமூக வாழ்க்கைச் சித்திரங்கள் சில காணப்பட்டன.

அப்படிப்பட்ட நவீன வாழ்க்கைச் சித்திரங்களில் புலிகேசிச் சக்கரவர்த்தியின் வாழ்க்கை சம்பந்தமான இரு முக்கிய சம்பவங்கள் சித்திரிக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று, புலிகேசிச் சக்கரவர்த்தி இராஜ சபையில் சிம்மாசனத்தில் கம்பீரமாக வீற்றிருக்க, பாரசீக மன்னனிடமிருந்து வந்த தூதர்கள் சக்கரவர்த்திக்குக் காணிக்கைகள் சமர்ப்பித்த காட்சியாகும்.

மேற்படி காட்சி எல்லாருக்கும் மிக்க குதூகலத்தை அளித்ததில் வியப்பொன்றும் இல்லை. ஆனால், மற்றொரு சித்திரம் அப்படி குதூகலத்தை உண்டாக்குவதற்குப் பதிலாக அனைவருக்கும் ஒரு வித அசந்துஷ்டியை உண்டாக்கிப் பின்னால் பெரும் விபரீதம் நேர்வதற்குக் காரணமாயிற்று.

அந்த விபரீதச் சித்திரம், புலிகேசிச் சக்கரவர்த்தியின் பாதங்களில் ஒரு நடனக் கலைவாணி தலையை வைத்து வணங்கி மன்னிப்புக் கோருவது போல் அமைந்த சித்திரந்தான். இதைத் தீட்டிய ஓவியக் கலைஞன் சிறந்த மேதாவி என்பதில் சந்தேகமில்லை. புலிகேசியின் முகத்தையும் தோற்றத்தையும் அமைப்பதில் அவன் கற்பனா சக்தியின் உதவியைப் பயன்படுத்தியிருந்தான். அந்தச் சித்திரத்தில் புலிகேசி துஷ்ட நிக்ரஹம் செய்வதற்கு முனைந்திருக்கும் தேவேந்திரனையொத்துக் கோப சௌந்தரியம் பொருந்தி விளங்கினான். கீழே கிடந்த பெண்ணின் தோற்றத்தில் அளவில்லாத சோகத்தையும் மன்றாடி மன்னிப்புக் கோரும் பாவத்தையும் சித்திரக் கலைஞன் வெகு அற்புதமாக வரைந்திருந்தான். பக்கத்திலே நின்ற சேடிப் பெண்களின் பயந்த, இரக்கம் வாய்ந்த தோற்றத்தைக் கொண்டு அந்த நடனப் பெண்ணின் சரணாகதியைப் பன்மடங்கு பரிதாபமுள்ளதாகச் செய்திருந்தான்.

இவ்வளவுக்கும் பின்னால் சற்றுத் தூரத்திலிருந்து புத்தபிக்ஷு ஒருவர் கவலை ததும்பிய முகத் தோற்றத்துடன் விரைந்து வருவதையும் காட்டியிருந்தான். அந்தப் பிக்ஷுவைப் பார்த்தவுடனேயே, அவர் மேற்படி நடனப் பெண்ணை இராஜ தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகவே விரைந்து வருகிறார் என்ற எண்ணம் எல்லாருடைய மனத்திலும் உதயமாகும்படி இருந்தது. சித்திரங்களை விளக்கிக் கூறி வந்தவர் மேற்படி சித்திரத்தின் தாத்பரியத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொன்னவுடனேயே அங்கிருந்தவர்கள் அனைவரும் ஏககாலத்தில் நாகநந்தி பிக்ஷுவை நோக்கினார்கள். ஒரு கண நேரம் நாகநந்தியின் முகம் படம் எடுத்த பாம்பைப் போல் காட்சி அளித்தது. அடுத்த கணம் நாகநந்தி தம்மை நூறு கண்கள் கூர்ந்து நோக்குகின்றன என்பதை உணர்ந்தார். உடனே அவருடைய முகபாவம் முற்றிலும் மாறிஅதில் புன்னகை தோன்றியது.

''அற்புதம்! அற்புதம்! இந்தச் சித்திரத்துக்கு இணையான சித்திரம் உலகத்திலேயே இருக்க முடியாது! என்ன பாவம்? என்ன கற்பனை? இதைத் தீட்டிய ஓவியப் பிரம்மா யார்? அவருக்குத் தக்க வெகுமதி அளிக்க வேண்டும்!'' என்று நாகநந்தி கூறினார்.

(தொடரும்)

கதை மிகப் பழமையானது: ஒரு குடும்பத்தையே சதிகள் பல செய்து நாசம் செய்து விட்ட ஒரு கொடியவனைக் கதாநாயகன், கோமாளி வேஷம் போட்டுப் பொறுத்திருந்து காலம் பார்த்துக் கணக்குத் தீர்த்த கதை.

நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் நடிப்பாற்றலைப் பல துறைகளிலும் வெளிக்காட்டத் திரைக் கதை வாய்ப்பளித்திருக்கிறது. ஒரு கோமாளிப் பைத்தியக்காரனாக, வீராதி வீரர்களையும் ஒரு கணத்தில் மோதிச் சாய்க்கும் வீர புருஷனாக, மந்திரவாதியாக, பொறுத்திருந்து பழி வாங்கும் தீரனாக, பரம்பரைக் கோடீசுவரனாக அவரைப் பார்க்கிறோம். நகைச்சுவை நடிப்பில் நாகேஷையும் மிஞ்சி விடுகிறார். அதே சமயம், தமக்கே உரிய 'ஸ்டை'லில் பிற்பகுதியில் அபாரமாக நடித்து ரசிகர்களுக்கு எல்லா விதத்திலும் திருப்தியளிக்கிறார். கோடீசுவரனின் மகனாகப் பெண் பார்க்கக் காரில் வந்து இறங்கிய அலட்சிய தோரணையும், மிடுக்கும் போதும். மொத்தத்தில் இந்தப் படம் சிவாஜியின் நவரச நாடகமாகி விடுகிறது.

சிவாஜியின் ஜோடியாக மஞ்சுளா நடிக்கிறார் என்றாலும் அவருக்குக் கண்ணீர் விடவோ, களிப்பில் மிதக்கவோ, துள்ளி எழுந்திருக்கவோ, பிறர் துயர் துடைக்கவோ எந்தவித வாய்ப்பும் இல்லை. ஆனால் முதலிரவன்று கணவனின் கோபத்துக்கு ஆளாகி, விம்மலுடன் தந்தையின் ஆறுதல் வார்த்தைகளையும் பொருட்படுத்தாமல் மாடியிலிருந்து கீழே விரைகிறாரே, அந்த ஒரு விநாடி நம்மை நெகிழ்த்தி விடுகிறார்.

மாறுதலை விரும்புபவர் போல ஜெயசுதா (என்ன அதிசயம்!) புடவை கட்டிக்கொண்டு அடக்கமான குடும்பப் பெண்ணாக இப்படத்தில் அழகாகத் தோன்றுகிறார். வில்லனின் கொலை பாதகச் செயலுக்கு அவர்தான் நேரில் கண்ணால் கண்ட சாட்சி. அமைதியாக நடிக்கிறார்.

கோமாளி ராஜாவுக்கேற்ற கோமாளித் தளபதி நாகேஷ். ஸ்ரீ ராமதூதன் மாதிரி வில்லனிடம் தூது போகிறார். அந்தக் காட்சியில் கொட்டகையே அதிர்கிறது, மக்களின் மகிழ்ச்சி ஆரவாரத்தினால். நாகேஷ் திரையுலகில் தமது பழைய இடத்தைப் பிடித்து விட்டார்!

வில்லனாக வருபவர் பழைய நம்பியார்; அவரது பழைய நடிப்பும் அப்படியே தொடர்ந்து வருகிறது. அதே மிரட்டல், உருட்டல், வீராவேசம்...!

பி. மாதவனின் அனுபவம் நிறைந்த டைரக்ஷன் இவ்வண்ணப் படத்துக்குத் தனிச் சிறப்பை அளித்திருக்கிறது.

பி. என். சுந்தரத்தின் ஒளிப்பதிவு, மஞ்சுளா — சிவாஜி தோன்றும் அற்புதக் கனவுக் காட்சியில் ரசிகர்களின் பாராட்டைப் பெறுகிறது. பாடல்கள் சுவையாயிருக்கின்றன. பெருமைப்பட்டுக் கொள்ளலாம். கவியரசு கண்ணதாசனின் ''நான் நாட்டைத் திருத்தப் போறேன்'' என்ற பாட்டும், வாலியின் ''காதல் ராஜ்ஜியம் எனது'' என்ற பாட்டும் நினைவில் தங்குகின்றன.

பாலமுருகனின் கதையில் பாராட்டுவதற்கு ஒன்றுமில்லை; அரைத்த மாவைத்தான் அரைத்திருக்கிறார்! ஆனால் வசனம் அருமையாயிருக்கிறது: உட்பொருள் அரசியல் பொதிந்து ரசிகர்களின் கையொலியைப் பெறுகிறது. படத்தின் தலைப்பு கோமாளித்தனமாயிருக்கிறதே!

—காந்தன்

பொன் மானுக்கு அருகே பெண் மானைக் கண்டு வியக்கிறாரோ சிவாஜி ?

மன்னவன் வந்தானடி

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



## 56.
## முதல் இலங்கைப் பயணம்

**பயணம் பல விதம் — அதனைப் பயனுறச் செய்வது தனி விதம்**

இடக்கும் மடக்குமான பீடிகையுடன் தொடங்குகிறது கல்கியின் ''கணையாழியின் கனவு'' என்ற சிறுகதை :

*கனவுதான்; ஆனாலும் எவ்வளவு இன்பகரமான கனவு! அசோக வனத்திலிருந்த சீதையிடம் திரிஜடை, தான் கண்ட கனவைக் கூறி வந்தாள். சீதை மிகவும் மகிழ்ச்சியுடன் அதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கடைசியாகத் திரிஜடை, ''.... இராவணனுடைய மாளிகையிலிருந்து செந்தாமரையாள் ஆயிரம் முகமுடைய திருவிளக்கைக் கையில் ஏந்திக் கிளம்பி வந்து விபீஷணன் மனையில் புகக் கண்டேன். ஜானகி! இத்தருணத்தில் நீ என்னை எழுப்பவே கண் விழித்தேன்'' என்று கூறி முடித்தாள். அப்போது சீதை, ''அம்மா! மறுபடியும் தூங்கு. அந்தக் கனவின் குறையையும் கண்டுவிட்டு எனக்குச் சொல்லு'' என்று வேண்டிக் கொண்டாள்.*

*(''இது என்ன? நீர்கூட இராமாயண ஆராய்ச்சியில் இறங்கி விட்டீரோ?'')*

*இல்லை, இல்லை. உதாரணத்துக்காகவே மேற்படி சம்பவத்தைக் குறிப்பிட்டேன்.*

*ரகுராமன் கனவிலிருந்து கண் விழித்ததும் ஏறக்குறையச் சீதையைப் போலவேதான் ஆதங்கப்பட்டான். ''மறுபடியும் தூங்கமாட்டோமா? அந்தக் கனவின் பாக்கியையும் காண மாட்டோமா?'' என்று ஏங்கினான்.*

*(''ரகுராமனா? எந்த ரகுராமன்?'')*

*ஓகோ! மன்னிக்க வேண்டும்.*

*இராமாயணத்தின் கதாநாயகனாகிய ரகுராமன் அல்ல; இவன் கணையாழி கே. பி. ரகுராமன் பி.ஏ.*

*(''கணையாழியா? எந்தக் கணையாழி?'')*

*அட உபத்திரவமே! கணையாழி என்றால், ஹநுமார் இராமரிடமிருந்து வாங்கிச் சீதையிடம் கொண்டு போய்க் கொடுத்த கணையாழி அல்ல. இது, நான் சொல்லப் போகும் கதை நடந்த ஊர். அந்த ஊருக்கு ஏன், ''கணையாழி'' என்று பெயர் வந்தது என்பது வேறு கதை. அதை மற்றொரு சமயம் சொல்லலாம்.....*

அந்த வேறு கதையை மற்றொரு சமயம் கல்கி சொல்லவே இல்லை. சொல்லி இருந்தால், கணையாழி ஊரில் நடந்ததாய் அவர் சொன்ன கதையைப் போல, அதுவும் சுவையாகவே இருந்திருக்கலாம்.

'கணையாழி' என்ற பெயர் கொண்ட ஊர் தமிழ் நாட்டில் எங்கேயும் கிடையாது. எந்தத் தீவில் சீதை சிறைப்பட்டிருக்கையில், அவளிடம் அனுமான், தான் ராம தூதன் என்பதற்கு அடையாளமாய்க் கணையாழியைக் கொடுத்தானே, அந்த இலங்கையிலும் அதன் பெயர் கொண்ட ஊர் கிடையாது. ஆனால், இலங்கையின் தலைநகரில், ''கணையாழியின் கனவின் அன்பர்கள்'' என்ற பெயருடன் இலக்கிய சங்கம் ஒன்று இருக்கவே செய்தது. ''கணையாழியின் கனவு'' என்ற கதையை முகப்பிலும், அந்தப் பெயரை மகுடமாயும் கொண்ட கல்கியின் கதைக் கொத்து 1937 இறுதியில் வெளியானதை அடுத்து, அந்தச் சங்கத்தைக் கொழும்புவாழ் நாடார் இளைஞர்கள் நிறுவினார்கள். குறிப்பாகக் கல்கியின் எழுத்துக்களை ரசித்து மதிப்பிடுவதற்காக இயங்கிய அந்தச் சங்கம், இலங்கையில் அக்காலத்திலேயே கல்கி அடைந்து விட்ட புகழுக்கு ஒரு கணையாழியாகும்.

தமது எழுத்து வன்மையை இலங்கைத் தமிழர்கள் கொண்டாடுகிறார்கள், செந்தமிழ்ச் செல்வர்களான யாழ்ப்பாணத்தார்களே பாராட்டுகிறார்கள் என்பது, அங்கிருந்தெல்லாம் அடிக்கடி வரும் கடிதங்களிலிருந்து கல்கிக்குத் தெரிந்து கொண்டிருந்தது. 1937ம் ஆண்டு மத்தியில் சென்னைக்கு வந்த யாழ்ப்பாண இளைஞர் ஒருவர், கல்கியைக் கண்டு, அவருடைய எழுத்துக்களைத் தம் ஊர்க்காரர்கள் எப்படி மெச்சுகிறார்கள் என்பதைத் தெரிவித்தார்; அத்துடன், இலங்கையின் அழகையும் சிறப்புக்களையும் வர்ணித்து அவற்றை எல்லாம் காண்பதற்காகக் கல்கி வரவேண்டும் என்று அழைப்பும் விடுத்தார். அந்த இளைஞர்தாம்,

பின்னர், ''மாணிக்க வாசகர் அடிச்சுவட்டில்'', ''கௌதம புத்தர் அடிச்சுவட்டில்'' என்ற புனிதப் பயண நூல்கள் எழுதிப் புகழ் பெற்றவரும், கொழும்பிலும் லண்டனிலும் ஒலிபரப்பாளராய் இருந்தவருமான எஸ். சிவபாத சுந்தரம்.



யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலரின் நூல்களைச் சிறு வயதில் படித்ததிலிருந்தே, மரகதத் தீவைக் காண வேண்டும் என்ற ஆசை கல்கியின் மனத்தில் வளர்ந்து வந்தது. சிவபாதசுந்தரமும், தம்மைக் கொண்டாடுவோர் மற்றும் பலரும் அங்கே இருக்கிறார்கள் என்பதை அறிந்ததும் அந்த ஆசை பெருகிற்று. அத்துடன், ஆனந்தவிகடனின் செல்வாக்கையும் செலாவணியையும் இலங்கையில் பெருக்க வேண்டும் என்ற வாசனின் ஆசையும் சேர்ந்து கொண்டது. தடபுடலான ஏற்பாடுகள், விளம்பரங்கள் மூலம் வாசனின் ஆசை வெளிப்பட்டது.

கல்கி என்ற கவர்ச்சியுடன் இன்னொன்றும் இருக்கட்டுமே என்று, அவருடன் மாலியை ஜோடி சேர்த்து விட்டார் வாசன்.



தமிழ் நாட்டிலிருந்து இலங்கைக்குப் போய் வருவது என்பது பிரமாதமான பயணம் அல்லதான். ஆனால், 1938 மே மாத மத்தியில் தொடங்கிய கல்கியின் இலங்கைப் பயணம், பலவிதத்திலும் பிரமாதமாகவே இருந்தது. அதற்கு ஏற்ற கொட்டு மேளமாய் அமைந்தது, அம்மாத 15ஆம் தேதிய விகடன் இதழில் வெளியான முழுப் பக்க அறிவிப்பு :



ஆனந்தவிகடன் துணை ஆசிரியர் கல்கியும் சித்திரக்காரர் மாலியும் இவ்வாரம் இலங்கைக்குப் பயணமாகிறார்கள். இந்தச் செய்தியைக் கேட்டு இலங்கையில் உள்ள எவரும் திடுக்கிட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம். இலங்கையைச் சுருட்டி இந்தியாவுக்கு எடுத்துக் கொண்டு வந்துவிடும் உத்தேசம் அவர்களுக்குக் கிஞ்சித்தும் கிடையாது. ஆகவே சிங்களவர்கள் பயப்பட வேண்டியதில்லை. இலங்கை அரசியல் பிரச்னைகளை எல்லாம் ஆராய்ந்து பைஸல் பண்ணிவிடும் நோக்கம் கொஞ்சம்கூடக் கிடையாது; எனவே, இலங்கை சர்க்கார் கவலைப்பட வேண்டியதில்லை. இலங்கை வாழும் தமிழர்களும் இந்தச் செய்தியினால் சிறிதும் கலக்கமடைய வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம் ; ஏனென்றால் அவர்களைப் பிரசங்க மாரியில் மூழ்கடிக்கும் உத்தேசம் கிடையாது. ஆனால், இலங்கையில் வாழும் தமிழ் நாட்டுச் சகோதரர்களைப் பார்க்கவும், அவர்களோடு அளவளாவவும் வருகிறவர்களுக்கு விருப்பம் உண்டு.

இம்மாதம் 15ந் தேதி இருவரும் ஆகாய விமானம் மூலமாக இலங்கை சேர்வார்கள்....

''அடே அப்பா ! ஆகாய விமானத்திலா !'' என்று, தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் விகடன் வாசகர்கள் அண்ணாந்து வியந்தார்கள்.

கல்கியும் மாலியும் ஏறிச் சென்ற விமானத்தில் அவர்



- சிவகுருநாதன்
- அம்பிகைபாகன்
- அரியரத்தினம்
- சிவபாதசுந்தரம்





"நீங்கள் நூறு ஆண்டுகள் வாழ்ந்ததற்கு முக்கிய காரணம் என்ன?"
"முக்கியமான காரணம் நான் 1875ல் பிறந்ததுதான்." — லயன்-பாலி

---

களைத் தவிர, வேறு பிரயாணி ஒருவர் கூடக் கிடையாது; மூன்றாவது பிரயாணிக்கு இடம் இல்லாதபடி அவ்வளவு சிறிய தும்பி விமானம். அந்தக் காற்றாடி விமானம் பறந்த வேகம் மணிக்கு 120 மைல். அதற்கு ஐந்து மடங்கு வேகத்துடனும், நூறு மடங்கு பிரயாணிகளுடனும் ஜம்போ ஜெட் விமானங்கள் பறக்கும் இக்காலத்தில், கல்கியின் அந்த விமானப் பயணத்தை நினைக்கையில் வேடிக்கையாய் இருக்கிறது. ஆனால் அப்போது அது அதிசயமாய் இருந்ததால், அதைப் பற்றி கல்கி, பல ஆச்சரியக் குறிகள் கேள்விக் குறிகளுடன் இரண்டு பக்கம் எழுதினார்.

...இதோ கிளம்பி விட்டது. வேலிக்கு மேலே, வேப்பமரத்துக்கு மேலே, இதோ பனை மரங்களுக்கும் மேலே கிளம்பிவிட்டதே! அடேடே! அதோ எங்களை வழியனுப்ப வந்திருந்தவர்கள் எல்லாரும் அப்படித் திடீரென்று சிறுத்துப் போய்விட்டார்களே! இது என்ன? அவ்வளவு பெரும் அவ்வளவு அகஸ்தியர்களாக அல்லவா ஒரு நொடியில் மாறிவிட்டார்கள்? ஓகோ! விமானம் மேலே மேலே ஏறிக் கொண்டிருப்பதனால், அவர்கள் அப்படிக் குறுகினார்கள் போலும்! எவ்வளவு உயரம் போயிருப்போம்!....

அச்சமயம் விமான ஸாரதி கீழே சுட்டிக் காட்டி, கையிலிருந்த தேசப் படத்திலும் ஓர் ஊரைச் சுட்டிக்காட்டினான். செங்கல்பட்டு! இது என்ன அநியாயம்! கிளம்பிப் பதினைந்து நிமிஷம்கூட இருக்காது! அப்படியானால் விமானம் எவ்வளவு வேகமாய்ப் போக வேண்டும்?....

"திருச்சினாப்பள்ளியில் 15 நிமிஷ நேரம் தாமதிப்பு. விமானத்துக்குப் பெட்ரோல் ஊற்றுகிறார்கள். நாமும் உடன் கொண்டு வந்த சிற்றுண்டியைச் சாப்பிடலாமா என்று பார்த்தோம். ஆனால், எப்படிச் சாப்பிடுகிறது? பத்து மணிக்குச் சென்னையில் கிளம்பிய விமானம் இங்கே பதினொன்றரை மணிக்கு வந்து விட்டது! அந்த நாளில் கட்டை வண்டியில் எட்டு மைல் தூரம் போனால் நடுவில் ஆற்றிலோ குளத்திலோ இறங்கிக் கட்டுச் சாதம் சாப்பிடுவதுண்டு. இங்கே நாங்கள் ஒரு தேசத்தைவிட்டு இன்னொரு தேசத்துக்குப் பிரயாணம் செய்தும், நடுவிலே கட்டுச் சாதம் சாப்பிட வசதி இல்லை!

கட்டுச் சாதம் கட்டியபடியே இருக்க, பிற்பகல் இரண்டே முக்கால் மணிக்குக் கொழும்பு போய்ச் சேர்ந்தார் கல்கி. இறங்கிய நேரம் முதல் இரண்டு வார காலம், அவரும் மாலியும், ஆங்கிலத்தில் சொல்வது போல், "சூறாவளிச் சுற்றுப் பிரயாணம்" செய்தார்கள். இயற்கை படைத்த எழில் காட்சிகள், மனிதன் படைத்த சிறிய பெரிய நகரங்கள், அவன் வளர்த்த பயன்தரு தோட்டங்கள், சரித்திரச் சிறப்பு அல்லது சமயச் சிறப்பு வாய்ந்த இடங்கள் – இவற்றை எல்லாம் ரயிலிலும் காரிலுமாய்ச் சுற்றிப் பார்த்தார்கள். அங்குள்ள தமிழர்களைப் "பிரசங்கமாரியில் மூழ்கடிக்கும் உத்தேசம் இல்லை" என்று முன்பு அறிவிப்பில் சொல்லி இருந்த போதிலும், ஒவ்வோர் ஊரிலும் அதற்கு மாறாகத்தான் கல்கி நடந்து கொண்டார்; அப்படி நடந்து கொள்ளும்படி அந்தந்த ஊர்க்காரர்கள் கட்டாயப் படுத்தினார்கள்.

பயணத் திட்டம், போக்குவரத்து, ஜாகை வசதிகள், வரவேற்புக் கூட்டங்கள் – இவை எல்லாவற்றையும், அப்போது "ஈழகேசரி"யின் ஆசிரியராக ஆகியிருந்த சிவபாதசுந்தரம், முன் கூட்டியே "ஒழுங்கு" செய்திருந்தார். கல்கியும் மாலியும் வந்தது முதல் திரும்புகிறவரை, அவர்களுடன் அவர் இணைந்திருந்து துணை புரிந்தார்.

கல்கி சம்பந்தமான ஏற்பாடுகளில், அவருடைய பழைய நண்பர்கள் இருவர் சிவபாதசுந்தரத்துடன் சேர்ந்து கொண்டார்கள். அவர்களில் ஒருவர், யாழ்ப்பாணத்தில் ஸ்வாமி விபுலானந்தர் நடத்திய வைத்தீஸ்வர வித்தியாலயத்தின் தலைமை ஆசிரியர் எஸ். அம்பிகைபாகன். அவர் சென்னையில், ராஜதானிக் கல்லூரியின் மாணவராய் இருந்த போதே, அவரைக் கல்கிக்குத் தெரியும். மயிலாப்பூர் ராமகிருஷ்ண மடத்தில் ருத்ரானந்தரைக் கல்கி காணச் செல்கையில், மாணவர் அம்பிகைபாகன் சில சமயங்களில் அங்கே வரக் கண்டதுண்டு. அவருடன் அளவளாவி, சமயத்திலும் சமூகத் தொண்டிலும் அவருக்கு இருந்த பற்றையும் ஈடுபாட்டையும் அறிந்து மெச்சியதும் உண்டு.

இன்னொருவர், "பாரதத் தாயின் சேவைக்கென யாழ்ப்பாணத்தார் அளித்த நன்கொடை" எனக் கல்கி வர்ணித்த எம். சிவகுருநாதன்; கல்கியுடன் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் வசித்தவர். மீண்டும் கல்கியின் சொற்களில், "தமிழ் நாட்டுக்காக சர்வசங்க பரித்தியாகம் செய்தவர் என்றால் அவர்தான்."

அவர்கள் மூவரின் துணையுடன் கல்கி செய்த இலங்கைப் பயணம், ஏற்கனவே சொன்னபடி, இரண்டு வாரம் நடைபெற்றது. பின்னர் அது, பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்ட ஒரு பயண இலக்கியமாய், மாலியின் சித்திரங்களுடன், ஜூன் ஐந்தாம் தேதியிலிருந்து

விகடன் இதழ்களில் தொடராக வெளியாயிற்று. ''இலங்கை யாத்திரை'' என்ற அந்தக் கட்டுரைத் தொடரை கல்கியின் தொடர்கதை ஒன்றைப் போலவே மிக்க ஆவலுடன் வாசகர்கள் படித்தார்கள்.

அன்று கல்கி எழுதிய ''இலங்கை யாத்திரை'' இன்றும்கூட, பயண நூல் எழுதுவோர் சிலருக்கு முன் மாதிரியாய் உதவுகிறது; உத்தியும், பாணியும் சுவைகளும் அப்படி அமைந்துவிட்டன அதில்.

(மீண்டும் அந்த யாத்திரைக் கட்டுரைகள், 1955ல் ஆனந்த விகடன் வெளியிட்ட ''கல்கி வளர்த்த தமிழ்'' என்ற தொடரில் பிரசுரமாயின. இடையே, அவை அடங்கிய புத்தகம் ஒன்றும், தமிழ்ப் பண்ணை வெளியீடாக ஒரு பதிப்பு வந்தது.)

அந்த யாத்திரைக் கட்டுரைகளில் அடங்கிய அநுபவங்களை, வாசகர்களுடன் பகிர்ந்து கொண்டதற்கு முன்னால், பயணம் செய்கையிலேயே நாளுக்கு ஒரு கடிதம் மூலம் தமது குடும்பத்தாருடன் சுருக்கமாய்ப் பகிர்ந்து கொண்டார் கல்கி. நம் குடும்பத்தாருக்குத்தானே எழுதுகிறோம் என்ற எண்ணத்தில், அவற்றினூடே அவர் தற்பெருமையான அனுபவங்களையும் தெரிவித்தார். அவற்றைப் படிக்கையில் அவருடைய குடும்பத்தார் எப்படி மகிழ்ந்திருப்பார்களோ, அப்படியே நாமும் மகிழலாந்தானே!

(கொழும்பு 15—5—38) இன்றைக்கு இரண்டே முக்கால் மணிக்கு நான் இங்கே சௌக்கியமாய் வந்து சேர்ந்தேன்.... ஏரோப்ளேனில் வந்ததில் எவ்வித அசௌகரியமும் இல்லை. ஜிலுஜிலுவென்று காற்று அடித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் எல்லாரும்கூட வந்திருந்தால், கீழே தெரிந்த ஊர்களையும் மரங்களையும் ரயில் பாதையையும் பார்த்துப் பார்த்து சந்தோஷப்பட்டிருப்பீர்கள். எலக்கும் உற்சாகமாய் இருந்திருக்கும். ஆனால் ஏரோப்ளேன்காரன் நம் எல்லாரையும் ஏற்றிக் கொண்டு போகமாட்டான், என்ன செய்கிறது ?....

ஏரோப்ளேன் இறங்குகிற இடத்தில் அநேகம் பேர் வந்து எங்களை அழைத்துப் போனார்கள். ஓயாமல் பத்துப் பதினைந்து பேர் எங்களைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். இதுவரை நூறு பேர் வந்து நாங்கள் இருக்கும் அறையில் எங்களைப் பார்த்திருப்பார்கள்....

(18—5—38) எங்களுக்கு இங்கே நேற்றைய தினம் இரண்டு இடத்தில் விருந்து நடந்தது. சாயங்காலம் நடந்த விருந்தின் போது போட்டோ எடுத்தார்கள். அந்த போட்டோ ஒன்றை நான் வரும்போது கொண்டு வருகிறேன்.

நேற்று மத்தியானம் ஒரு புத்தர் கோயிலுக்குப் போனோம். அது ரொம்பவும் பழைய காலத்துக் கோவில். கட்டி ஆயிரம் வருஷம் இருக்கலாம். அதில் அழகான சித்திரங்கள் எல்லாம் இருக்கின்றன. நீங்கள் பார்த்தால் ரொம்பவும் சந்தோஷப்படுவீர்கள்.

(கொழும்பு 23—5—38) முந்தா நாள் நாங்கள் நுவரேலியா என்னும் இடத்துக்குப் போயிருந்தோம். அது இந்தத் தேசத்துக்கு ஊட்டி மாதிரி. ரொம்பவும் குளிர்ச்சியான



# கனடா கீர்த்தனை!

இந்திய-கனடா நட்புறவுச் சங்கம் சென்னையில் உள்ளது. இருபத்திரண்டு பேர் அடங்கிய கனடா மாணவர் குழு, இச் சங்கத்தின் விருந்தினராகச் சென்னையில் தங்கி யிருந்தது. இக் குழுவினருக்காக ஒரு வீணைக் கச்சேரியைக் குமாரி காயத்ரி நிகழ்த்தினார். 'நவரச கானடா' ராகத்தில் ஒரு கீர்த்தனையை வாசிக்கு முன்பாக ராகத்தின் பெயரை 'மைக்'கில் சொன்னதும் குழுவினரிடையே ஒரு சலசலப்பும் ஆர்வமும் தென்பட்டது. பாவம்! தங்கள் நாட்டுப் பெயரைச் சொன்னதும் ஏதோ கனடா நாட்டு இசையைத்தான் வீணையில் வாசிக்கப் போகிறார் என்று எண்ணிய அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றம்! என்றாலும் கீர்த்தனையை ரசிக்காமல் போகவில்லை. அவர்களுக்காகச் சில மேற்கத்திய டியூன்களையும் பின்னர் வாசித்துக் காட்டினார் காயத்ரி.

திரு வி.எஸ். மணியன்,சொல்லக் கேட்டவர்: ''ராதா''



''இந்த விமானம் ஆபத்தில்லாததுதானே?''

''பூமியில் இதைப் போன்ற ஆபத்தில்லாத வாகனம் வேறு கிடையாது!''

ஏற்பூமர்-1001 - எம்.எஸ்.

---

இடம். போகும்போது அநேக இடங்களில் அருவிகள் விழுகின்றன....

இங்கே ஓர் இடத்தை, சீதையை இராவணன் வைத்திருந்த அசோகவனம் என்று சொல்கிறார்கள். சீதை குளித்த இடம் என்று ஒரு சின்ன ஓடையைக் காட்டுகிறார்கள்.

நேற்று திரும்பவும் கொழும்புக்கு வந்தோம். நேற்று சாயங்காலம் ஒரு பெரிய மீட்டிங் நடந்தது. அதில் நான் பிரசங்கம் செய்தேன். ''சென்னையில் காங்கிரஸ் மந்திரிகளின் ஆட்சி''என்னும் விஷயத்தைப் பற்றிப் பேசினேன். ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்கள். ஹால் முழுதும் நிறைந்திருந்தது. என்னுடைய பேச்சு ரொம்ப நன்றாய் இருந்தது என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

(கொழும்பு 25–5–38) நாங்கள் நேற்று கடற்கரை ஓரமாய்ப் போகும் ரயிலில் ஏறி எழுபத்தைந்து மைல் தூரத்தில் உள்ள காலி என்னும் ஊருக்குப் போய் வந்தோம். போகும் வழியெல்லாம் இரண்டு பக்கமும் தென்னந்தோப்புகள் வெகு அழகாய் இருந்தன. சமுத்திரமும் கூட வந்து கொண்டிருந்தது....

நேற்று சாயங்காலம் இங்கே இன்னொரு பெரிய பொதுக் கூட்டம் நடந்தது. அதில் நான் பேசினேன். மாலி மாமா கறுப்புப் பலகையில்,மகாத்மா காந்தி, ராஜாஜி இவர்களுடைய படங்களைப் போட்டுக் காட்டினார். எல்லாரும் ரொம்பவும் சந்தோஷப்பட்டார்கள்.

கலைத் திறமையால் மாலி மக்களுக்கு மகிழ்ச்சியூட்டியது பற்றி, இன்னும் விரிவாகப் பின்னர் தமது கட்டுரைத் தொடரில் கல்கி எழுதினார் :

கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலும் நடந்த கூட்டங்களில் ஒரு புதிய முறையைக் கையாண்டோம். பெரும்பாலும் பிரசங்கங்கள், சென்னையில் நடக்கும் காங்கிரஸ் ஆட்சி பற்றியோ, அல்லது தமிழர் கலைகளைப் பற்றியோதான் நடந்தன. காங்கிரஸ் ஆட்சி பற்றிப் பேசும் போது, காந்திஜி, ராஜாஜி முதலியவர்களின் பெயர்கள் வந்தே தீர வேண்டும் அல்லவா? அப்போதெல்லாம் மேடையில் தயாராய் வைத்திருந்த கறுப்புப் பலகையில், மாலி சாக்பீஸினால் காந்திஜி ராஜாஜி முதலியோரின் படத்தை எழுதுவார். பலகையில் அவர் இப்படி இரண்டு கோடு, அப்படி இரண்டு கோடு போட்டவுடனே, காந்திஜியின் முகம் தோன்ற ஆரம்பித்துவிடும். சபையில் அவ்வளவு பேரும் முகம் மலர்ந்து நோக்குவார்கள். இன்னும் நாலு கோடு இழுத்ததும் பொக்கைவாய்ச் சிரிப்புடன் காந்திஜி காட்சி அளிப்பார். சபையோரின் குதூகலத்தைச் சொல்லி முடியாது. இரண்டு நிமிஷம் சபை அல்லோலகல்லோலமாய் இருக்கும். ராஜாஜியின் புகை மூக்குக் கண்ணாடியைப் போட்டதும் இத்தகைய குதூகலம் சபையில் உண்டாகும்.

கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு 26ம் தேதி காலையில் புறப்பாடு — சிவபாதசுந்தரம் அமர்ந்திருந்த காரில் சாலை வழிப் பயணம் — அவரும் சிவகுருநாதனும் துணை — மொத்தம் இருநூறு மைல் தூரம் — பாதித் தொலைவில் அநுராதபுரம் — அந்தப் பழம் பெரும் நகரின் சின்னங்கள் — புத்தர் ஞான ஒளி அடைந்த போதித் தருவின் கிளைத் தோன்றலான அரச மரம்.

மாலை வேளையில் யாழ்ப்பாணத்தை அணுகுகையில், ''அந்தப் பக்கங்களை முன் எப்போதோ பார்த்தது போல் இருக்கிறதே !'' என்று கல்கிக்குத் தோன்றிற்று. அதற்குக் காரணம், அவர் பிறந்து வளர்ந்த பொன்னி நாட்டைப் போல் அது காட்சி அளித்ததேயாகும். ''தஞ்சாவூர் ஜில்லாவில் கடற்கரையை அடுத்த பிரதேசங்கள் இப்படியேதான் இருக்கின்றன.''

யாழ்ப்பாணத்தில் கல்கியும் மாலியும் தங்கி இருந்த நாட்கள் மூன்று ; தங்கி இருந்த இடம், காலஞ்சென்றவர் பொன்னம்பலம் ராமநாதனின் இல்லம். ஓர் அமெரிக்க மாதாய் இருந்தும், கணவருக்கு ஒப்பாக ஹிந்துப் பண்பாட்டின் உறைவிடமாய் விளங்கிய லேடி ராமநாதன் அவர்களை உபசரித்தார். ''இந்த மாதிரி விருந்தோம்பலைப் பார்த்ததே இல்லை'' என்றும், ''லேடி ராமநாதன் எங்களிடம் காட்டிய அன்பு தாயின் அன்பைக் காட்டிலும் சிறந்தது'' என்றும் பின்னர் எழுதினார் கல்கி.

அந்த மூன்று நாளும் மாலை நேரங்களில், கல்கியின் பேச்சுத் திறமையையும் மாலியின் சித்திரத் திறமையையும் யாழ்ப்பாண வாசிகள் கூட்டம் கூட்டமாய் ரசித்தார்கள். மற்ற நேரங்களில் அவர்களுடைய தனிச் சிறப்பான தமிழைக் கல்கி ரசித்தார்.

தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்று பொருள் என்பதாகத் தமிழன்பர்கள் கூறுவார்கள். ''தேமதுரத் தமிழோசை'' என்றும், ''அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி'' என்றும் கவிகள் பாடி இருக்

கிறார்கள். ஆனால், சென்னைப் பட்டணத்தில் ஜனங்கள் பேசுகிற தமிழை ஒருவன் கேட்டால், அவனுக்குத் தமிழின் இனிமையில் நிச்சயமாகச் சந்தேகம் உண்டாகத்தான் செய்யும்.

பேசுகிற தமிழிலும் இனிமை உண்டு என்பதைக் காண வேண்டுமானால் நாம் தெற்கு நோக்கிச் செல்ல வேண்டும். பழகு தமிழின் இனிமையைத் தமிழ் நாட்டில் திருநெல்வேலி ஜில்லாவில்தான் ஒருவாறு உணர்கிறோம். ஆனால் அதன் இனிமையைப் பூரணமாக அனுபவிக்க வேண்டுமானால் யாழ்ப்பாணத்துக்குச் செல்லுங்கள் என்று சொல்லுவேன்.

தமிழும் தமிழ்ப் பண்பாடும் இலங்கையில் எப்படி வெகு காலத்துக்கு முன்னரே பரவிற்று என்பதைப் பற்றி விரிவாக அக்கட்டுரைத் தொடரில் கல்கி ஆராய்ந்திருந்தார். அதில் ஒரு பகுதி சோழ மன்னர்களைப் பற்றியது :

...ராஜேந்திர சோழனும் ராஜ ராஜ சோழனும் அவனுடைய மகன் ராஜேந்திர சோழனும் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்று எவ்வளவோ வீர தீரச் செயல்கள் புரிந்தார்கள். ஆனால், இம்மாதிரி தமிழ் நாட்டு மன்னர்கள் இலங்கைக்குப் படையெடுத்துப் போனதெல்லாம் எப்போதும் ராஜ்யம் பிடிக்கும் ஆசையினால் அல்ல. அநேக சமயங்களில், இலங்கை அரசர்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டு தமிழ் நாட்டு அரசர்களைச் சகாயத்துக்கு அழைத்தது உண்டு. இலங்கை அரசர்களுக்கும் தமிழ் மன்னர்களுக்கும் கல்யாண சம்பந்தமும் உண்டு. இன்னும் சில சமயம் இலங்கை ராஜ வம்சத்தில் குழந்தைகள் இல்லாமற் போகும் போது தமிழ்நாட்டு அரசகுமாரர்களில் ஒருவனை அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு போர்க் கோலத்துடனே, சிநேக பாவத்துடனே இலங்கைக்குத் தமிழ் மன்னர்கள் போனார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து எத்தனையோ தமிழர்களும் போயிருக்க வேண்டும் அல்லவா !

இந்த வரிகள், பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு கல்கி எழுதப் போகும் ''பொன்னியின் செல்வன்'' நாவலுக்கு, அப்போதே அவருடைய மனத்தில் கற்பனை அலைகள் எழுந்திருக்குமோ என்று எண்ணச் செய்கின்றன. அந்த நாவலை எழுதுவதற்கு முன்னால், மீண்டும் கல்கி அந்த மரகதத் தீவுக்குச் செல்லப் போகிறார்; அதற்கான களங்களைக் காணப் போகிறார் ; காணும் களங்களை இலக்கியக் காட்சிகளாய்ப் படைக்கப் போகிறார்.

ஆகவே, இந்த முதல் பயணத்தின் இறுதியில் கல்கி விடைபெற்றுக்கொண்ட போது சொன்ன ''போய் வருகிறோம்'' என்ற சொற்கள், வெறும் உபசாரச் சொற்களாய்ப் போய்விடவில்லை.

விருந்தாளிகளை வழியனுப்பிய கையுடன், சிவபாத சுந்தரம், ''ஈழகேசரி'' 5–6–38 இதழில் வரைந்த கட்டுரை, இலங்கைவாழ் தமிழர்கள் எல்லாருடைய உணர்ச்சியையுமே வெளிப்படுத்துவதாய் அமைந்தது :

கடந்த செவ்வாய்க்கிழமை காலை, ரத்மலான விமான நிலையத்தில் நின்று கொண்டிருந்தேன். சட்டென்று கிளம்பிய விமானத்தில் இருந்த இருவர் என் இருதயத்தை அப்படியே பறித்துக் கொண்டு சென்றனர். அவர்கள் தங்கள் இருதய கமலங்களிலிருந்து ஒரு சில இதழ்களை என்னகத்தே விட்டுவிட்டுப் போகாதிருந்தால், அங்கிருந்து வீடு வந்து சேர்ந்திருக்கமாட்டேன்.

ஆனந்தவிகடனின் கல்கியும் மாலியும் அன்று காலை சென்னைக்கு மறுபடியும் பறந்து போயினர். கடந்த பதினைந்து தினங்களாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் ஸ்ரீ மகாலிங்கமும் இலங்கையில் முக்கியமான இடங்களையும் மனிதர்களையும் பார்த்துவிட்டு இத்தீவின் இயற்கை வனப்பையும், செழிப்பையும், யாழ்ப்பாணத் தமிழ் மக்களின் அறிவாற்றலையும் மறக்க மாட்டாமற் சென்றுவிட்டனர்....

விசேஷமாக யாழ்ப்பாண மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டே கல்கியும் மாலியும் வீடு திரும்பியிருக்கிறார்கள்..

சென்னைக்குத் திரும்பிய கல்கி அம்பிகைபாகனுக்கு எழுதிய கடிதம் :

(9–6–38) ...தாங்கள் என்னிடம் காட்டிய அன்பையும், எங்களை அறிமுகப்படுத்துவதற்காகச் செய்த முயற்சிகளையும் பற்றி ஒன்றுமே சொல்வதற்கில்லை. நான் வருவதற்கு முன்பே என்னைப் பற்றி எழுதித் தயார் செய்து வைத்தீர்கள்....

யாழ்ப்பாணத்தில் நான் தங்கியிருந்த சில தினங்களும் என் வாழ்க்கையிலேயே ஓர் இனிய ஞாபகமாய் இருக்கும் என்று நம்புகிறேன். யாழ்ப்பாணத்தில் நான் கண்ட உள்ளன்பை இதற்கு முன் வேறு எங்குமே கண்டதில்லை. ஒருவேளை என்னுடைய முற்பிறப்பில் நானே யாழ்ப்பாணத்தானாய் இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

(தொடரும்)

---

**குரங்கிலிருந்து .....!**

மலேசியாவில், தென்னை மரத்தில் ஏறித் தேங்காய்களைப் பறிப்பதற்கு ஆட்களை அமர்த்தினால் அவர்களுக்கு நிறையப் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதனால் அந்த வேலைக்குக் குரங்குகளைப் பழக்கி யிருக்கிறார்கள் ! குரங்குகள் முற்றிய தேங்காய்களாகப் பார்த்துப் பறித்துக்கொண்டு கீழே இறங்கிவிடுகின்றன ! – சரோஜா ராமச்சந்திரன்



# Vanishing Resources

Envisage life 35 years hence. Envisage a time when perhaps not a drop of oil as we know it, is available. That's what's likely to happen. In 1974, the world's proven and potential oil reserves were 651.5 billion barrels and production was nearly 20 billion barrels that year. That rate of production by itself would wipe out all oil reserves in roughly 33 years.

Only another twenty five years are required for us to see the possible end of tin, lead and copper. Even iron, which is the world's second most abundant metal, may be exhausted in a hundred years. All this depletion is on the assumption that we continue to consume these non-renewable resources at the rate we are today. But our consumption of all these necessities of life is actually increasing. Hence, the world's resources are vanishing.

Responsible citizens of the world have recognised the perils that face our descendents. The prestigious Club of Rome has issued a chilling prediction in its study, *The Limits of Growth*, which warns that, "Barring radical reordering of priorities, the world will breed, consume and foul itself back into the Dark Ages within 100 years." That's why research is being conducted to find alternatives to existing resources. In some experiments, solar energy is replacing fuel oil. In others, plastics are even replacing certain metals. And synthetic fibres have already replaced cotton on a vast scale.

But that is not enough. A responsibility of such magnitude must be shared by all.

*SHARING THE RESPONSIBILITY*

**DALMIA CEMENT (BHARAT) LTD.**

Regd. Off. & Works Dalmiapuram, Tamil Nadu, 621651
H.O. : 4, Scindia House, New Delhi-110001

**ROCKFORT Brand Cement**



# புத்தலப் புகார்கள்

(இலக்கியத்தில் மட்டும்தான் புத்தலே புகவேண்டுமா என்ன? புகார்களிலும் காலத்துக்கேற்ப எத்தனையோ மாறுதல்கள்!)



''என்ன விடு சார் இது!... நானும் இது வரைக்கும் எத்தனையோ வீடுகளிலே குடியிருந்திருக்கேன்...இந்த வீடு மாதிரி மோசமானவீட்டைப் பார்த்ததே இல்லே... ஒரு மழை பெய்தால்கூட ஒழுக மாட்டேங்கறதே!.... ஒழுகினால் ஒரு குடம் தண்ணீராவது கிடைக்குமேன்னு பார்க்கிறேன்!...''

''போ, பாட்டி! என்ன கதை சொல்றே, நீ!... ஒரு ஜேம்ஸ் பாண்ட், பான்டம், பூமாஞ்சு அல்லது கார்த் கதைகூடச் சொல்லத் தெரியல்லியே உனக்கு!.. திரும்பத் திரும்ப ராமன், கிருஷ்ணன் கதை தானு?...''



''சே! இதையும் போய் ஒரு சினிமான்னு எடுத்திருக்காங்களே!... படமா இது!... ஒரு கற்பழிப்புக் காட்சியோ, காபரே டான்ஸோ, ஆபாச வசனமோகூட இதிலே இல்லியே!... சுத்தத் தண்டம் சார்!....''

''ஆபீஸ்லே எல்லாப் பயல்களும் மெடிகல் பில் போட்டுப் போட்டுப் பணத்தை அள்ளறாங்க.... நமக்கு என்னடான்னா வெறும் வயித்து வலியும், தலை வலியும்தான் வருதே தவிர ஒரு டைபாய்டோ, டபிள் நிமோனியாவோ, மலேரியாவோ வர மாட்டேங்குதே! என்ன அநியாயம் இது!....''

''பேப்பர்லே கவாரசியமே இல்லே... ஒரு கொலே, கொள்ளை, கள்ள நோட்டு வழக்கு—எந்தச் செய்தியும் இல்லே... போலி டாக்டர் சமாசாரமும் காணோம்.... அதுதான்போகட்டும்னா, பல்லவன் பஸ் விபத்துச் செய்திகூட எதையும் காணுேமே!...''



'' என்ன மாப்பிள்ளே பார்த்திருக்கிறீர், ஐயா, நம்ம பெண்ணுக்கு!... ஒரு கிருதாவைக் காணேம், மீசையும் இல்லே..... டைட்லோ எலிபெண்ட் பாட்ஸோ போடக் காணுேம். தலையை வேறே இப்படி 'க்ளோஸ் டிரிம்' பண்ணிண்டிருக்காரே!''

'' ஏண்டாப்பா, ஹாஸ்டல்லே சேர்ந்தோம்னு இருக்கு. 'ராகிங்' பத்திப் பேச்சு மூச்சையே காணுேமே!... நாம ஜூனியரா இருந்தபோது எல்லாரும் நல்லா 'ராக்' பண்ணுங்க.... இப்போ ஜூனியர்களை 'ராக்' பண்ணலாம்னா பாழாய்ப் போன சட்டம் வந்துடுத்தே! எல்லாம் நம்ம துரதிர்ஷ்டம்!''



''ஆபீஸ்லே கலகலப்பே போயிடுத்து சார். அவனவன் டாண்ணு பத்து மணிக்கு வந்துட்டு அஞ்சு மணிக்கு வீட்டுக்குப் போயிடறான்.... ஆபீஸ்டயத்திலே ஒரு சீட்டாட்டம் இல்லே, ஏலம் இல்லே, சினிமாவுக்குப் போக முடியல்லே!.. அரட்டைக்குக் கூடப் பஞ்சமாப் போயிடுத்தே!....''

கருத்து : தராஜா

படம் : விவேக்

## சினிமாக் கதை : 6

# உயிர் வேண்டுமா, இதோ!

ராஜ்ஸ்ரீ



'டிரிங், டிரிங்!'

தொலைபேசி மணி அடித்தது. பமீலா படுத்தவாறே எடுத்தாள். ''ஹலோ!''

''அட, நீங்கள் பெண்ணா?''

''இல்லே, பேய்! வாட் நான்சென்ஸ் இஸ் திஸ்?'' எழுந்து உட்கார்ந்தாள்.

''நான் லேடியோடுதான் பேசுகிறேன். பை தி பை, நீங்க மிஸ்ஸா அல்லது...''

''யாராயிருந்தால் உங்களுக்கு என்ன?''

''என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்? மிஸ்ஸாயிருந்தால் நாளை மாலை ஆறு மணிக்குப் பலான ரெஸ்டாரண்டிலே உங்களுக்குத் தேநீர் விருந்து அளிப்பேன்!''

பமீலா பல்லைக் கடித்துக் கொண்ட அதே நேரத்தில் ஒரு முடிவுக்கு வந்தாள். ''சரி, வருகிறேன்! உங்க பேர் என்ன, சொல்லலியே!''

''என் பேர் சந்தர். முன்பின் அறிமுகமில்லாத என்னை அந்தக் கும்பலிலே கண்டு பிடிக்க முடியுமா? அதனாலே ஓர் அடையாளம் சொல்கிறேன். நீலப் பாண்டும், வெட்டிச் சட்டையும் போட்டுக் கொண்டு வருகிறேன். காரிடனே ஒட்டிய வாசலிலே நிற்கிறேன். — ஆமாம், உங்க பேரை நீங்க சொல்லலியே!''

''நீங்க கேக்கலே, சொல்லலே. இப்போ சொல்றேன். என் பேர் பிர...தி...மா!''

''பேஷான பெயர், பிரதிமா! ஆமாம், நீங்க என்ன டிரஸ் போட்டுக்கிட்டு வருவீங்க?''

''நான் என்ன டிரஸ் போட்டுக்கிட்டு வந்தால் உங்களுக்கு என்ன? உங்களை அடையாளம் கண்டுபிடிக்கிறேனா இல்லையா, பாருங்கள்!''

''டோண்ட் மிஸ்! பிராமிஸ்?''

கலகலச் சிரிப்போடு இரு தரப்பு தொலைபேசித் தொடர்பும் அறுந்தது.

மறு நாள் மாலை, சொன்னால் சொன்னபடி அரை மணி முன்னதாகவே, சந்தர் காரிடனே ஒட்டிய வாசலில் போய் நின்றுகொண்டான்.

''ஹல்லோ!'' ஒரு குண்டுப் பெருச்சாளி கையை நீட்டியது, கை குலுக்க.

''யார் நீங்க?'' கையை நீட்டி மடக்கத் தோன்றாமல் திகைத்துப் போனான் சந்தர்.

''நேற்று ஃபோன் செய்த சந்தர் நீங்க தானே? நான்தான் மிஸ் பிரதிமா!''

''க்ளாட் டு மீட் யூ!'' என்று கூறியவன் வேப்பங்காய் உருண்டையை விழுங்கியவன் போல அவளை ஒரு மேஜைக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்ததோடு, ''என்ன ஆர்டர் பண்ணலாம்?'' என்று உபசாரத்துக்குக் கேட்டும் வைத்தான்.

மெனு கார்டைப் புரட்டியவள் எல்லா வற்றுக்குமே ஆர்டர் கொடுத்து விட்டாள். நல்ல பைத்தியத்திடம் வந்து மாட்டிக் கொண்டு விட்டோம் போலிருக்கிறதே என்று அவன் திகைத்த வேளையில், ''ஹலோ, சந்தர்! ஐ ஆம் மிஸ் பிரதிமா!'' என்று குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். ஒரு கத்திரிக்காய்க் கொண்டை நின்று கொண்டிருந்தது.

இப்பொழுது சந்தருக்குப் பைத்தியம் பிடிக்காத குறை. சமாளித்துக் கொண்டு அவளுக்கு ஒரு நாற்காலி போட்டு உட்கார வைத்தான். அடுத்த சில நிமிஷங்களில் ஒவ்வொருத்தியாக இருபத்தியொரு பிரதிமாக்கள் கூடிவிட்டனர். அதற்கேற்ப மேஜையும் நீண்டது. ஷல்வார் — கமீஸ் அணிந்த கொத்தவரங்காய் ஒன்று பிரதிமாக்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவே, விருந்து இனிது நடந்தேறியது.

'தெரியாத்தனமாக ஒரு ஃபோன் பண்ணப் போக, நம்மைச் சரியான 'ஏப்ரில் ஃபூலா'க்கி இவர்கள் பழி தீர்த்துக் கொண்டு விட்



'ஜான் ஹாஜிர் ஹை' ஒரு கடத்தல் கதை. கதைக் கடத்தலில் ஒரு புதுமை இல்லையாயினும் மூன்று புது முகங்களைப் புகுத்தி வெற்றி காண முயன்றிருப்பது புதுமைதானே? அதோடு நகைச் சுவைக்கு அதிக வாய்ப்புக் கொடுத்துக் கடைசி வரை ஸஸ்பென்ஸைப் போர்த்தி மூடவும் முயன்றிருக்கிறார்கள். போலீஸ் அதிகாரியாக வரும் இஃப்தெகார், கடத்தல்காரராக வரும் நிர்லோக் கபூர் இருவரும் உயிரைக் கொடுத்து நடித்திருக்கிறார்கள்! பிரேம் கிருஷ்ணின் நடிப்பு சில இடங்களில் மிகை வென்றால் சேகர் கபூரின் நடிப்பு பல இடங்களில் அடக்கம். நிதாஷாவின் உடல் வாகு கைகொடுக்கவில்லை. ஆயினும் மெது நகை அவரது நடிப்புக்குக் கை கொடுக்கிறது.

சைலி சைலேந்திராவின் பொருள் பொதிந்த சில பாடல்கள் ஜய்பர்தேயின் இசை மூலம் எடுப்பாகத் தோற்றுகின்றன. ஆயினும் இன்ஸ்பெக்டர் இறந்த பின், அவரது மனைவி பாடும் நினைவுத் தேக்கப் பாடல் கதையோட்டத்துக்குப் பொருந்துகிறதா என்று கேட்டால், 'இல்லை; கதை நீட்டத்துக்கே பொருந்துகிறது' என்று தான் கூறத் தோன்றுகிறது. ஆகமொத்தம் நல்ல இழுப்பறுப்பு!

டார்கள்! இவர்கள் என்று எல்லோர் மீதும் பழி போடுவது தவறு. ஒரு மூளைதான் இந்த வேலையைச் செய்திருக்கிறது. அந்த மூளையைக் கண்டுபிடித்து, அவளையே கல்யாணம் செய்து கொண்டு வட்டியும் முதலுமாகப் பழி வாங்க வேண்டும்' என்று பில்லுக்குப் பணம் கொடுத்த பொழுது சந்தர் கறுவிக் கொண்டான். அதே நேரத்தில், 'நல்ல வேளை! ஸேட் யஷ்பாலுக்குப் பிள்ளையாகப் பிறந்தேனோ, பிழைத்தேனோ? இல்லையென்றால் இத்தனை பெரிய கும்பலுக்குத் தீனி போடக் கட்டியிருக்குமா?' என்று ஆறுதல்—மகிழ்வும் பெற்றான்.

இனி இவன் எந்தப் பெண்ணிடமும் இப்படி வாலாட்ட மாட்டான் என்ற நம்பிக்கையோடு அவர்களும் விடைபெற்றார்கள்.

"அப்பா! இவன் என் நண்பன் யோகேஷ்!" சந்தர் தன் தந்தை யஷ்பாலுக்கு யோகேஷை அறிமுகம் செய்து வைத்தான்.

"அப்படியா? இதுவரை இவனை உன்னோடு பார்த்ததாக நினைவில்லையே!"

"பார்த்திருந்தால் அல்லவா நினைவு வர? புது சிநேகம். இரண்டு பேரும் ஜன்மப்பகை போலச் சண்டை போட்டுக் கொண்டு நண்பர்களாகி யிருக்கிறோம்!"

"அப்படிச் சொல்லு! இரண்டு பேருமாகச் சேர்ந்து பகையைக் கொன்று போட்டுவிட்டீங்க. இனி அது தலையெடுக்க முடியாது...



ஆமாம், இவன் என்ன பண்ணிக்கிட்டிருக்கிறான்?"

"இப்பத்தான் படிக்க முடிச்சிருக்கான். 'மானேஜ்மெண்ட் டிரெயினிங்!' இனிமேல் தான் எங்கேயாவது வேலைக்குப் போகணும்!"

"அப்படியா? உன் அப்பா என்னவாக இருக்கிறார்?"

"காவல் துறையிலே பணியாற்றிக் கொண்டிருக்கிறார்!"

"பேரு? பொதுவாக எனக்குத் தெரியாத காவல் துறை ஆசாமிங்க கிடையாது!"

"பிருத்வி சிங்!"

"அப்படிச் சொல்லு! அப்போ நீ நமக்கு ரொம்ப நெருங்கி வந்துட்டே! உங்க அப்பா நெருப்பு. என் காரையே மடக்கிச் சோதனை போட்டிருக்கார்னு பார்த்துக்கோயேன்!" என்றவரின் மூளையில் ஒரு மின்னல் பளிச்சிட்டது. "...அப்படிப்பட்டவரின் பிள்ளை நீ எப்படி இருப்பேன்னு தெரியும். அதனாலே நீ நம்ம கம்பெனிகளில் ஒன்றுக்கே 'எக்ஸி

க்யூட்டிவா'க வந்துவிடு. மருந்து தயாரிப்புச் சாலை ஒன்று நான் நடத்தி வருகிறேன். அதை நிர்வகிக்க வேண்டிய பொறுப்பு உன்னுடையது!'' என்றார்.

யோகேஷுக்கு மகிழ்ச்சி என்றால் சந்தருக்கு மகிழ்ச்சியான மகிழ்ச்சி!

"அப்பா! எனக்கு வேலை கிடைத்து விட்டது. ஸேட் யஷ்பாலின் மருந்துக் கம்பெனி ஒன்றில்!'' என்று யோகேஷ் தன் மகிழ்ச்சியைக் குரலில் தேக்கிக் கூறினான்.

அதைக் கேட்டுக் காவல் துறை அதிகாரியான பிருத்வி சிங் மகிழ்ந்து போய்விடவில்லை. ''பெரிய இடத்து விவகாரம். ரொம்ப ஜாக்கிரதையாகப் பழகி நல்ல பெயர் எடுக்கணும்!'' என்று எச்சரித்து வைத்தார்.

யோகேஷை அவன் வீட்டுக்குக் கொண்டு விட வந்த சந்தருக்கு உள்ளத்தில் ஒரு கிளுகிளுப்பை ஊட்டியது, ஜன்னல் வழியே எட்டிப் பார்த்த கொத்தவரக்காய் ஒன்று. அதன் குறும்புப் பார்வையும் மெது நகையும் அன்று நடந்த அத்தனை நாடகத்துக்கும் அதுதான் ஆணி வேர் என்பதை இனம் காட்டிக் கொடுத்து விட்டன. அந்த புகிழ்ச்சியான மகிழ்ச்சியில் வாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டு யோகேஷின் வீட்டை வளைய வரலானான்.

ஸேட் யஷ்பாலுக்கு யோகேஷின் மேல் அசைக்க முடியாத நம்பிக்கை விழுந்துவிட்டது. ''இதோ பார், யோகேஷ்! இது உயிர் காக்கும் மருந்து! உடனே நீ தில்லிக்குப் போய் இன்னாரிடம் தந்து திரும்ப வேண்டும். இந்த ஃப்ளைட்டிலே போய் அடுத்த ஃப்ளைட்டிலே திரும்பி விடலாம்!'' என்றார் ஒரு நாள்.

யோகேஷுக்கு உற்சாகம் கரை புரண்டது. அவர் கூறியபடி தில்லி போய்த் திரும்பி வந்தவன், அவருக்குப் பிடித்த சுருட்டுப் பாக்கெட் ஒன்றைக் கொண்டு வந்து தந்த பொழுது ஸேட் யஷ்பால் மகிழ்ந்து போனார். ''எனக்கு இந்தச் சுருட்டுப் பிடிக்கும் என்று உனக்கு எப்படித் தெரியும்? பலே கில்லாடியாய் இருக்கிறயே!'' என்றார்.

''எனக்குத் தெரியாது. உங்கள் டாக்டர் நண்பர்தான் வாங்கிக் கொடுத்தார். எனக்குத் தெரிந்திருந்தால் இன்னும் இரண்டு மூன்று பாக்கெட்டுகள் வாங்கி வந்திருப்பேன்!'' என்று தன் அறியாமைக்கு வருத்தம் தெரிவித்தான் யோகேஷ்.

''இதற்குப் போய் வருத்தப்படாதே! அப்பப்போ எத்தனையோ பேர் போறாங்க, வராங்க. வாங்கி வான்னு வாங்கி வராங்க!'' என்று சமாதானம் செய்தார் ஸேட் யஷ்பால்.

"டேய்! வெட்கத்தை விட்டுக்கேட்கிறேனடா! உன் தங்கை பமீலாவை எனக்குப் பிடிச்சுப் போச்சு! எப்படியாவது எனக்கும் அவளுக்கும் கல்யாணம் செய்து வைக்க வேண்டியது உன் பொறுப்பு!'' என்றான் சந்தர்.

''உனக்குப் பிடிச்சா மட்டும் போதுமா? அவளுக்குப் பிடிக்க வேண்டாமா? உன் கிறுக்குத்தனத்தைப் பற்றி அவள் என்னிடம் சொல்லியிருக்கிறாள். நல்ல செலவு வைச்சாளாமே உனக்கு!''

''ஏதோ விளையாட்டாகச் செய்யப் போக வினையாக முடிஞ்சுது! நீயும் நானும் நெருக்கமாறாற்போல, உன் அப்பாவும் என் அப்பாவும் சம்பந்திகளாகணும்னு பமீலாவை எனக்குத் திருமணம் செய்து....''

''...வைத்துப் பெரியவங்க இரண்டு பேரையும் சம்பந்திச் சண்டை போட்டுக்கொள்ள வைக்கணும். இல்லையா?'' இப்படிக் கேட்ட யோகேஷ் இருதரப்புப் பெற்றவர்களையும் வாய் பேசவிடாமல் வைத்துச் சம்மதமும் வாங்கி விட்டான்.

இந்த உறவில் மகிழ்ந்து போன ஸேட் யஷ்பால் சொன்னார்: ''நம்ம கம்பெனிகளின் விதிமுறைப்படி பெரிய எக்ஸிக்யூடிவ்கள் ஒரு மாதம் விடுமுறை பெற்று எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம். நீ நம்ம உறவு முறைக்காரப் பையனாகவும் போயிட்டே! அதனாலே காட்மண்டுவுக்குப் போய் நம்ம பங்களாவிலே தங்கு! உன் ஸிஸ்டர் பமீலாவை வேணுமானாலும் அழைச்சுக்கிட்டுப் போ! உன் நீண்ட பயணத்துக்கு உதவட்டும் என்று நல்ல கார் வாங்கி யிருக்கிறேன். அதிலேயே போய் வா. நீ திரும்பி வந்ததும் முதல் காரியம் பமீலா — சந்தர் கல்யாணம்தான்!''

இந்த விவரம் தெரிந்ததும் சந்தர் குழந்தையைப் போலப் பிடிவாதம் பிடித்தான். அப்பாவுக்குத் தெரியாமல், தானும் காட்மண்டுவுக்கு வரப்போவதாக. என்ன தடுத்தும் அவன் கேட்காமல் போகவே, வேறு வழியின்றி யோகேஷும் பமீலாவும் அவனையும் பயணத் துணையாகச் சேர்த்துக் கொண்டனர்.

காட்மண்டுவின் காட்டுப் பாதையிலே வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் அவர்களை மடக்கவே, அவர்கள் உயிருக்காகப் போராடும்படியாயிற்று. 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று எப்படியோ தப்பி வந்

---

## ஜப்பான் நாணயம்!



டோக்கியோ பாங்க் ஒன்றிலிருந்து சுமார் பத்து லட்சம் யென் கரன்ஸி நோட்டுகளை வாங்கிக்கொண்டு வந்தார் ஒரு வாடிக்கையாளர். தெருவில் போய்க் கொண்டிருக்கும்போது பணம் கொண்டு வந்த பெட்டியின் மூடி கழல, பணமெல்லாம் தெருவில் கொட்டியது. காற்று அவற்றை விசிறியடித்தது. தெருவில் போய்க் கொண்டிருந்த மக்கள் இதைப் பார்த்து ஓடிவந்து பரபரவென்று பொறுக்கிப் பொறுப்பாக வாடிக்கையாளரிடம் கொடுத்தனர். போலீஸும் உதவிக்கு வந்தது.

'பத்தே பத்து நோட்டுக்கள்தான் காணாமல் போய் விட்டன. அவைகூட எங்காவது கட்டிட உச்சி, இடுக்குகளில் புகுந்துகொண்டு அப்படியே இருக்கும். யாரும் தொட மாட்டார்கள்' என்றார் ஒரு போலீஸ் அதிகாரி.

வீக் எண்ட் - எம்.எஸ்.





எந்த கால நிலைக்கும்
எல்லா வயதினருக்கும்
ஏற்ற மருந்து




ஆறுமுகம் முத்திரை உள்ள

# ஆர்.எஸ்.பதி மருந்து

தலைவலி, ஜலதோஷம்,
ப்ளூ, கை கால் வலி
முதலியவைகளுக்கு
உபயோகிக்கக்கூடியது.

தயாரிப்பவர்கள்:

ஆர்.எஸ்.பதி & கோ,
214, 215. மேலமாசிவீதி, மதுரை-1.
தபால் பெட்டி எண்: 99.

RAJAN

**பாசம்**

சின்ன வயதில் சீறிப் பாய்ந்ததும்
பின்னலை இழுத்துப் பட்டென அடித்ததும்
கனவாய்த் தோன்றுதடி; —காதல்
மனத்தை உணர்ந்த உவகையடி!

மேலட்டை வண்ணப் படம்: உதரா.



தாலும், சந்தரின் கையில் காயம் பட்டு விட்டது. எனவே, காட்மண்டு வாசத்தை ரத்து செய்துவிட்டு ஊருக்கு வந்து சேர்ந்தனர். விவரம் தெரிந்தால் அப்பா கோபித்துக்கொள்வாரே என்று பயந்தான் சந்தர். சொல்லாமல் மறைத்தாலும் அவர் கோபித்துக்கொள்வாரே என்று யோகேஷ் பயந்தான். அதனால் சந்தரின் பேச்சைக் கேட்காமல் அவருக்குத் தகவல் அனுப்பி விட்டான்.

ஸேட் யஷ்பால் பிள்ளைப் பாசத்தில் என்னவோ, ஏதோ என்று பயந்துபோய்ப் பதறி அடித்துக் கொண்டு வந்தார். திரும்பும்போது அவர் கார் கிளம்பாமல் மக்கர் செய்யவே, யோகேஷின் காரை எடுத்துச் சென்றார்.

**"வா**ங்க, சம்பந்தி! வாங்க! இந்த அவேளையில் வரக் காரணம்?" என்று கேட்டார் ஸேட் யஷ்பால்.

"ஒன்றும் இல்லே. யோகேஷின் காரைப் பார்த்துப் போகலாம்னு வந்தேன்!" என்றார் இன்ஸ்பெக்டர் பிருத்வி சிங்.

"அதை அப்பவே திருப்பி அனுப்பிச் சுட்டேனே! நீங்க பார்க்கலையோ?"

"பார்த்துவிட்டதனுல்தான் வந்தேன். பளபளன்னு ஒரு கிறல் அதிலே இருந்தது. இதிலே இல்லே!"

"அதைச் சொல்றீங்களா? அதை நானும் பார்த்தேன். உடனே பழுதுபார்க்கச் சொன்னேன். புதுக்காரிலே ஒரு சின்னக் கிறல் இருந்தால் கூட எனக்குப் பிடிக்கிறதில்லே!"

"இதோ பாருங்க! என் கண் என்னை ஏமாற்றுகிறதில்லே. அது தங்கத்தகடு வேய்ந்த காருங்க! இது தகர டப்பாக்காருங்க!"

"அப்படியா? என்ன ஆச்சரியம்? உங்களுக்கு எதற்கு வீண் சந்தேகம்? வாங்க, என் கார்களை யெல்லாம் பாருங்க! தங்கக் கார் இருந்தால் எடுத்துக்கிட்டுப் போங்க!—சம்பந்தி! உறவு முறையை யெல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, பந்த பாசங்களை யெல்லாம் புரட்டிப் போட்டுவிட்டுக் கடமையைச் செய்யறவங்களைக் கண்டால் எனக்கு ரொம்பப் பிடிக்கும்!" என்று கூறியவாறே இன்ஸ்பெக்டர் பிருத்வி சிங்கை அழைத்துச் சென்று எல்லாக் கார் ஷெட்டுகளையும் திறந்து காட்டினார் ஸேட் யஷ்பால். இன்ஸ்பெக்டர் தேடி வந்த தடயம் ஏதும் கிடைக்கவில்லே. "சம்பந்தி! ஆண்டவன் வல்லவன்! என் மானத்தைக் காப்பாற்றினன்!" என்றார் யஷ்பால்.

**ஸே**ட் யஷ்பாலின் மானத்தைக் காப்பாற்றிய ஆண்டவன் இன்ஸ்பெக்டர் பிருத்வி சிங்கின் உயிரையே காவு வாங்கிவிட்டான். ஆம், அவர் வஞ்சகமாகத் தனியிடத்துக்கு வரவழைக்கப்பட்டுப் படுகொலை செய்யப்பட்டார்.

போலீஸ் அதிகாரிக்குப் பிள்ளையாகப் பிறந்த காரணத்தாலோ என்னவோ! யோகேஷுக்குத் துப்புத் துலக்கும் ஆற்றல் அபாரமாயிருந்தது. அவன் சம்பவம் நடந்த இடத்துக்குச் சென்று சோதனையிட்டான். தடயமாகக் கிடைத்த சிகரெட் துண்டுகளைக் கொண்டு கொலையாளியைக் கண்டுபிடித்தான். உயிர் தப்பினல் போதும் என்ற எண்ணத்தில் அந்தக் கொலையாள் உண்மையைக் கொட்டி விட்டான். கள்ளக் கடத்தல், போலி மருந்து தயாரித்தல் போன்ற காரியங்களின் அடித் தளத்தில் யார் கை செயல்படுகிறது என்பதை அறிந்தபொழுது யோகேஷ் அதிர்ந்து போனன்.

யோகேஷுக்கு விஷயம் தெரிந்துபோய் விட்டது என்பதை அறிந்ததும், பெரிய குற்றவாளி அவனையும் தன் பாதையிலிருந்து அகற்ற முயன்றான். அந்தச் சூழ்ச்சித் திட்டத்தை அறிந்து கொண்ட சந்தர், நண்பனின் உயிரைக் காப்பாற்றியே தீருவது என்று உறுதி பூண்டான். பலன், யோகேஷுக்குப் பதில், குத்துக் கத்தி அவனைப் பதம் பார்த்து விட்டது. இந்தச் செய்தி அறிந்த அவன் தந்தை ஓடோடி வந்தார்.

"நில்லுங்கள்! என்னைத் தொடாதீர்கள்! ஊருக்கு நல்லவராக வேஷம் போட்டு உலகத்துக்குத் தாங்கள் செய்திருக்கும் அத்தனை ஈனச் செயல்களையும் நான் அறிவேன். நான் என்னை உங்கள் மகன் என்று சொல்லிக் கொள்ளக் கூடக் கூசுகிறேன்!" என்று இடித்துரைத்து அவர் கால்களை எழும்பவொட்டாமல் அடித்து விட்டான் சந்தர்.

தம் ஈனச் செயல்கள் தெரியாது வாழ்ந்த மகனுக்குத் தம் வண்டவாளங்கள் தெரிந்து விட்டனவே என்ற தாபம் ஒருபுறம்; தம் கண்களுக்கு எதிரிலேயே மகன் துடிதுடித்துச் சாவதைக் காணச் சகியாத சோகம் மறுபுறம்; ஸேட் யஷ்பால் தம்மைத் தாமே சுட்டுக் கொண்டு விட்டார். சோக வயப்பட்டாலும் சினிமா கதாநாயகன் சந்தர் சாவானா? குத்துப்பட்டாலும் குதித்தெழ வேண்டியது தானே?

**"ஹ**லோ, சந்தர் டியர்! இன்று என்ன சமைக்க?"

"கொத்தவரைக்காய் கறி, கொத்தவரைக்காய் சாம்பார்! அப்புறம் கொத்தவரைக்காய்..."

"என்ன குறும்பு வேண்டிக் கிடக்கிறது?"

"அதை அந்தப் பிரதிமாவிடமே கேட்டுப் பார்!" ஃபோனை வைத்த சந்தருக்கு அப்புறம் இருப்புக் கொள்ளவில்லே.


"இன்று என் மகள் ஒரு லட்சாதிபதி!
ஒரு செல்வந்தரை மணக்காமலேயே!"
அவள் பெண்ணுக்குத் திருமணப் பரிசாக
ஒரு பிரஸ்டீஜ் கிடைத்தது – உடனே அவள்
15 லட்சம் பிரஸ்டீஜ் குடும்பத் தலைவிகளுள்
ஒருத்தியாகிவிட்டாள் – இந்தியாவில் அதிகம்
விற்பனையாகும் பிரஷர்குக்கர் இது.
பிரஸ்டீஜை வாழ்நாள் துணையாகக் கருதும் பதினைந்து லட்சத்திற்கு அதிகமான இல்லத்தரசிகளில் பலருக்கு பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர் பழக்கம் ஒரு திருமணப் பரிசாகத் தொடங்குகிறது.
அதன் உள்ளே கொள்ளளவு அதிகம். அதனால் அதிக அளவு உணவைச் சமைக்க முடிகிறது. அதன் தனிப்பட்ட அலுமினிய மூடி வெளிப்புறம் பொருந்துவதால் உள்புறக் கொள்ளளவு விசாலமாகிறது.

Prestige
பிரஸ்டீஜ் தயாரிக்கப் பயன்படும் தனி ரக அலுமினிய உலோகக் கலவை உஷ்ணத்தை விரைவாகவும் சமப்பரவலாகவும் பரப்புகிறது. இதனால் நேரமும் எரிபொருளும் இன்னும் மிச்சமாகிறது.
பிரஸ்டீஜ் அளிக்கிறது—இரட்டிப்பு வசதியுள்ள மூடி மற்றும் மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிடியுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான்.
பிரஸ்டீஜின் மீது ISI முத்திரையை காணுங்கள்—தரத்திற்கு அது ஓர் உத்ரவாதம். பிரஸ்டீஜ் வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உதவ, நாடெங்கும் சர்வீஸ் நிலையங்கள் பல உள்ளன.
Prestige
பிரஸ்டீஜ்
விற்பனையிலும்
மக்கள் விருப்பத்திலும்
இன்று இந்தியாவில்
உயர்ந்து நிற்கும்
பிரஷர்குக்கர்.
ஆறு அளவுகளில் கிடைக்கிறது
Prestige
கவனிக்கவும்:
பிரஸ்டீஜின்
அதி கனமான
அடிப்புறம் நீண்ட
ஆயுளை அளிக்கிறது.
Prestige
PREETT
டிடி. (பிரைவேட்)
லிமிடெட்
பெங்களூர் 500 016
SAA/TTP/1758

# இணையற்ற துணைவேந்தர்!



"இளமைக் காலத்திலேயே எனக்குத் தர்க்க சாஸ்திரத்திலும் கணித ஆராய்ச்சியிலும் ஒருவித லயிப்பு உண்டு. இந்த ஈடுபாட்டை, பரீட்சைகளுக்கான வினாக்களை, ஆராய்ந்து தேர்ந்தெடுப்பதில் உபயோகப்படுத்துவேன். உயர்நிலைப் பள்ளிப் பரீட்சை, இண்டர்மீடியட், பி. ஏ. ஹானர்ஸ் போன்ற பரீட்சைகளை எழுதியபோது கடந்த பத்து ஆண்டுகளில் கேட்கப்பட்ட வினாக்களை எடுத்து வைத்துக் கொண்டு, அவைகளிலிருந்து தர்க்க ரீதியாகச் சில வினாக்களைத் தேர்ந்தெடுத்து, பதில்களைத் தயார் செய்வேன். என் ஊகம் அநேகமாக நூற்றுக்கு நூறு சரியாக இருக்கும். என் வெற்றியும் பாராட்டும்படியாக இருக்கும்.

இந்த வகையில் வேலூர் ஊரீஸ் கல்லூரியிலும் சென்னை லயோலா கல்லூரியிலும் பயின்று பட்டம் பெற்றபோது எனக்கு ஆறு கல்லூரிகளிலிருந்து அழைப்பு வந்தது. ஆனால் நான் கல்கத்தா சர்வகலாசாலையைத் தேர்ந்தெடுத்துக் கல்கத்தா செயின்ட் பால் கல்லூரியில் பொருளாதார ஆசிரியராகச் சேர்ந்தேன். ரவீந்திரநாத் டாகூருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு வேண்டும் என்பதற்காகவே நான் கல்கத்தாவுக்குப் போனேன். அங்கு போன பிறகுதான், என் அகக் கண்கள் திறந்தன. இத்தனை ஆண்டுகள் நாம் ஏதோ நிறையப் படித்திருந்ததாக நிலவியிருந்த எண்ணம் மறைந்தது. கல்வியின் நோக்கத்தையே இது வரை புரிந்து கொள்ளவில்லை என்பதை அங்கு போய் உணர்ந்தேன். அங்கேதான் அநுபவ பூர்வமாகக் கல்வியின் லட்சியங்களைப் பற்றித் தெரிந்துகொண்டேன். பிற்காலத்தில் இந்த விழிப்புணர்ச்சி எனக்கு வெகுவாக உதவியது.

யுனெஸ்கோவில் பணியாற்றும்போது கல்வி சம்பந்தமாக மற்றொரு சுவையான அநுபவம்.

தென் அமெரிக்கக் கண்டத்தில் பொலிவியா நாடு. இமயமலைக்கு அடுத்தபடியாகச் சொல்லக்கூடிய 'ஆண்டீஸ்' மலை அங்குதான் இருக்கிறது. அந்த மலைப் பகுதியில் ஏறத்தாழப் பத்தொன்பதாயிரம் அடி உயரத்தில் வசிக்கும் கிராம மக்களுக்குக் கல்வி வசதி தேவை என்ற வேண்டுகோள் யுனெஸ்கோவை எட்டியது. இதைப்பரிசீலிக்க, நானும், பொலிவியா நாட்டு அமைச்சரும், அந்த மலைச்சாரலில் உள்ள வாரிசாட்டா என்ற கிராமத்தை அடைந்தோம். அந்தக் கிராமத்து மக்கள் பேசும் மொழிக்குப் பெயர் கெட்ச்வா. நாட்டில் அதிகாரபூர்வமாக வழங்கும் மொழி ஸ்பானிஷ் மொழி. எனக்குத் தெரிந்ததோ ஆங்கிலம்.

'இத்தனை காலம் கல்வியைப் பற்றிக் கொஞ்சம்கூட அக்கறை காட்டாமல் இருந்துவிட்டு இப்போது ஏன் இந்தத் திடீர் ஆசை?' என்று நான் ஆங்கிலத்தில் கேட்டதைக் கிராமத் தலைவனிடம் உள்ளூர் மொழியில் கேட்ட பொழுது வந்த பதில் :

"எங்கள் தலைமுறையில் நாங்கள் இழந்ததை எங்கள் வருங்காலச் சந்ததியும் இழக்க வேண்டாம் என்ற நோக்கம்தான்."

"உங்களுக்குக் கல்வி வசதியும், போதிக்க ஆசிரிய வசதியும் செய்துகொடுப்பதால் உங்களுக்கு எந்தவித பலன் கிடைக்கும் ?" என்ற கேள்விக்கு அந்த மலைவாசிகளிடமிருந்து வந்த பதில், என்னைத் திகைக்க வைத்ததோடு அல்லாமல் மெய்சிலிர்க்கச் செய்தது.

"எங்களிடையில் ஒரு பழமொழி உண்டு. 'படித்தவன் ஒரு பலவான், ஒரு பலவானுக்கு, புல் இலைகூட கூர்மையான கத்தியாக உதவும்' என்பதுதான் அந்தப் பழமொழி. இந்த வகையில் எங்கள் வருங்காலச் சந்ததி பலம் பொருந்தியதாக இருக்க விரும்புகிறோம்."

நம் நாட்டில்தான் 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்', 'புத்திமான் பலவானவான்' என்ற பழமொழிகள் பழக்கத்தில் இருக்கின்றன என்று நினைத்தோமே. இதே கருத்து எத்தனையோ தூரத்துக்கு அப்பால் இத்தனை உயரத்தில் வாழும் மலைவாசிகளிடமும் எதிரொலிக்கின்றதே. மனித இனத்துக்குப் பொதுவான சில அடிப்படைக் கருத்துக்கள் இப்படித்தான் பரவி நிற்குமோ என்று ஆச்சரியப்பட்டேன். கல்வியின் மதிப்பு எத்தனை உயர்ந்திருக்கிறது என்று வியந்தேன்."

சென்னை சர்வகலாசாலைக்குப் புதிய துணைவேந்தராகப் பதவி ஏற்றிருக்கும் திரு மால்கம் ஆதிசேஷய்யா ஓர் உலகம் சுற்றிய அநுபவசாலி. யுனெஸ்கோவின் துணை டைரக்டர் ஜெனரலாக விளங்கியவர். பதினைந்து பல்கலைக் கழகங்கள் இவருக்கு டாக்டர் விருது வழங்கியுள்ளன. பத்தே நிமிடங்கள் அவருடன் பேசின போதிலும் பளிச்சென்று அவர் சொன்ன அநுபவங்கள் உணர்ச்சிபூர்வமாக இருந்தன.

"சென்னை சர்வகலாசாலையைப் பொறுத்த வரை எத்தகைய அபிவிருத்தித் திட்டங்களை மனத்தில் வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டபோது ஒரு கணம் புன்முறுவல் பூத்தார். "அவைகளை முதலில் சிண்டிகேட் உறுப்பினர்களுடன் விவாதிக்க வேண்டும்! அப்புறம் தானாகவே உங்களுக்குத் தெரியப் போகிறது" என்று சொல்லி எழுந்தார்.

நிமிடங்களைக்கூட இவ்வளவு கச்சிதமாகப் பயன்படுத்துகிறவர் மாணவ மாணவிகளின் வருங்காலத்தையும் பயனுள்ளதாகச் செய்வார் என்ற நம்பிக்கையுடன் விடைபெற்றேன்.

பேட்டி: **பட்டினத்தார்**

## 4. மிஸஸ் பணிக்கர்

மதுர பவனத்தில் விமலாவை அப்புறப்படுத்தியது யாராயிருக்கும் என்று விவாதம் தொடர்ந்தது.

'' 'யாரோ' என்றால்? கோவிந்துவா?''

''நிச்சயமாகத் தெரியலே!... ஏன் தாரிணி தேவி யாகக்கூட இருக்கலாம்.''

''மதுர பவனத்தில் வேறு சில வேலைக்காரிகளும் இருக்கிறார்களே — அவர்களையெல்லாம் விட்டு விட்டு விமலாவை மட்டும் ஏன் அப்புறப்படுத்த வேண்டும்?''

''நியாயமான கேள்வி. விமலா வெறும் நர்ஸாக அங்கே இல்லே. நம்முடைய 'ஸ்பை'யாகத்தான் போயிருக்கிறாள். அவளிடம் நான் ஒரு டேப்ரிகார்டரும் மைக்கும், காஸெட்டும் கொடுத்து அனுப்பினேன்.... அதை அவள் பொருத்தும்போது யாரோ பார்த்துவிட்டிருக்கலாம். அல்லது சந்தேகப்பட்டிருக்கலாம்... அந்த காஸெட் கிடைத்தால் ஏதாவது துப்பு கிடைக்கும்.''

''எங்கே இருக்கிறது அந்த காஸெட்! நான் இப்போதே போய்க் கொண்டு வருகிறேன்'' என்று கிளம்பினான் ரமேஷ்.

''அவசரப்படாதே ரமேஷ்!... நான் சுபாவிடம் பேசியதிலிருந்து ஒன்று தெரிய வந்திருக்கிறது. நேற்று பஸ்ஸில் திரும்பும்போது 'அடடா, என் கைப் பையை மறந்து வைத்து விட்டு வந்து விட்டேனே... முக்கியமான பொருள் ஒன்று அதில் இருக்கிறதே' என்று விமலா தவித்தாளாம். அந்த முக்கியமான பொருள் அந்த காஸெட்டாகத்தான் இருக்க வேண்டும். காஸெட் விமலாவின் கைப் பையில் மதுர பவனத்தில் எங்கோ பத்திரமாக இருக்கிறது. எங்கே என்றுதான் கண்டுபிடிக்க வேண்டும். ரமேஷ்! உனக்குக் கோவிந்துவை நன்றாகப் பழக்கம் உண்டல்லவா?''

''நிறையப் பழக்கம். பல தடவை நாங்கள் கிளப்பில் பில்லியர்ட்ஸ் ஆடியிருக்கிறோம். கோவிந்துவுக்கு பில்லியர்ட்ஸ் என்றால் உயிர். அந்தப் பழக்கத்திலிருந்துதான் விமலாவைச் சுலபமாக மதுரபவனத்தில் நுழைக்கவே முடிந்தது!''

''ஆகவே, நீ மதுரபவனத்தில் நாளைக் காலை சுலபமாக நுழைய முடியும். சுதந்திரமாக வீடு முழுக்கச் சுற்ற முடியும். சரிதானே?''

''அதாவது நாளைக் காலை என்னை மதுர பவனத்துக்குப் போகச் சொல்கிறாய்?''

''ஆமாம். ஆனால் சும்மா நுழைந்துவிட்டு வரப் போவதில்லை. ஏதோ சாக்கு சொல்லி அங்கே இரண்டு நாட்கள் தங்கவும் செய்கிறாய்... சகோதரியை இழந்த துயரத்தில் கிடப்பவனாக நடிக்கிறாய்...சந்தர்ப்பம் கிடைக்கும்போது கோவிந்துவின் 'கண்' அறைக்குப் போகிறாய்—''

''கண் அறையா? வாட் இஸ் இட்?''

''ஆமாம். அப்படி ஓர் அறை மதுரபவனத்தில் இருக்கிறது. அதற்குள் கோவிந்துவைத் தவிர வேறு யாரும் போகவே முடியாது. அந்தப் பிரத்யேக அறைக்குள், சுவரில் ஓர் அழகான பெண்ணின் இரண்டு மோகன விழிகளும் அவற்றின் மீது கவிந்த மாதிரி இரு கரிய இரப்பைகளும் பெரிய அளவில் 'வுட்கட்' செய்து மாட்டியிருக்கிறது. பார்த்தால் நிஜமாக ஒரு பெண் பார்க்கிற மாதிரியே இருக்கும்—''

''ஓ! யாருடைய விழிகள் அவை? எதற்காக அங்கே இருக்கின்றன?''

''அதுதான் தெரியவில்லே. ஆனால் யாரோ ஒரு பெண்ணின் ஞாபகார்த்தமாகத்தான் அவற்றைக் கோவிந்து அங்கே செய்து வைத்துக் கொண்டிருக்கிறான். அவை யாருடையவை என்று தெரிந்தால் கோவிந்து என்கிற ஆசாமியைச் சுற்றியிருக்கிற பெரிய புதிர் ஒன்று விடுபட்டுவிடும். நிஜமாகவே அந்த மாதிரி விழிகளும் இரப்பைகளும் உடைய ஒரு பெண் எங்கோ இருந்து கொண்டிருக்கிறாள். அவளுக்கும் கோவிந்துவுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது. அதைக் கண்டுபிடிக்கத்தான் விமலாவை அனுப்பினேன்.''

''அது சரி, சேகர்! நான் என்ன செய்ய வேண்டும்!'' என்று கேட்டான் ரமேஷ்.

''நீ அந்தக் கண் அறையில் நுழைய வேண்டும். அங்கேதான் விமலா மைக்கையும் டேப் ரிக்கார்டரையும் மறைத்து வைத்திருக்கிறாள். அந்தக் கண்ணின் பாப்பாவுக்



சவால்

ரேகா சந்திரநாத்

குப் பின்னால்தான் மைக் இருக்கிறது. பக்கத்தி லுள்ள அலமாரியின் பின்னால் ரிக்கார்டர் இருக்கும். அதிலுள்ள காஸெட்டைக் கொண்டு வந்துவிட வேண்டும். காஸெட் அதில் இல்லாவிட்டால் விமலாவின் கைப் பையில் இருக்கும். அதைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்.''

''செய்கிறேன்'' என்றான் ரமேஷ்.

''எனக்கு என்னண்ணா வேலை?'' என்றாள் மாலதி.

''மாலதி! நீ நேராக எலிட்மன்த் க்ராஸ் தெருவுக்குப் போகிறாய். கடைக்கோடி வீடு தான் டாக்டர் பணிக்கருடையது. மிஸஸ் பணிக்கரை உனக்குத் தெரியுமா?''

''தெரியாது.''

''தெரியப் படுத்திக்கொள்.... அவளுக்கு வளர்ப்பு மிருகங்கள் என்றால் உயிர். அவற் றைப் பற்றிப் பேசினால் இரண்டே நிமிஷங் களில் நீ அவளுக்குப் பிராண சிநேகிதியாகி விடுவாய். மிஸஸ் பணிக்கர் யார் என்று உனக்கு நான் சொல்லவில்லையே! திருமதி தாரிணி தேவியின் கூடப் பிறந்த தங்கை.''

''ஓ. அப்படியா?''

''நீ மிஸ்டர் பணிக்கரையும் சந்திக்கலாம். அவரிடம் ஒற்றைத் தலைவலி பற்றி விவாதமே நடத்தலாம். இடையிடையே தாரிணி தேவி யைப் பேச்சில் இழுக்கலாம். ஏதாவது ரக சியம் கட்டாயம் வெளிவரும்.''

''புரிந்துவிட்டது, அண்ணா... நாளைக்கே புறப்படுகிறேன்!'' என்றாள் மாலதி.

''நாளை மாலைக்குள் காஸெட்டுடன் வந்து விடுகிறேன்'' என்றான் ரமேஷ். ''விமலா வைக் கண்டு பிடிக்கும்வரை எனக்குச் சாப் பாடு கிடையாது; தூக்கமும் கிடையாது!''

''தாங்க்ஸ்! பிறகு சந்திக்கலாம்'' என்ற சேகர் டெலிபோனை எடுத்து ஓர் எண்ணைச் சுழற்றினான். லைன் கிடைத்தது.

''கண்ட்ரோல்?''

''எஸ், கண்ட்ரோல்!''

''ஹலோ! ஸ்ரீலீ வாஸ்! ஒரு பெண் காணாமல் போய் விட் டாள்! வயது பதி னெட்டு; மாநிறம். உயரமுமில்லை;

# இரு விழிகள்



குள்ளமுமில்லை... மூக்கு நீர்க்கமாக இருக்கும்...''

''போட்டோ இருக்கிறதா ஸார்?''

''பிரிண்ட் போடச் சொல்லியிருக்கிறேன். காலையில் நூறு காப்பி வந்துவிடும். டிஸ்ட்ரிக்ட் முழுக்க எல்லா ஸ்டேஷன்களையும் 'அலர்ட்' செய்யுங்கள். நாளை மாலைக்குள் அவளைக் கண்டுபிடித்துவிட வேண்டும்—''

''ஓ. கே. ஸார்—ஷ்யூர்!''

போனைக் கீழே வைத்துவிட்டுத் திரும்பிய சேகர் எதிரில் ரமேஷோ, விமலாவோ இல்லை. 'பொத்'தென்று நாற்காலியில் விழுந்து கழுத்தைப் பின்னால் சாய்த்துக் கொண்டு, ''விமலா, மை டியர்! எங்கே இருக்கிறாய், நீ?'' என்று அரற்றினான் அவன்.

ஒரு பெரிய பில்லியர்ட்ஸ் மேஜையைச் சரியான கோணத்தில் அமைக்கும் விஷயத்தைப் பெரிய பிரச்னையாக்கிக் கொண்டு, அரை மணி நேரமாக அதை இங்குமங்கும் நகர்த்திக் கொண்டு அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார் மிஸ்டர் கோவிந்து.

'' இன்னும் கொஞ்சம் வடப் பக்கம் நகர்த்து... வடப் பக்கம்... ஆ, ஆ!''

''மடையா ! நகர்த்து என்றால் ஒரேயடியாக இழுத்து விடுவதா ? பூல் ! களிமண் மண்டைகளா! நகர்த்துடா தெற்கு, அரை இன்ச்....''

''ரைட்! ரைட்!...போதும், போதும்!''

வேலைக்காரர்கள் இணைந்து போய்விட்டார்கள். இரண்டு பெரிய படங்களின் பின்னணிக்குப் பொருத்தமாக மேஜை வந்த அதே சமயம் பஸ்ஸர் ஒலித்தது.

பந்தை நடுவில் வைத்துக் குனிந்து கழியுடன் 'ஆங்கிள்' பார்த்த கோவிந்து நிமிராமலே, ''வரச் சொல்!'' என்றார். அடுத்த நிமிஷம், ''வணக்கம், ஸார் !'' என்ற குரல் கேட்டது.

கோவிந்து நிமிர்ந்து பார்த்தார். '' யார், ரமேஷா ! ஓ, மை டியர் பிரிலியண்ட் நியூஸ் மேன். வெல்கம்'' என்றார், கையை நீட்டிய படியே. '' நல்ல சமயத்தில் வந்தாய். இன்றிரவு நம் வீட்டிலே பாரிபூர் மகாராஜா தம்பதிகளுக்கு விருந்து... மகாராஜா பில்லியர்ட்ஸ் பிரியர்... நானும் அவரும் இன்று மாலை முழுக்க ஆடுகிறோம்.... ஒரு கை பார்த்துவிடப் போகிறேன், மகாராஜாவை. நீ கவனித்து, காலையில் உன் பத்திரிகையில் 'பிளாஷ்' செய்துவிடுவாயல்லவா?'' என்றார்.

'' ஸாரி ஸார் ! ஐ யாம் நாட் இன் ட்யூட்டி !.... ஒரு வாரத்துக்கு லீவு போட்டிருக்கிறேன்.... என் தங்கை காணாமல் போய்விட்டாள்...''

''என்னது?''என்று அதிர்ந்தார் கோவிந்து. ''எனக்கு ஒன்றும் புரியவில்லையே? ''

'' நேற்றிலிருந்து என் சகோதரியைக் காணவில்லை, ஸார் !''

''விமலாவையா ? காணவில்லையா?.... என்ன இது!... ஆர் யூ ஜோக்கிங்? ''

''இல்லை, ஸார்!... நிஜமாகத்தான்!''

''மைகாட்... என்ன நடந்தது?''

'' வீடு வரை வந்திருக்கிறாள்... கதவைத் திறக்கும்போது யாரோ 'கிட்நாப்' செய்து கொண்டு போயிருக்கிறார்கள்.''

''டர்ட்டி பெல்லோஸ்'' என்று உடனேயே கிட்நாப் செய்தவர்களை ஆசீர்வதித்தார், கோவிந்து, அழுத்தம்திருத்தமாக. ''எனக்கு கிட்நாப் செய்கிற பயல்களைக் கண்டாலே பிடிக்காது. சுட்டுத் தள்ள வேண்டும்!''

'சர்ர்' என்று ஒரு பெரிய லாரி, மலை மலையாக 'பர்னிச்சர்'களைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு உள்ளே நுழைந்து போர்டிகோவில் நின்றது. ''வந்துவிட்டதா ?'' என்றார் கோவிந்து எரிச்சலுடன்.

செப்பு வெல்வெட் பொதிந்து, சிறந்த வேலைப்பாடுகளுடன்கூடிய நாற்காலிகளை இரண்டிரண்டு பேராக ஆட்கள் தூக்கிக் கொண்டு உள்ளே போனார்கள்.

''ஒவ்வொன்றுக்கும் வாடகை என்ன தெரியுமா? ஐந்து ரூபாய்.... நூறு 'செரு'க்கு என்ன ஆயிற்று? ஐந்நூறு! வெறும் தண்டம்!''

கோவிந்து பில்லியர்ட்ஸ் மேஜையைச் சுற்றிக் கொண்டு ரமேஷின் அருகில் வந்தார். கோபம் அவர் முகத்தில் கொப்பளித்தது. '' இதோ பார் ! ஒரு துளி நியூஸ்கூட இன்றைய விருந்தைப் பற்றி உன் பத்திரிகையில் போடாதே... பிறந்தகத்துப் பெருமையைப் பீற்றிக் கொள்வதற்காகத் தாரிணி விருந்து கொடுக்கிறாள். கடனுக்குச் சாமான்கள் வந்து இறங்குகின்றன..... கடன்பட்டாவது கண்ட கழுதைகளுக்குச் சோறு போட வேண்டும் என்பது என்ன அவசியம்...?உனக்கு அழைப்பு அனுப்பியிருக்கிறாளா ?''

''வந்திருக்கிறது, ஸார் — ''

''கிழித்துப் போடு... முழுக்கப் புறக்கணி; இருட்டடிப்பு செய்.... ஒரு வரிகூட எழுதாதே... பத்திரிகையில் அவள் டம்பப் பேச்சு வராததைப் பார்த்து அவள் அப்படியே இடிந்து போய்விட வேண்டும் — ''

ரமேஷ் பேசாமல் நின்றான். ''கடனில் மூழ்கிக் கொண்டிருக்கிறது, அப்பா, இந்தக் கப்பல்.... அது அவளுக்கு உறைக்கவேமாட்டேன் என்கிறது.... வடக்கே இருந்து எந்த ராஜ குடும்பம் வந்தாலும் விருந்து வைத்துப் பீற்றிக் கொள்ள வேண்டும் என்கிறாள்....''

''நான் விருந்துக்கு வரமாட்டேன், ஸார்.. என் சகோதரி.....''

''ஓ, ஆமாம்.... உன் சகோதரி...... ஸிஸ்டர் '' என்றார் கோவிந்து திடீரென்று நினைவு வந்தவர்போல். ''அவளைப்பற்றிக் கவலைப்படாதே.... அவளுக்கு ஒன்றும் ஆகியிராது... கண்டு பிடிக்கலாம்.''

''நேற்று முழுக்க நான் தூங்கவே இல்லை, ஸார்! ''

'' எப்படித் தூக்கம் வரும்...? கூடப் பிறந்தவளாச்சே. தானாடாவிட்டாலும் தன் சதை ஆடும் என்பார்களே... இந்த விருந்து முடியட்டும்; இந்த மகாராஜாப் பயல்கள் போய் ஒழியட்டும்....நாளைக் காலையில் வா...

---



'' அவருக்கென்ன அவ்வளவு சந்தோஷம் ?''

'' குறைந்த விலையில் ஒரு கார் வாங்கிவிட்டாராம்.''

'' அது சரி, அதில் உனக்கு என்ன இவ்வளவு சந்தோஷம் ?''

'' அந்த ஓட்டைக் காரை விற்றதே நான்தானே !''

- ஹ்யூமர் - எம். எஸ்.

## இதோ ஒரு சிறந்த முறை—

# புதிய ரம்யா

### உங்கள் குடும்பத்தை சீரியமுறையில் சுத்தமாக்கும் டிடர்ஜண்ட்

பளபளப்பாய், வெண்மையாய் டிடர்ஜண்ட் சோப்பு துணிகளைத் தீவிரமாகச் சுத்தப்படுத்துகிறது — எப்படிச் செய்யவேண்டுமோ அப்படி. இன்னும் சிறப்பாக. பிரமிக்கத்தக்க அளவு சிறப்பாக.

புதிய ரம்யா விஞ்ஞான முறையில் கலவை யானது. துணியில் ஆழச் சென்று, அழுந்தப் படிந்த ஒவ்வொரு துளி அழுக்கையும் இழுக்கும் தீவிரம் கொண்டது.

புதிய ரம்யா சர்பேக்டண்ட் (டோடிசில் பென்ஸேன் ஸல் போனேட்) தன் சுத்தமாக்கும் தன்மையால் அழுக்கைத் தாக்குகிறது; அதனை வெளியே இழுக்கிறது.

புதிய ரம்யாவிலுள்ள கார்பாக்ஸி மெதல் செல்லுலோஸ் களாசவி துணி வெளியேறும் அழுக்கைத் தனிப்படுத்துகிறது — உங்கள் ஆடைகளில் அது மீண்டும் படியாமல் பாதுகாக்கிறது; சுத்தத் திற்கு உத்திரவாதமளிக்கிறது.

அழுக்குத் துணி வெளுக்க— பளிச்சென ஒளிவீச




விரையுங்கள்! சலுகை முடியும் நாள் 31 ஆகஸ்ட், 1975

அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு

AA/UPL/1801

# குழந்தைச் செல்வங்கள் எப்பொழுதும் முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை நிறைவு செய்யுங்கள்







## நீங்களும் உங்கள் குழந்தைக்கு நாள்தோறும் போர்ன்விடா கொடுங்கள்

உங்கள் குழந்தை முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை பூர்த்தி செய்ய வல்லது மால்ட், பால், சர்க்கரை, கோகோ அடங்கியுள்ள போர்ன்விடாவேயாகும். ஒவ்வொரு டம்ளரிலும், ஊட்டத்திற்கு அதி தேவையான புரதம், கார்போஹைட்ரேட்டுகள், கலோரிகள் அடங்கியுள்ளது.

அதனாலேயே உங்கள் குழந்தைக்கும் பிரதி தினமும் போர்ன்விடா கொடுங்கள் — இரண்டு வேளைகளிலும். உங்களுக்கும் அது உகந்தது. போர்ன்விடா குடும்பத்தில் எல்லோரும் விரும்பும் ஒரு பானம்.

காட்பரிஸ்

# போர்ன்விடா

சக்திக்கும் வலிமைக்கும்
மற்றும் தீஞ்சுவைக்கும்




OBM-4024 R TM

முழுமூச்சாக அவனைக் கண்டுபிடிக்க முனை வோம்!''

உள்ளே இருந்து, ''முருகா! யஜமான் இருக்கிறாரா, ஹால்லே... கொஞ்சம் உடனே வரச் சொல்லு!'' என்று தாரிணியின் குரல் கேட்டது.

கோவிந்து உள்ளே பார்த்துவிட்டு, ரமேஷ் பக்கம் திரும்பி, ''நானே சந்திப்போம்!'' என்று கையை நீட்டினார். ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு, பில்லியர்ட்ஸ் கழியுடனேயே உள்ளே போனார்.

ரமேஷ் வெளியே வந்தான். 'கிர்க், கிர்க்' என்று சத்தம் கேட்டது. மெயின் கட்டடத்துக்கும், பக்கத்திலிருந்த பள்ளிக்கூடம் மாதிரியான இரட்டை மாடிக் கட்டடத்துக்குமிடையில் பூத்துக் குலுங்கிய தோட்டத்தில் யாரோ புல்வெட்டும் ஒலி அது. ரமேஷ் அந்தத் திசையில் திரும்பி நின்றான்.

ஆளுயர குரோட்டன்ஸ்களுக்கப்பால் தாழ்வாரத்தை ஒட்டிய அறைகள் வரிசையாகத் தெரிந்தன. அதோ, அந்த மூன்றாவது அறைதான் கோவிந்துவின் பிரத்தியேக அறை! அதற்குள்தான் கண் அறையும் இருக்கிறதா? அசாதாரணமான விற்புருவங்களுடன் இரு காந்த விழிகள் அவன் மனக் கண் முன் வந்தன..... ஓ, அந்த டேப் ரிக்கார்டர்.... காஸெட்.... விமலா....

விமலாவை நினைத்ததும் அவன் நெஞ்சம் பாசத்தால் துடித்தது. அந்தப் பெரிய கட்டடத்தின் அறைகளில் ஏதோ ஒன்றில்தான் அவளைக் கையையும் காலையும் கட்டிப் போட்டு அடைத்து வைத்திருக்கிறார்களோ?... எந்த அறையில் கிடக்கிறாள் அவள்?

ரமேஷின் கால்கள் மளமளவென்று இயங்கின. பூங்காவைக் கடக்கும்போது, இரு கட்டடங்களையும் இணைத்த தாழ்வாரத்தில் செருப்புச் சத்தம் கேட்டது; சட்டென்று ஒரு பெரிய நந்தியாவட்டைச் செடியின் பின் மறைந்து கொண்டான்.

காலடி ஓசை ஒரே சீராக நகர்ந்து வந்து, கடந்து, எதிர்த் திசையில் மறைந்தது. எட்டிப் பார்த்தான். கோவிந்துவின் முதுகு தெரிந்தது. தம் அறையின் கதவைத் திறந்து கொண்டிருந்தார் அவர்.

அறைக்குள் அவர் போகும்வரை காத்துக் கொண்டிருந்துவிட்டு, சரசரவென்று நடந்து வராந்தாவில் ஏறினான் ரமேஷ்... 'சட்'டென்று அவன் பிடரியில் ஓர் இரும்புக் கரம் விழுந்து.... பின் காலருடன் சேர்த்து அவனை அலக்காகத் தூக்கிற்று. இடி விழுந்து எறிட்டுப் பார்த்தான் ரமேஷ். வேறு யாரும் இல்லை. மதுர பவனத்தின் கூர்க்காதான். ''ஸாப்! கேட் உதர் ஹை — '' என்று வாசலைச் சுட்டிக்காட்டி உறுமினான் அவன்.

''ஸாரி!'' என்று பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு வெளிக்கேட்டை நோக்கி நடந்தான் ரமேஷ்.

**ப**தினெட்டாவது கிராஸ் ரோட்டில், பதின்மூன்றும் நம்பர் வீட்டின் 'பஸ்ஸரை' அழுத்தி விட்டுக் காத்திருந்தாள் மாலதி. முழுசாக ஐந்து நிமிஷம் கழித்துத்தான் கதவு திறந்தது.

''மிஸஸ் பணிக்கரைப்...''



''உங்க மாப்பிள்ளைக்காகச் சாப்பிட வெள்ளித்தட்டு கேட்டிங்களே! வட்டத்தட்டு வேணுமா? ஓவல் ஷேப் வேணுமா? வாழை இலை மாடல் போதுமா?''

''கப்பரை வடிவம் இருக்கிறதா?''

---

''நான்தான்.... கம் இன்'' — மிஸஸ் பணிக்கர் நகர்ந்து வழிவிட்டாள். மாலதி உள்ளே போனாள். கூடத்தில் சுவர் ஓரமாக மேஜை மீது ஏகப்பட்ட புட்டிகள் இருந்தன. மேஜையடியில் ஒரு கூண்டில் வெள்ளை முயல்கள் நடமாடின. மருந்துகளின் நெடி வீசிற்று. வெள்ளைக் கோட்டும் அரை வழுக்கையுமாக மேஜையின் முன் அமர்ந்து எதையோ ஒரு கண்ணாடியில் தடவி அதை ஆராய்ந்து கொண்டிருந்தார் ஒருவர்.

''உட்கார்'' — பணிக்கரம்மா ஒரு நாற்காலியைக் காட்டினாள்.

''என் பெயர் மாலதி.... வீட்டு மிருகங்களின் விஷயத்தில் உங்கள் மேலான ஆலோசனை ஒன்றைக் கேட்க வந்தேன்.... நொண்டிப் பூனை ஒன்று கிடைத்தது.... 'ஐயோ, பாவம்!' என்று எடுத்து வளர்க்க ஆரம்பித்தேன்... பெரிய பிரச்னையாகிவிட்டது... இரவெல்லாம் கத்தோ கத்து என்று கத்துகிறது.''

மிஸஸ் பணிக்கரின் கண்கள் ஆனந்தத்தால் மின்னின. ''ஸிஸ்டர்! அது வெறும் கத்தல் அல்ல—'' என்று உற்சாகமாக ஆரம்பித்தாள். ''அது கீதம்; காதல் கீதம். 'ஓ, என் காதலனே! நீ எங்கே இருக்கிறாய்.... வசந்தம் வந்துவிட்டது, பார்! பூனைகளின் உலகில் காமனின் கணைகள் புகுந்துவிட்டன. தவிப்பும் சூட்டும் என்னை வாட்டுகின்றன.... எங்கிருந்தாலும் ஓடி வா, என் மணாளனே' என்று குரல் கொடுக்கின்றனம்மா, அவை... அதைப் புரிந்துகொள்ள விசேஷ காதுகள் தேவை..... மாலதி! டாக்டர் பிராங்க் மானர்ஸன் எழுதிய 'பூனைகள் காதலிக்கின்றன' புத்தகத்தை நீ படித்திருக்கிறாயா? பூனை வளர்க்கத் தொடங்குமுன் நீ அதை அவசியம் படிக்க வேண்டும் — ''

''கட்டாயம் படிக்கிறேன், மேடம்'' என்றாள் மாலதி. வெள்ளைக் கோட்டு ஆசாமி குனிந்த தலையுடனேயே இலேசாகச் சிரித்தது போலிருந்தது.

''பூனைகள் ரொம்ப சென்ஸிடிவ் மைண்ட் உள்ளவை.... ரோஷம் ஜாஸ்தி... அதுவும் பெண் பூனையாக இருந்தால் கேட்கவே வேண்டாம்... உன் பூனை என்ன பூனை?''



''என் கன்னக்கோல், கத்தி, சுத்தி, துண்டு பீஸோடு, கத்திரிக்கோல் வைச்சிருந்த பையைக் காணோம். தயவுபண்ணிக் கண்டுபிடிச்சுத் தாங்களா ஸார்?''

---

''பெண் பூனைதான் மேடம்... அரை நிமிஷம் நான் கவனிக்கத் தவறிவிட்டால், முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டுவிடுகிறது!''

''எங்க அக்காவைப் போலிருக்கு'' என்றாள் மிஸஸ் பணிக்கர்.

மாலதிக்குப் 'பிடி' கிடைத்துவிட்டது. ''உங்கள் அக்கா ரொம்ப ரோஷக்காரியா?''

''ரோஷம் என்றால் சாதாரண ரோஷமா ? பெரிய கற்பரசிகளாக வாழ்ந்த ராஜ வம்சத்து ரோஷம். துளி சீண்டிவிட்டால் கூடப் போதும், 'விஷத்தைக் குடித்துவிடுவேன்' என்று குதிக்க ஆரம்பித்துவிடுகிறாள். 'பைத்தியம் நிஜமாகவே அப்படி ஏதாவது செய்து கொண்டுவிடக் கூடாதே' என்று நான் ஒவ்வொரு நாளும் கவலைப்பட்டுச் சாகிறேன்... கையில் தயாராக விஷத்தை வைத்துக் கொண்டு குதிக்கும் ஓர் அரைப் பைத்தியத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது, சொல்லு — '' என்று பெருமூச்சுவிட்டாள் மிஸஸ் பணிக்கர்.

''அவர் கணவர் — '' என்று இழுத்தாள் மாலதி.

''அந்த மனுஷரை நினைத்தால்தான் இரக்கமாக இருக்கிறது. ரொம்ப நல்ல மனுஷர். ஒரு தப்பு தண்டாவுக்குப் போகமாட்டார். அப்படி ஒரு நல்லவரை வைத்துக் கொண்டு குடித்தனம் நடத்த இதற்குக் கொடுத்து வைக்கவில்லை. எங்கோ உச்சாணிக் கொம்பில் பழம் பெருமை பீற்றிக் கொண்டு வாழ்ந்து அந்த மனுஷர் வாழ்க்கையை நரகமாக்கிக் கொண்டிருக்கிறது!''

''ஆமாம். கையில் தயாராக விஷத்தை வைத்துக் கொண்டு என்றீர்களே ?''

''ஆமாம். ஒரு பழைய காலத்து மோதிரத்தினுள் வைத்துக் கொண்டிருக்கிறாள். செல்லக் குழந்தை மாதிரி அதைச் சீராட்டுகிறாள்... எந்த நிமிஷம் அதை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு விடுவாளோ என்று பயமாக இருக்கிறது. இந்தப் பயத்திலேயே நான் தினம் தினம் செத்துக் கொண்டிருக்கிறேன்... இவரிடம் நூறு தடவை முட்டிக் கொண்டாகிவிட்டது, நைஸாக அந்த விஷத்தை அவளிடமிருந்து வாங்கி விடுங்கள் என்று ! காதிலேயே போட்டுக் கொள்ளமாட்டேன் என்கிறார்!''

''இவர் வந்து — ''

''மை ஹஸ்பெண்ட்... மிஸ்டர் பணிக்கர் ! மீட் மிஸ்டர் பணிக்கர் !''

''வணக்கம், டாக்டர் !''

''வணக்கம், மேடம்.''

''பாவம், இவ்வளவு கவலைப்படுகிறாரே, மிஸஸ் பணிக்கர்! அவருக்காகவாவது நீங்கள் ஏதாவது செய்யக் கூடாதா, டாக்டர் ?''

''இவர் பேச்சுக்குத்தான் அக்கா கொஞ்சம் கட்டுப்பட்டு வருவாள்; இல்லாவிட்டால் இவரை ஏன் கெஞ்சப் போகிறேன்....பெரிய டாக்டராம், டாக்டர்... ஐய்ய...'' என்று நிஷ்டூரமாக உதட்டைப் பிதுக்கினாள் மிஸஸ் பணிக்கர்.

டாக்டர் சிரித்தார். '' நீங்களே சொல்லுங்கள், மிஸ் மாலதி. நான் போய் அவள் கையில் உள்ள விஷ மோதிரத்தைப் பறித்து எறிய முடியுமா?... அதெல்லாம் விபரீதமாக ஒன்றும் நடக்காது.''

''ஏன் நடக்காது?... நடக்கப் போகிறது என்று என் மனசு சொல்கிறது. அது சொன்னால் கரெக்டாக இருக்கும்.... இரண்டு நாட்களாய் நாய் வேறு அழுகிறது'' என்றாள் மிஸஸ் பணிக்கர்.

'' பேத்தல்... நான் சொல்கிறேன், கேட்டுக் கொள். அவள் சாகமாட்டாள்; அதுவும் அந்த விஷத்தினால் நிச்சயமாகச் சாகமாட்டாள்.''

''எதனால் அத்தனை உறுதியாகச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள் மாலதி.

'' அது அப்படித்தான். அவளுக்கு ஏதாவது நேர்ந்தால் அது வேறு எதனாலாவது தான் இருக்கும். ஐயாம் ஷ்யூர்'' என்றார் டாக்டர் பணிக்கர்.

'' நீங்கள் அந்த மோதிரத்திலுள்ள விஷத்தைப் பரிசோதித்தீர்களா ? அது சக்தி இழந்து விட்டது என்று தெரிய வந்ததா ?'' என்று கேட்டாள் மாலதி.

டாக்டர் அவளைக் கூர்ந்து பார்த்தார். '' நீ போலீஸ்காரியா ?'' என்று திருப்பிக் கேட்டார்.

மாலதியின் முகம் கறுத்தது. ''மேடம் ! ஒரு டாக்டரிடம் அவருடைய பேஷண்டுகளின் இரகசியங்களைத் தூண்டித் துளைத்துக் கேட்கக் கூடாது. டாக்டர்கள் சொல்லவும் மாட்டார்கள்.... நீங்கள் தெரிந்து கொள்ள வந்தது பூனைகளைப் பற்றித்தான் என்றால் மிஸ்ஸஸ் பணிக்கரிடம் பேசுங்கள்.''

மிஸஸ் பணிக்கருக்கு டாக்டரின் பேச்சுப் பிடிக்கவில்லை என்று அவளுடைய முகமே காட்டிற்று; அவள் ஏதோ சொல்ல வாய் எடுத்த போது —

'ட்ரிங்... ட்ரிங்... ட்ரிங்...' என்று டெலிபோன் ஒலித்தது. விரைந்து சென்று எடுத்து, ''ஹலோ !'' என்றாள். அடுத்த கணம், ''ஓ, நீயா ?... என்ன ஆகிவிட்டது!'' என்று பதறினாள். அவள் உடம்பு கிடுகிடு என்று ஆடியது. சாய்ந்து விழப் போனாள்.

டாக்டர் பணிக்கர் பாய்ந்து சென்று அவளை 'டக்' என்று தாங்கிக் கொண்டார்.

(தொடரும்)



# தோல்வி

மலர் மன்னன்

அக்கா அத்தானுடன் ஜம்மென்று குதிரை வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டதுமே பாலாஜிக்குத் தன்னைச் சுற்றிச் சூனியம் அடித்து விட்டது.

அப்பா முன்புறம் வண்டிக்கார சாயபுவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார். அத்தான் அக்காவை முதலில் ஏற்றிவிட்டுப் பின்னால் ஏறி உட்கார்ந்து கொண்டார். அக்கா வண்டிக்குள் நடுவில் மாட்டிக்கொண்டாள். கடைசியாக உட்கார்ந்திருந்தாலாவது பார்த்திருக்க முடியும். அத்தான் நந்தி மாதிரி அவளை மறைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்ததால் அவள் முகத்தை மட்டுமே அவனால் பார்க்க முடிந்தது.

''போயிட்டு வரேன். பாலாஜி! சமர்த்தா இரு'' என்று வண்டிக்குள்ளேயிருந்தே அவனிடம் சொல்லிக் கொண்டாள் அக்கா.

'' சரியக்கா... டாட்டா '' என்று பதில் சொல்கிறபோதே அவனுக்குக் கண்களில் நீர் நிறைந்து பார்வை கலங்கி விட்டது.

'அழாதேடா கண்ணு! நான் போகல்லே. இங்கியே, உன்கூடவே இருந்திடப் போறேன். அத்தான் வேணும்னு போய்க்கட்டும்' என்றவாறு அக்கா அத்தானைத் தாண்டிக்கொண்டு வண்டியிலிருந்து 'தொப்'பென்று வெளியே குதித்துத் தன்னிடம் ஓடிவரவேண்டும். புடவைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்து விடவேண்டும் என்று பாலாஜி மனதார விரும்பினான். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. அக்கா பாட்டுக்கு ஜம்மென்று அத்தானுடன் போய்விட்டாள்.

'எங்க அக்காவுக்குக் கல்யாணம்' என்று நண்பர்களிடம் ஜம்பமடித்துக் கொண்டு திரிந்ததும், கல்யாணத்தன்று தனக்கே ஏதோ பட்டம் கட்டிவிட்ட மாதிரி தலை தெறித்துப் போனதும் எவ்வளவு மடத்தனம் என்பது இப்போதுதான் பாலாஜிக்குப் புரிந்தது.

அந்தக் கல்யாணத்தால்தான் அக்காவை அத்தானிடம் அவன் இழக்க நேரிட்டது. அந்தக் கல்யாணம் நடக்காமலே போயிருக்கக் கூடாதா?...

அக்கா அவனைப் பிரிந்து செல்வது இது இரண்டாவது தடவை.

கல்யாணம் நடந்தேறிய மூன்றும் நாளே அக்கா அத்தானுடன் புறப்பட்டுப் போக வேண்டி வந்தது. அதுதான் முதல் தடவையாய் நேர்ந்த பிரிவு.

அன்று அக்கா பாலாஜியின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

அக்காவை ரயிலேற்றிவிட அப்பாவுடன் அவனும் ரயிலடிக்குப் போயிருந்தான். ரயிலில் அக்காவும் அத்தானும் ஏறி உட்கார்ந்து



முல்லா நஸ்ரிடம் வருவோர், போவோரிடமெல்லாம் தமது வேலைக்காரனைப் பற்றிப் பிரமாதமாகக் கூறுவார். அவன் 'எண்ணெ எடு என்றால் எண்ணெயை எடுத்து வருவான். அவ்வளவு சுறுசுறுப்பு' என்றெல்லாம் புகழ்ந்தார். ஆனால் சில நாட்களில் அவனை வேலையை விட்டு அனுப்பிவிட்டார். காரணம்: உடல்நலமில்லை, மருத்துவரை அழைத்து வா என்றால் அவன் கூடவே ஒரு வக்கீலை உயிலை எழுதவும் இறுதிச் சடங்குகள் செய்ய ஒரு ஹாஜியாரையும் அழைத்து வந்ததுதான்!

— எஸ். ஜோசப் லியோன்

---

கொண்டிருந்தவரை பொறுத்துக் கொண்டிருந்தவன், வண்டி புறப்பட்டதும் அக்காவுடன் தானும் போயே ஆகவேண்டும், இல்லாவிட்டால் அக்கா கீழே இறங்கியே ஆகவேண்டும் என்று ரயிலடியே கலகலத்துப் போகிற அளவுக்கு ரகளை கட்டி விட்டான்.

அக்கா பார்வை மறையும் மட்டும் ஜன்னலுக்கு வெளியே கையை நீட்டி அவனுக்கு 'டாடா' காட்டிக் கொண்டே போனாள். அடிக்கடி அவள் கண்களைத் துடைத்துக் கொண்டதுகூட அவனுக்குத் தெரிந்தது.

கல்யாணமாகிப்போய்ச் சில நாட்கள் கழித்துத் திரும்பி வந்த அக்கா பழைய அக்காவாக இல்லை. பாலாஜியின் அக்கா என்பதை விடவும் அத்தானின் பெண்டாட்டி என்று காட்டிக் கொள்வதில்தான் அவள் அதிக கவனம் செலுத்துவதாக முதல் பார்வையிலேயே அவனுக்குப் புரிந்து விட்டது.

அப்பாவோ, அம்மாவோ அவனை அடிக்க வருகிறபொழுது குறுக்கே புகுந்து தடுக்கிற அக்கா வேறு. இவள் வேறு. அடியும் உதையும் செம்மையாக விழுந்துவிட்ட நேரங்களில் ஆறுதல் அளித்தவளும், மெத்து மெத்தென்ற தன் மடியில் அவன் தலையை இழுத்துச் சரித்துக் கொண்டு கதை சொன்னவளும் இவனுக்குச் சரியாய் ஒரு சகி மாதிரி அவனோடு கொடுக்காப்புளிக்காய் பொறுக்க வந்தவளும் ரயிலேறிப் போய்விட்டாள்.

ஒரு சமயம் அவன் புஜங்களில் அம்மை குத்தியபோது அப்பம் மாதிரி வீங்கிப் போன புண்களின் வலியையும் நமைச்சலையும் மறக்கடிக்க அவன் தூங்கும்வரை தன் விரலால் புண்களைச் சுற்றிச் சுற்றி நீவி விட்டுக் கொண்டே இருந்த அக்கா இவள் அல்ல. 'எப்பொழுதடா இங்கிருந்து போகப் போகிறோம்' என்று உள்ளூறத் தவித்துக் கொண்டே கிடக்கும் இவள் அத்தானின் பெண்டாட்டி.

அக்காவை அழைத்துப் போக நாலைந்து நாட்கள் முன்னதாகவே வந்துவிட்ட அத்தான் அவனிடம் பிரியமாகத்தான் நடந்து கொண்டார். அவனுக்கென்று ஊரிலிருந்து சட்டை, நுணிமணி, பிஸ்கெட் எல்லாம் வாங்கிக் கொண்டு வந்தார். அடிக்கடி அவனைப் பக்கத்தில் இழுத்து வைத்துக்கொண்டு அரட்டை அடித்தார். பாலாஜிக்கும் அத்தானைப் பிடித்துத்தான் இருந்தது. ஆனால் அக்கா இப்படி உருமாறிப் போனதற்கு இந்த மனிதன்தான் காரணம் என்பது திடீர் திடீரென்று அவனுக்கு உறைத்தபோது அவனால் மனதார ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

வீட்டுக் கூடத்திலோ திண்ணையிலோ அத்தான் நடமாடிக் கொண்டிருக்கிற போது அவரது கால்களுக்குக் குறுக்கே கால் கொடுத்து அவரைக் குப்புறத் தள்ள வேண்டும்போல் அவனுக்குக் குரூரமான ஆசை தோன்றும்.

குப்புற விழும் அத்தானின் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு தலை முடியைப் பிடித்து உலுக்க வேண்டும்.

''இனிமேல் அக்காவை எங்கிட்டேயிருந்து பிடுங்கிட்டுப் போவியா, போவியா'' என்று மிரட்டிக் கொண்டே அந்தச் சுருள் முடித் தலையை உலுக்க வேண்டும். ''மாட்டேண்டா! மாட்டேண்டா'' என்று அத்தான் கெஞ்சுவார். அதன் பிறகு, 'போனால் போகிறது, போ' என்று கையைத் தட்டிக் கொண்டு எழுந்திருக்க வேண்டும்.

பக்கத்தில் அவன் நிற்பதையும் இலட்சியம் பண்ணாமல் அக்கா சுவாரசியமாக அத்தானுடன் வம்படிப்பதைப் பார்க்கும்போது அவனுக்கு அக்காவின் மீதே ஆத்திரம் பற்றிக் கொண்டு வரும். 'படா ஸ்டைலு... அவனும் அவ சிரிப்பும், குலுக்கும்' என்று பொருமிக்கொள்வான்.

முதல் நாள் சாயங்காலம் அக்காவும் அத்தானும் அவனை விட்டு விட்டு சினிமாவுக்குப் போனார்கள். தானும் அவர்களுடன் போக வேண்டும் என்று பாலாஜி அடம் பிடித்தான். அம்மா 'மொத்' என்று முதுகில் ஒன்று வைத்தாள்.

''வேணும்னா அவனும் வரட்டுமே, அம்மா'' என்றாள் அக்கா.

''வரட்டுமே'' என்றார், அத்தானும்.

''ஒண்ணும் வேணாம். நீங்க போயிட்டு வாங்க'' என்று அதட்டலாகக் கூறினாள் அம்மா.

'பாலாஜி வரலேன்னா நாங்களும் போகலே' என்று அக்கா சொல்ல வேண்டும். அவனையும் அழைத்துப் போக வேண்டும் என்பதில் நிஜமாகவே அவளுக்கு ஆசை இருந்தால் அப்படிச் சொல்வாள் என்று பாலாஜி நினைத்துக் கொண்டான். ஆனால் அக்கா பொறுப்பு விட்டது என்கிற மாதிரி அத்தானுடன் புறப்பட்டுப் போய் விட்டாள்.

இருட்டிய பிறகும் பாலாஜி திண்ணையில் வாசற்படியிலேயே உட்கார்ந்திருந்தான். அம்மா நாலைந்து தரம் சாப்பிடக் கூப்பிட்டாள். பிடிவாதமாகத் திண்ணையிலேயே உட்கார்ந்திருந்தான் பாலாஜி.

வெகு நேரம் ஆனபின் அக்காவும் அத்தானும் சினிமா விட்டு ஜோடியாகத் திரும்பி வந்தார்கள். தெருக் கோடியிலேயே அவர்கள் வருவது அவனுக்குத் தெரிந்து விட்டது.

உரசி, உரசிக் கொண்டு, எதைப் பற்றியோ பேசிச் சிரித்துக் கொண்டு, ஜோடியாகக் காற்றில் மிதக்கிற மாதிரி அவர்கள் வந்தார்கள்.

''ஏண்டா, பாலாஜி! இன்னும் தூங்கலியா?'' என்று சர்வ சாதாரணமாகக் கேட்

டுக்கொண்டே அக்கா படியேறி உள்ளே போய் விட்டாள்.

அத்தான் மட்டும் மெதுவாக அவன் பக்கம் குனிந்து, ''இந்தா பாலாஜி, உனக்காகப்பூந்தி வாங்கிட்டு வந்திருக்கோம்'' என்று ஒரு பொட்டலத்தை அவன் கையில் திணித்தார்.

பாலாஜி பொட்டலத்தைத் தெருவில் வீசி எறிந்து விட்டு அத்தானை வெறித்து நோக்கினான்.

அவன் இப்படிச் செய்வான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. அவரது முகம் சட்டென்று இருண்டது. உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டவராய், ''அட உனக்கு இவ்வளவு கோவமா?'' என்று சிரித்தபடி அவன் கன்னத்தைத் தட்டினார்.

பாலாஜி வெறி பிடித்த மாதிரி பாய்ந்து தன் கன்னத்தில் பதிந்த அவரது கையைப் பிடித்துப் பற்கள் அழுந்தக் கடித்தான். அத்தான் திடுக்கிட்டவராய் வலி தாங்காமல் கையை உதறிப் பின்னுக்கு இழுத்துக்கொண்டார். விடுவிடுவென்று அவர் உள்ளே போய் விட்டார்.

மறுநாள் பொழுது விடிந்ததிலிருந்தே வீட்டில் அச்சுறுத்தும் மௌனம் கவிந்து விட்டிருந்தது. பாலாஜியுடன் யாரும் முகம் கொடுத்துப் பேசவில்லை. அக்கா அவனை ஒரு மாதிரியாகப் பார்த்தாள்.

அவன் ஒன்றும் நடக்காதது மாதிரி காப்பி குடிக்கச் சமையற்கட்டுக்குப் போனபோது, ''ஏண்டா நாயே, அத்தானை என்னடா பண்ணினே?'' என்று குரல் எழுப்பாமல் உறுமிக் கொண்டே அவனது அடித் தொடையில் திருகினாள் அம்மா. பாலாஜி பல்லைக் கடித்துக் கொண்டு அவசரமாக எழுந்து கூடத்துக்கு வந்தபோது அங்கே அப்பா அவனைப் பார்த்துக் கண்களாலேயே 'இரு இரு' என்று கறுவினார்.

அன்று மத்தியான வண்டிக்கே அக்காவை அழைத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பி விடப் போவதாக அத்தான் அறிவித்தார்.

''இன்னும் இரண்டு நாட்கள் லீவு இருக்குன்னீங்களே... இருந்துட்டே போகலாமே...?'' என்று அப்பா குழைந்தும் அத்தான் கேட்கவில்லை.

''ஊரிலே கொஞ்சம் வேலை இருக்கு. இன்னிக்கே புறப்பட்டால்தான் சரியாயிருக்கும்'' என்று பிடிவாதமாகப் பயணம் வைத்து விட்டார்.

மத்தியானம் வீட்டு வாசலில் குதிரை வண்டி வந்து நின்றதும் ரயிலடி வரைக்கும் தன்னையும் அழைத்துக்கொண்டு போவார்கள் என்று பாலாஜி எதிர்பார்த்தான். ஆனால் யாருமே அவனை வண்டியில் வந்து ஏறிக் கொள்ளும்படி கூப்பிடவில்லை.

அவனை நடுத் தெருவில் நிறுத்திவிட்டுக் குதிரை வண்டி தான்பாட்டுக்குப் புறப்பட்டு விட்டது.

தெருக் கோடியில் வண்டி திரும்பியபோது, அக்காவுக்குப் பதிலாக அத்தானே கையை நீட்டி அவனுக்கு 'டாட்டா' காட்டினார்.

'இப்ப என்ன செய்வே?' என்று அவர் கட்டை விரலை நீட்டித் தனது வெற்றியை ஸ்தாபித்துக் காட்டுகிற மாதிரி இருந்தது பாலாஜிக்கு.

வெறுப்புடன் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டான் பாலாஜி.

ஜன்னல்.

அதன் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள் ருக்மிணி. திடீரென்று தன் கணவனை அழைத்தாள்.

''மச்சான்... மச்சான்.... இங்கே வந்து பாரேன்.....''

பல் துலக்கிக் கொண்டிருந்த குமரப்பன், அதே கையோடு வந்து பார்த்தான்.

அடுத்த வீட்டு அறை.

சுமதி, ஜன்னல் கிராதியில் கண்ணாடியை மாட்டி, அதில் பார்த்துத் தன் முகத்தை அழகுபடுத்திக் கொண்டிருந்தாள்.

கண்களுக்கு மையிட்டாள். புருவத்தை அழகுபட எழுதினாள். பொட்டிட்டாள். பிறகு தலை சீவத் தொடங்கினாள்.

குமரப்பனுக்கு எரிச்சல் வந்தது.

''இதைப் பார்க்கிறதுக்காகவா என்னைக் கூப்பிட்டே? நான் என்னமோ ஏதோன்னு நெனைச்சேன்....'' என்று திரும்பினான்.

''கொஞ்சம் பொறு மச்சான்... வேடிக்கை இருக்கு....''

''இதிலே என்ன வேடிக்கை? பாவம்... அந்தப் பொண்ணு என்னமோ ஆசையா அலங்கரிச்சிக்குது... போய் உன் வேலையைப் பாரு....''

''அதைச் சொல்லலே மச்சான்... இப்படி யெல்லாம் அலங்காரம் பண்ணிக்கிறா இல்லையா....? கொஞ்ச நேரம் ஆனதும் ஏதோ பைத்தியம் பிடிச்ச மாதிரி எல்லாத்தையும் கலைச்சிடுவா.... நானும் ரொம்ப நாட்களா பார்த்துக்கிட்டிருக்கேன்.....''

''அப்படியா?'' என்று வியப்போடு கேட்டான் குமரப்பன்.

அவனுக்கும் வியப்புத்தான். ஒரு பெண் தன்னை அலங்கரித்துக் கொள்ளக் குறைந்த பட்சம் அரை மணி நேரம் ஆகும். அப்படி அலங்கரித்துக் கொண்ட பிறகு, வேலை மெனக்கெட்டு அதைக் கலைப்பாளோ!

அதிலும் இந்தச் சுமதியின் விஷயம் தனி.

'அவள் என்னமாய்த்தான் அலங்கரித்துக் கொண்டாலும் சீவி முடித்துச் சிங்காரித்தாலும் பார்ப்பதற்கு அழகாய் இல்லையே..!' என்று நினைத்தான் குமரப்பன்.

''பாரேன்... பாரேன்...'' என்று கிசுகிசுத்தாள் ருக்மிணி. அவள் சொன்னது சரியாய்ப் போயிற்று.

கண்ணாடியையே பார்த்துக் கொண்டிருந்த சுமதியின் கண்களில் இப்போது கண்ணீர் விளிம்பு கட்டத் தொடங்கியது. கண்ணாடியில் தெரிந்த தன் முகத்தையே வெறித்துப் பார்த்தாள். அதில் துயரம் பின்னியது.

அவ்வளவுதான்—

எழுதிய புருவத்தை அழித்தாள். கண்களைக் கசக்கி மையைக் கலைத்தாள். சீவி முடித்த தலை முடியைச் சின்னாபின்னப்படுத்தினாள். கண்ணாடியை எடுத்துத் தூரப் போட்டாள். பிறகு ஜன்னல் விளிம்பில் அமர்ந்து கொண்டு மௌனமாய் விம்மத் தொடங்கினாள்.

குமரப்பனுக்கு 'ஐயோ பாவம்' என்றிருந்தது. அவனுக்குத் தெரியும் — சுமதி அறிவான பெண் என்று. அக்கம்பக்கத்து வீடுகளில் யாருக்கு என்ன பிரச்னை என்றாலும் அதைத் தீர்த்து வைக்கும் சாமர்த்தியம் — பிறரது கஷ்டநஷ்டங்களில் பங்குகொள்ளும் பெருந்தன்மை அவளிடம் உண்டு.

ஆனால் கடவுள் அவளுக்கு வைத்த ஒரே குறை — அழகின்மைதான்.

சிலருக்கு முகம் அழகாய் இருக்காது. உடல் வாளிப்பு இருக்கும். வேறு சிலருக்கு உடல் அமைப்பில் அழகு இருக்காது. முகத்தில் கவர்ச்சி பொங்கும்.

ஆனால் இந்தச் சுமதிக்கு....?

பாவம்... சர்க் குச்சி போல் ஒல்லியான உடல். காய்ச்சலில் படுத்திருந்தது போல் களையிழந்த முகம். இவ்வளவுக்கும் வயது என்னவோ இருபதுதான்.





# இரண்டும் அதுதான்

டி.கே.டி. துரைராஜன்

கோட்டை ஆபீசில் டைப்பிஸ்டாக வேலை பார்த்து மாதம் மூந்நூறு ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கிறாள். இவ்வளவு நல்ல அம்சங்கள் இருந்தும், பாழாய்ப் போன கடவுள் பெண்மைக்குரிய அழகைத் தரவில்லையே !

''ஏன் மச்சான் இந்தப் பொண்ணு ஏன் இந்த மாதிரி பண்ணுது....?'' என்று கேட்டாள் ருக்மிணி.

''தான் அழகா இல்லேன்னு அது மனசிலே ஒரு பலஹீனம். அந்தப் பலஹீனத்தாலே கோபம் — வெறுப்பு. எல்லாத்தையும் கலைச்சிட்டு உட்கார்ந்து அழுது.... நாம அழகா இல்லேங்கிற நினைப்பே ஒரு பொண்ணுக்குப் பலஹீனம் தானே!'' என்று விளக்கம் கொடுத்தான் குமரப்பன்.

ருக்மிணி தன் வேலையில் ஈடுபட்டாள்.

இரண்டு மணி நேரம் கழிந்தது.

''ருக்மிணி அக்கா '' என்று குரல் கேட்டு ருக்மிணி திரும்பினாள். பழைய புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்த குமரப்பனும் யாரென்று பார்த்தான்.

சுமதிதான்.

''என்ன சுமதி?'' என்று ஆதுரத்துடன் அவள் அருகில் வந்தாள் ருக்மிணி.

''நேத்து ஆபீஸ்லே சொன்னாங்க....... இன்றையிலேயிருந்து புது ரேஷன் கார்டு கொண்டாந்து தர்றாங்களாம். அவங்க வர்ற சமயத்திலே வீட்டிலே யாரும் இல்லேன்னா திருப்பி எடுத்துக்கிட்டுப் போயிடுவாங்களாம். அப்புறம் வாங்கறது கஷ்டம். எங்கேயும் போகாம வீட்டிலேயே இருங்க....''

''சரியம்மா....'' என்று கூறிய ருக்மிணி, சுமதியின் கையில் ஹாண்ட் பாக்கும், டிபன் பாக்ஸும் இருப்பதைப் பார்த்துவிட்டு, ''ஆபீசுக்கா புறப்பட்டுட்டே?'' என்று கேட்டாள்.

''ஆமாக்கா.... நிறைய டைப் பண்ண வேண்டியிருக்கு.....''

''சரியாத் தலைகூட வாரிக்காம வெறுமனே போட்டு வைச்சிக்கிட்டு கிளம்பிட்டியே!''

''அது போதும்.... அலங்காரம் பண்ணிக்கிட்டா மட்டும் யார் என்னைக் கட்டிக்கப் போறான் ?'' என்று கேட்டுவிட்டுக் 'கலகல' வென்று சிரித்தாள் சுமதி.

ருக்மிணி, தன் கணவனைப் பார்த்தாள்.

''சரியக்கா... நான் வர்றேன்.... கார்டை வாங்கி வைச்சிரு.... நாளைக்கு நாம ரெண்டு பேருமா போயி அதைப் பதிவு பண்ணிட்டு ரேஷன் வாங்கிட்டு வருவோம்....'' என்று சொல்லிவிட்டு ஒரு துள்ளலுடன் ஓடியேவிட்டாள் சுமதி.

அவள் போன திசையையே பார்த்தபடி செயலற்று நின்றுவிட்டாள் ருக்மிணி.

''என்ன ருக்கு.... அப்படி நிக்கிறே ?'' என்று கேட்டான் குமரப்பன்.

''இல்லே... காலையிலே இந்தப் பொண்ணு பட்ட பாடு என்ன ? அழுத அழுகையென்ன....? இப்ப இருக்கிற சந்தோஷமென்ன?'' என்று தன் மோவாயில் கையை வைத்தாள் ருக்மிணி.

''ஏன் சந்தோஷமா இருக்கக் கூடாதா? கொஞ்ச நேரத்துக்கு நாம அழகா இல்லேன்னு மனசிலே அந்தப் பலஹீனம் இருந்தது....''

'' இப்போ ?''

''இப்போ அதுவே பலமாப் போச்சி... அந்தப் பொண்ணு ஒண்ணு சொல்லிச்சி — கேட்டியில்லே அலங்காரம் பண்ணிக்கிட்டா மட்டும் எவன் என்னைக் கட்டிக்கப் போறான்னு....!''

''ஆமா... அதுக்கென்ன ?''

'' அதான் பாயிண்ட்... நமக்கு அழகில்லேங்கிறதினாலே யாரும் நம்மைக் கட்டிக்கப் போறதில்லே.... அப்படியே கட்டிக்கிட்டாலும் ஆசையா.... அன்பா இருக்கப் போறதில்லே.... அதனாலே நம்மை நாமே தான் காப்பாத்திக்கணுங்கிற எண்ணத்தினாலே மனசிலே ஒரு தைரியமும் வருது.... உடனே சந்தோஷம் ஏற்படுது.... ஒரு பொண்ணு அழகா இல்லேன்னா அவளுக்குப் பலஹீனமும் அதுதான்.... பலமும் அதுதான்.....'' என்று குமரப்பன் சொல்லச் சொல்ல — ருக்மிணியின் கண்களில் கண்ணீர் திரண்டது.



## திறமை மிக்க திலகங்கள்

# ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன்.

கலைமகள் நாராயணஸ்வாமி ஐயர் ஞாபகார்த்த நாவல் பரிசு 'பெண் குரல்' என்ற நவீனத்துக்கு 1953ம் ஆண்டில் அளிக்கப்பட்டது. அதை எழுதிய ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன் அவர்களை நான் அப்போது சந்தித்ததில்லை. ஆனால் பரிசு பெற்ற அந்த நாவலைக் கலைமகள் இதழ்களில் படித்தபோது அவருடைய எழுத்தை மிகவும் ரசித்தேன். ஒரு நடுத்தர வர்க்கக் கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணின் பிரச்னைகளை மிகத் தெளிவாகக் கலை வடிவத்துடன் கூர்ந்து கவனிக்கும் திறமை அன்றே அவரிடம் பிரகாசித்தது. அந்த நாட்களில் பெண் எழுத்தாளர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு.

கலைமகள் பத்திரிகையின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்துக்காக நான் திருச்சியிலிருந்து சென்னை வந்தபோது ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணனை நேரில் சந்தித்துப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. அதன் பிறகு நாளடைவில் எழுதுவதற்காக அவர் உழைக்கும் அளவையும் புரிந்துகொள்ள முடிந்தது.

இவர் கணவர் மின்சாரத் துறையில் இஞ்சினியராகப் பணியாற்றிச் சமீப காலத்தில் ஓய்வு பெற்றவர். கணவர் அலுவல் ஆற்றிய பல இடங்களில் கிடைத்த சூழ்நிலைகளையும், நிலைக்களன்களையும் கூர்ந்து கவனித்து, அங்குள்ள மனிதர்களுடன் நேரடியாகப் பழகி, தம் கற்பனைகளின் அஸ்திவாரங்களை வளப்படுத்திக் கொண்டு பல சிறந்த நாவல்களை எழுதியிருக்கிறார்.



சொல்பவர்: திரு அகிலன்

இது மாத்திரமல்லாமல், பல்வேறு இடங்களுக்கும் போய், சூழ்நிலைகள், மனிதர்கள், அவர்கள் பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும் ஆராய்கிறார்.

'சாந்தி மிஷன்' என்ற நிறுவனத்தின் உதவியாலும் அரசாங்க அதிகாரிகளின் முயற்சியாலும் இவர் கொள்ளைக்கார மான்சிங்கின் மகனைச் சிறைச்சாலையில் சந்தித்து, கொள்ளைக்காரர்களின் கூட்டம் நடத்தும் வாழ்க்கை முறையைப் பற்றிக் கேட்டு அறிந்துகொண்டார். பிறகு ஒரு போலீஸ் அதிகாரி துணையுடன், 'ராவைன்' என்று குறிப்பிடப்படும் கொள்ளைக்காரர்கள் மறைந்து வாழும் மலைப் பகுதிக்குச் சென்று போதிய குறிப்புக்கள் எடுத்துக் கொண்டு குவாலியர் பகுதியை விட்டு பம்பாய்க்குப் போனார்.

இவர் பம்பாய்க்குத் திரும்பிய பத்து நாட்களில் இவருக்கு எட்டிய செய்தி இவரை மிகவும் வருத்தத்துக்குள்ளாக்கியது. இவருக்கு வழிகாட்டியாக இருந்து அழைத்துச் சென்ற போலீஸ் அதிகாரியை வேறு ஒரு பகுதியில் யாரோ கொள்ளைக்காரர்கள் சுட்டுக் கொன்றுவிட்டார்களாம்!

'அமுதமாகி வந்தான்' என்ற நாவலை இவர் உருவாக்கியபோது இவர் கணவர் நீலகிரி மலைச் சாரலில் உள்ள 'குந்தா' திட்டத்தில் பணியாற்றி வந்தார். ராஜம் கிருஷ்ணன், இளம் இன்ஜினீயர்கள், தொழிலாளர்கள் முதலியவர்களை அவ்வப்போது சந்தித்து, தாம் உருவாக்கும் நாவலின் நிலைக்களனைத் தெளிவாக்கிக் கொள்ளப் பல கேள்விகளைக் கேட்பார். அந்த ஊழியர்கள் ''எங்க சீஃப்பே ரொம்பத் தேவலை. அவர் இந்த மாதிரிக் கேள்விகள் எல்லாம் கேட்க மாட்டார். நீங்க என்னடான்னா எக்கச்சக்கமாகக் கேள்விகளைக் கேட்கிறீர்களே?'' என்பார்களாம்.

இப்படியெல்லாம் ஆராய்ந்து எழுதும் விஷயங்களைத் தம் கணவருக்கும் படித்துக் காண்பித்து, தவறுகள் நேர்ந்து விடாமல் கவனித்துக் கொள்வார்.

மருத்துவ மேதை ரங்காச்சாரியின் வாழ்க்கைச் சரித்தை எழுத முனைந்த இவர், அதற்காகப் படித்த மருத்துவப் புத்தகங்கள் ஏராளம். 'அநேகமாக நானே ஒரு டாக்டராக மாறிவிட்டேன்' என்று வேடிக்கையாகச் சொல்லுவார். டாக்டர் டி. எம். ரங்காச்சாரி என்பவர் டாக்டர் ரங்காச்சாரியிடம் நெருங்கிப் பழகியவர். அவர் அந்திம காலத்தில் படுத்த படுக்கையாக இருந்தபோது தான் ராஜம் கிருஷ்ணனால் அவரைச் சந்திக்க முடிந்தது. அவர் மெல்லிய குரலில், ஸ்விட்சர்லாந்தில் இருக்கும் ஒரு மருத்துவமனையைப் பற்றியும் அதில் காலஞ்சென்ற ரங்காச்சாரிக்குக் கிடைத்த அனுபவங்களைப் பற்றியும் சொன்னார். அவரிடமிருந்து மேலும் சில விஷயங்களைத் தெளிவாக்கிக் கொள்ள முடியாத நிலையில், ஸ்விட்ஜர்லாந்தில் உள்ள

## முப்பதாண்டு முள் கரண்டி!



பெர்லின் நகரைச் சேர்ந்த திருமதி மார்கரட் ஃபிங்கர் என்ற பெண், தாம் 30 வருடங்களுக்கு முன் ஓர் ஓட்டலிலிருந்து எடுத்துச் சென்ற முள் கரண்டியை இப்போது திருப்பித் தந்திருக்கிறார்!

1945ம் வருடம் இவர் ஓட்டலில் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, திடீரென்று எதிரி விமானங்கள் குண்டுமாரி பொழிந்தன. அதனால் இவர் சாப்பாட்டுத் தட்டுடன் ஒரு பாதுகாப்பான இடத்தில் சென்று ஒளிந்தார். இவர் வந்த வழி, குண்டு விழுந்து அடைக்கப்பட்டு விட்டதால், வேறு வழியாக வெளியேறினார். அப்போது எடுத்துச் சென்ற முள் கரண்டியைத்தான் இப்போது திருப்பித் தந்தார் பத்திரமாக! இவரது நாணயத்தைப் பாராட்டி ஓட்டல்காரர் இவருக்கு ஒரு விருந்து வைத்தார்!

சம்பத்குமாரி - ஆதாரம்: வெஸ்டர்ன் டைம்ஸ்

---

இந்தியத் தூதுவருடன் தொடர்பு கொண்டு அந்த மருத்துவ மனை பற்றித் தகவல்களைச் சேகரித்துத் தம் புத்தகத்தில் நுழைத்தார்.

நீலகிரி மலைப் பிரதேச வாழ்க்கை நாட்களைத் தம் 'குறிஞ்சித் தேன்' நாவலுக்காகப் பயன்படுத்திக் கொண்டார். 'படகர்'கள் சமுதாயத்தைப் பற்றிய நவீனம்.

இவர் கணவர் கோவாவில் சில காலம் உத்தியோகம் பார்த்தபோது, 'வளைக்கரம்' என்ற நவீனம் உருவாகியது. கோவானிய மக்களுடன் நெருங்கிப் பழகி அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் புரிந்து கொண்டு, சமகால வரலாற்றுப் பின்னணியில் ஒரு நாவலை உருவாக்கினார். சமகால வரலாற்றைக் கற்பனையில் பிணைப்பது அவ்வளவு சுலபமில்லை. ஆனால் அந்த வித்தை இவருக்குச் சுலபமாகவே வருகிறது.

இவருடைய 'வேருக்கு நீர்' நவீனம், இவருக்குச் சாகித்திய அக்காடமி பரிசை வாங்கிக் கொடுத்தது. தமிழகத்தில் முதல் தடவையாகச் சாகித்திய அக்காடமி பரிசு பெற்ற பெண்மணி இவர்தான்!

பாரதத்துக்குச் சுதந்திரம் கிடைத்த பிறகு நிலவிய சூழ்நிலையை நிலைக்களனாக வைத்து, காந்தீயக் கனவுகள் எப்படி நிறைவேற்றப்படாமல், அதன் விளைவு வன்முறைகளை எப்படித் தோற்றுவிக்கிறது என்பதை நல்லதொரு சித்திரமாக இந்த நவீனத்தில் உருவாக்கியிருக்கிறார்.

அச்சில் இவர் எழுதிய முதல் சிறுகதை ஆங்கிலத்தில்தான் வெளியானது. கணவருக்கு எப்போதோ கிடைத்த 'போனஸ்' வருவாயை மையக் கருத்தாகக் கொண்டு அந்தச் சிறுகதையை எழுதினார். ஆனால் தொடர்ந்து உடனேயே முதல் தடவையாக இவருடைய தமிழ் சிறுகதை சாவி அவர்கள் அப்போது ஆரம்பித்திருந்த 'வெள்ளிமணி'யில் வெளியாயிற்று. நாளடைவில் ஒரு மணியான எழுத்தாளராக மாறிவிட்டார் இந்தப் பெண்மணி.

கேட்டு எழுதியவர் : **கோமதி சுவாமிநாதன்**

# வட்ட மேஜை

'குருவின் குரல்' என்ற தலைப்பின் கீழ், இசைத்தட்டைப் பற்றிய குறிப்பு பூர்த்தியாக இல்லாதது அது பற்றிய விவரங்கள் தெரிந்தவர்களுக்குச் சற்று ஏமாற்றத்தை அளித்துள்ளது.

ஒலிப்பதிவு செய்து அதை நற்பணிகளுக்கு அர்ப்பணித்தவர் திருச்சியைச் சேர்ந்த திரு ஜே. சடகோபன் அவர்கள். அந்த இசைத்தட்டின் மேலுறையில் காணப்படும் விஷயச் சுருக்கத்தில், ''Recording *Supplied by Mr. J. Sadagopan, J. S. Radio & Co.*'' என்று இருக்கிறது.

திருச்சி — 3
9—8—75

ஏ. குப்புசுவாமி

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாவது பரிசு பெற்ற ''எப்போதும் உள்ளவர்கள்'' என்னும் சிறுகதையினை எழுதிய திரு வி. இராமமூர்த்தியை வெகுவாகப் பாராட்டுகிறேன். இப்போதெல்லாம் தமிழ்ச் சிறுகதை உலகில் உலவிவரும் புதுமைக் கதைகளுக்குள்ளே முற்றிலும் புதிய பாணியில் புனையப்பட்டுள்ளது இச்சிறுகதை! இயந்திர யுகம்; அதன் உச்ச நிலையான கம்ப்யூட்டர்க் காலம். அதனுடைய ஆதிக்கமே எல்லாம். நல்லறமான இல்லற வாழ்வுக்கு இடமில்லை. பெற்றோர் யார்? பெயர்தான் உண்டா? அன்பு காதல், ஆசை, பாசம் இவற்றுக்கெல்லாம் இடமில்லை. உள் உணர்ந்தாலும் வெளிக்காட்ட வாய்ப்பில்லை. ஆனாலும், மனித உள்ளங்களை வெல்வதென்பது இயலாச் செயல்—எப்போதும், எதனாலும், எவராலும்! இல்லாவிடில் சார்ஜெண்ட் கண்களில் நீர் எழுந்து திரையிட்டிருக்குமா, என்ன?

புதுமையிற் புதுமை புகுத்தியுள்ள சிறுகதைச் செல்வர் வாழ்க! வளர்க!

மதுரை
9—8—75

வி. ஜி. சீனிவாசன்

கல்கி 20-7-75 இதழில் வெளியான சினிமாக்கதை 'கேல் மேல் மே' லூயிஸ் தாமஸ் என்னும் பிரெஞ்சு எழுத்தாளர் எழுதிய *Good Children don't kill* என்ற நாவலின் அப்பட்டமான தழுவலாகும். இந்தப் பிரபல மர்ம நாவலாசிரியரின் நாவல்களில் முதல் முதல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டதே இந்த நாவல். இதை மொழி பெயர்த்தவர் கிரகாம் ஸ்நெல்.

உதகை
9.8-75

அ. கிருஷ்ணமூர்த்தி




## 20

கபூர் காரை 'ஸ்டார்ட்' செய்தார். இப்பொழுது நேரே ஆஸ்பத்திரிக்குப் போவதா இல்லா விட்டால் ஹோட்டலுக்குச் சென்று ஷம்மீனைப் பார்த்துவிட்டுப் போகலாமா? ஷம்மீனைப் பிறகு பார்க்க முடியாமலே போனாலும் போகலாம். சந்தேகம் தெளிந்துவிட்டது.. ஆனால் விஜயாவுக்கு ஏற்பட்ட சந்தேகம் நியாயமானதுதான். 'பாடி'யை எப்படி அப்புறப்படுத்தி யிருப்பார்கள்? அவளைக் கடத்திக் கொண்டு போய்க் கொலை செய்வதனால் அவர்களுக்கு என்ன லாபம்? கொலை செய்வதனால் ஏற்படும் சிக்கல்களை உணராத அளவுக்கு ரத்தன்லால் முட்டாள் இல்லை. அப்படியானால் ரத்தன்லால் சொல்வது உண்மையா? மோகினியின் 'பாடி'யை ஓட்டலிலிருந்து மிக சாமர்த்தியமாகத்தான் அவர்கள் அப்புறப்படுத்தியிருக்க வேண்டும். இது எத்தனை பேர்களுக்குத் தெரிந்திருக்கிறதோ ? — இப்பொழுது நான் ஓட்டலுக்குப் போனால், இது பற்றித் தெரிந்தவர்களுடைய கவனத்தை நான் கவராமலா இருக்க முடியும்? எல்லாம் தலைக்கு மேல் போய்விட்டது.

நான் மோகினி இறந்திருப்பாள் என்று நம்பவே இல்லை. அவர்கள் 'பிளாக் மெயில்' செய்ய முற்பட்டபோதே, தொடர்பை முறித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவர்கள் சொல்வது உண்மையாக இருந்து விட்டால் என்னுவது என்ற ஓர் இலேசான பயம். ஷம்மீனை நான் உடனுக்குடனேயே இழக்க விரும்பவில்லை. வாழ்க்கையில் நான் உண்மையிலேயே வாழ்ந்தது, ஷம்மீனுடன் இருந்த சில மணி நேரங்கள்தான். பணத்துக்காகவோ, வேறு எதற்காகவோ அவள் தன்னை என்னிடம் முழுமையாக ஒப்படைத்துக்கொண்டாள். அவளை மறுபடியும் பார்த்தாக வேண்டும். ஆஸ்பத்திரிக்கு இதற்குப் பிறகு போகலாம்.

மோகினியின் 'அது' ஆஸ்பத்திரியில் இருக்கப் போகிறது. உயிர் இருந்தபோது, 'அது' ஆடின ஆட்டம் என்ன? எல்லாமே 'பொய்' என்றாகி விட்டது. மோகினியைக் கொல்ல நான் விரும்பியதுண்டு. ஆனால் கொன்று விட்டேன் என்ற உண்மையை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை!

அவர் ஓட்டலுக்குள் நுழைந்தபோது, வரவேற்பு அறையிலிருந்த அனைவரும் அவரைப் பார்ப்பது போல் அவருக்குப் பட்டது. எல்லாருக்கும் தெரிந்திருக்குமோ?

அஞ்சலி எப்படி அங்கு போனான்? ரவேஜா வீட்டுக்குப் போன் செய்திருக்கலாம். 'அது' எப்படி 'ரிட்ஜ்' அருகே போயிற்று? ரத்தன்லால் எத்தனை பேரை இதில் சம்பந்தப்படுத்தி யிருக்கிறானோ? காட்டில் கிடந்த பிணத்தை உடனுக்குடனே கண்டுபிடித்து விட்டார்களே! விஜயா சொன்னது சரிதான். கொலை என்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. மனித உயிரின் மதிப்பு அது பிரிந்த பிறகுதான் தெரிகிறது. எல்லாச் செய்தித் தாள்களுக்கும் கொண்டாட்டம்தான். அரசியல்வாதிகள் 'ஸ்டன்ட்' அடிக்காத காலங்களில் இது போன்ற கொலையைப் பற்றிய செய்திகள்தானே மக்களுடைய 'அறிவுக்குத் தீனி'?

ஷம்மீன் கதவைத் திறந்தபோது அவள் முகத்தில் ஆச்சரியம் பரவியது. அவள் அவரை எதிர்பார்க்கவேயில்லை என்பது அவள் வெளியே புறப்பட்டுச் செல்ல அலங்காரம் செய்து கொண்டிருப்பதினின்றும் தெரிந்தது.

''இன்று ராத்திரி வருவதாக அல்லவா சொன்னீர்கள்?'' என்றாள் ஷம்மீன்.

''ராத்திரி வருமோ என்னவோ, நான் வந்து விட்டேன்!''

அவர் கதவைத் தாளிட்டார்.

ஷம்மீன் கலவரத்துடன் அவரைப் பார்த்தாள்.

''நீ எனக்கு இப்பொழுது தேவை'' என்றார் கபூர்.

''இப்பொழுதா?''

''ஆமாம்...''

''நான் கொஞ்சம் வெளியே போக வேண்டும்.''

''அப்புறம் போய்க் கொள்ளலாம். வேண்டுமென்றால் நிறையப் பணம் தருகிறேன். தில்லியை விட்டே ஓடிவிடு.''

''என்ன சொல்கிறீர்கள்?''

''முதலில் நான் சொல்வதைக் கேள். பிறகு சொல்லுகிறேன்.''

அவன் அவர் சொன்னபடி கேட்டான். அவருக்கு இளமை திரும்பி விட்டதோ என்று சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது. இத்தனை வெறி அவருக்குள் எப்படி ஒளிந்திருந்தது!

''இப்பொழுது சொல்லுங்கள். நான் தில்லியை விட்டு ஏன் ஓட வேண்டும்?'' என்றான் ஷம்பீன்.

''ஒரு கஸல் பாடு.''

''என்ன ஆகிவிட்டது உங்களுக்கு?''

''இனிமேல்தான் எல்லாம் ஆகப் போகிறது. கஸல் பாடு.''

அவன் பாடினான். அவர் மெய் மறந்துகேட்டுக்கொண்டிருந்தார். அந்தப் பாட்டுக்கும் குரலுக்கும் அவர் இப்போது உருகியது போல் இதுவரையில் வேறு எந்தப் பாட்டுக்கும் குரலுக்கும் உருகியது இல்லை. கண்களிலிருந்து நீர் அருவியாய்ப் பெருகிற்று. வாழ்க்கை எவ்வளவு சுவாரசியமான விஷயம்! இந்தப் பெண் ரத்தன்லாலுடன் சேர்ந்து சதி செய்கிறாள் என்பதை நான் நம்ப மாட்டேன். அப்படிச் செய்தாலும் அதை நம்புவது எனக்கு நான் செய்துகொள்ளும் துரோகம்... ஓர் அழகான பெண் தன்னை முழுதும் என்னிடம் ஒப்படைத்துக் கொண்டு எனக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறாள்! என்ன அழகான கற்பனை! இந்தக் கற்பனை எனக்குப் போதும். போலீஸில் சரணடைய நான் தயார்.

அவர் கைப்பையிலிருந்து 'செக்' புத்தகத்தை எடுத்தார்.

''உனக்கு எத்தனை பணம் வேண்டுமோ, அதைப் பூர்த்தி செய்துகொள். கையெழுத்துப் போட்டுத் தருகிறேன்.''



''ஏன்? உங்களுக்கு என்ன ஆகிவிட்டது?''

'' 'பாடி' கிடைத்து விட்டது.''

'' 'பாடி'யா?''

''ஆமாம். என் மனைவியின் 'பாடி' நான் கொலை செய்து விட்டேன் என்று விஜயாவிடம் சொன்னாயே, அந்த 'பாடி'. நீ பணத்தை வாங்கிக் கொண்டு தலைமறைவாகப் போய் விடு. என்றால் உனக்குச் சிக்கல்கள் வேண்டாம்.''

ஷம்மீன் முகத்தில் பீதி வெளிப்படையாகத் தெரிந்தது.

''உங்கள் மனைவியின் 'பாடி'தான் என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா? யார் சொன்னார்கள்?''

''யார் சொன்னால் உனக்கு என்ன?''

''உங்கள் மனைவி, நீங்கள் அவள் கழுத்தை நெரித்தபோது இறக்கவில்லை என்று எனக்குத் தெரியும்.''

கபூர் 'செக்'கை அவளிடம் நீட்டினார்.

அவள் சில விநாடிகள் தயங்கினாள். பிறகு வாங்கிக்கொண்டாள். அதை மேஜையின்மீது வைத்தாள்.

அவர் அவளைக் கொலை செய்யவில்லை என்று தான் சொன்னபிறகும், அவர் அதைப் பற்றி அதிகம் கவலைப்படாமல் இருந்தது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''உங்கள் மனைவியை யார் கொலை செய்திருப்பார்கள்?''

''நான்தான் செய்தேன் என்று நீ என்னிடம் சொன்னாய். விஜயாவிடமும் இதையே சொல்லி உறுதி செய்திருக்கிறாய். மறுபடியும் என்ன சந்தேகம்?''

''உங்கள் மனைவி உங்கள் கையால் இறக்கவில்லை என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். ரத்தன்லால் நீங்கள் கொலை செய்துவிட்டதாக உங்களிடம் சொல்லச் சொன்னான். உண்மையிலேயே கொலை நடந்திருந்தால் நான் நேற்றே ஓடிப் போயிருப்பேன். நீங்கள் கழுத்தை நெரித்தபோது, உங்கள் மனைவி மயங்கி விழுந்தார். மயக்கம் தெளிந்தும், தெளியாததுமான ஓர் இரண்டுங்கெட்டான் நிலையில் ரத்தன்லால் அவரை அழைத்துக் கொண்டு போனான். அவரை மறைத்து வைத்து உங்களிடமிருந்து பணம் பறிக்க வேண்டும் என்பதுதான் அவன் திட்டம். இதற்கு மேல் வேறொன்றும் எனக்குச் சத்தியமாகத் தெரியாது.''

கபூர் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். மோகினியை யார் கொன்றிருப்பார்கள்? அவளைக் கொல்வதனால் ரத்தன்லாலுக்குப் பிரச்னையே தவிர சௌகரியமில்லை. அவனும் கொன்றிருக்க முடியாது. மோகினிக்கு மயக்கம் தெளிந்த பிறகு அவளை அவனால் சமாளிக்க முடியாமல் கோபத்தினால் கொன்றிருப்பானோ? அப்படியானால் அது இவனுக்கும் தெரியாமல் இருக்கலாம். நான்தான் கொன்றேன் என்று போலீஸில் சரண் அடைந்து விட்டால் என்ன? என்னுடைய 'இந்த வாழ்க்கை' வெளியிலே வராமலிருந்துவிடும். எனக்கும் மோகினிக்கும் இடையே ஏற்படும் தினசரிச் சண்டைகளைப் பற்றித் தெரியாதவர்கள் யாருமே இருக்க முடியாது. 'கோபத்தில் கொன்றேன்' என்று சொல்லிக் கொள்ளலாம். விஜயாவை இதில் சம்பந்தப்படுத்தியது முட்டாள்தனம். நான்தான் கொன்றேன் என்று வாக்குமூலம் கொடுத்துவிட்டால் விஜயாவின் பெயரையும் இதில் இழுக்காமல் இருக்கலாம். அவளைக் கொல்லவேண்டுமென்று கழுத்தை நெரித்ததே நான் கொன்றதற்குச் சமானம். இதனால் அவள் சாகவில்லை என்ற சிறிய பௌதிகத் தகவல் எந்த விதத்தில் எனக்கு ஆறுதல் அளிக்கப் போகிறது? என் வாழ்க்கை முடியப் போகிறது. கொலைகாரன் இல்லை என்று நிரூபித்து விட்டு என்னைப் பற்றிய 'இந்த வாழ்க்கை' எல்லாருக்கும் தெரிந்து அவமானத்தைச் சுமந்து கொண்டு வாழவேண்டியது அவசியம்தானா?—

என் வாழ்க்கை ஒரு தோல்வி. இதற்கு யார் காரணம்? நான்தான். விஜயா சொன்னது போல் எப்பொழுதோ விவாகரத்து செய்து கொண்டு நிம்மதியாக இருந்திருக்கலாம். என் குடும்பம் இப்படி இருப்பதற்கு யார் காரணம்? நான்தான். மோகினியின் பணம் எனக்குத் தேவையாக இருந்தபோது எங்களுடைய மனப் பொருத்தமின்மையுடன் சமரசம் செய்து கொண்ட நான், எனக்குச் சௌகரியப்பட்டபோது எதிர்ப்புணர்ச்சியைக் காட்ட உரிமையே கிடையாது. என் குடும்பத்தில் யாருக்கும் என்மீது மதிப்பு இல்லை. நான் ஒரு கோழை... நான் ஒரு கோழை... கோழைதான் கொலை செய்வான்.... கோழைகள் தற்கொலை செய்வார்கள்...நான் கொலை செய்ய முயன்றேன். இதுதான் வித்தியாசம்.

''உங்கள் மனைவியை யார் கொன்றிருப்பார்கள்? நீங்கள் சொல்வது உண்மைதானா?''

கபூர் இதற்கும் பதில் சொல்லவில்லை. கோட்டை எடுத்துப் போட்டுக் கொண்டார்.

''நான் போய்வருகிறேன். உங்கள் 'செக்'கும் எனக்குத் தேவையில்லை. ஹோட்டல்



## லட்சணம்

முகம் பெரிதாகவும் அகலமாகவும் காது சிறிதாகவும் எடுப்பாகவும், வயிறு பருமனில்லாமல் ஒடுங்கியும் முதுகு பெரியதாகவும் அழகாகவும் கூன் இல்லாமல் சமமாகவும், கடைக்கண் சிறிது சிவப்பாகவும் கருவிழிகள் நல்ல கறுப்பாகவும், கால்கள் மேற்பாகம் கனத்தும் அடிப்பாகம் சிறுத்தும் அதிக வளைவு இல்லாமலும் கீலா எலும்பு இரண்டு புறமும் சமனாகவும், சுவாசம் உற்றுக் கேட்கும்படி சிறியதாகவும் இருப்பது..... (விடை: 64ம் பக்கம் பார்க்க)

---

கணக்கை நீங்களே தீர்த்து விடுங்கள். உண்மையாகச் சொல்லப் போனால், நீங்கள் வருவதற்கு முன்னால் யாருக்கும் சொல்லிக் கொள்ளாமல் போய்விடுவது என்றுதான் நான் தீர்மானித்தேன். நீங்கள் விஜயாவின் மூலம் கொடுத்தனுப்பிய பணத்தில் பாதி என்னிடம் இருக்கிறது. அது போதும். ரத்தன்லாலின் நடத்தல் விவகாரமே எனக்குப் பிடிக்கவில்லை. அவன்தான் நேற்று உங்கள் மனைவிக்குப் போன் செய்து இங்கே அனுப்பியிருக்கிறான். உங்கள் மனைவி உங்களுடன் சண்டை போட்டு விவாகரத்து செய்யக்கூடும் என்றுதான் அவன் எதிர்பார்த்தான். அப்படிச் செய்தால், நான் உங்களை மணந்துகொள்ள வற்புறுத்த வேண்டுமென்பது அவன் யோசனை. ஆனால் விவகாரம் வேறு வகையாக மாறிவிட்டது.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே அவள் அவர் மேஜையில் வைத்திருந்த செக்கை எடுத்துக் கிழித்தெறிந்தாள்.

''என்னிடம் பணமாக இல்லை. இருந்தால் கொடுத்திருப்பேன்.''

''பரவாயில்லை... நான் போகிறேன். நான் கொலையில் மாட்டிக் கொள்ள விரும்பவில்லை. இந்த 'ஹோட்டல் பில்லை'த் தீர்க்கும் அளவுக்காவது பணம் இருக்கிறதா?''

அவர் 'வாலெட்'டை எடுத்துப் பிரித்தார்.

''இருக்குமென்று நினைக்கிறேன்.... நீயே கொடுத்துவிடு.'' அவர் அதிலிருந்த நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

''நீ எங்கே போகப் போகிறாய்?'' என்று கேட்டார் கபூர்.

''தெரியாது. டில்லியை விட்டுப் போகப் போகிறேன்... அவ்வளவுதான் தெரியும்.''

''தாங்க்யூ; ஃபார் எவ்வரித்திங்'' என்று சொல்லிக் கொண்டே அறையை விட்டு வெளியே வந்தார் கபூர்.

அவர் ஆஸ்பத்திரிக்குப் போனபோது, 'போஸ்ட்மார்டம்' ஆகிவிட்டது. 'அது' 'மார்க்கில்' இருப்பதாகச் சொன்னார்கள். அவர் அந்த அறைக்குள் நுழைந்ததும், ரவோஜா அவர் கைகளை இறுகப் பற்றிக் கொண்டு ஏதோ முணுமுணுத்தார். அவர் என்ன சொன்னார் என்று கபூர் கவனிக்கவில்லை. 'அது' வெள்ளைத் துணியால் போர்த்தப்பட்டிருந்தது. அஞ்சலி ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருந்தாள். அவள் முகத்தில் எவ்விதமான சலனமும் இல்லை.

அஞ்சலியின் கைகளைப் பற்றிக்கொண்டு ஷம்மி நின்று கொண்டிருந்தான். இவன் எப்படி வந்தான்? ரவோஜா அவனுக்கும் ஃபோன் செய்திருக்கலாம்.

முகத்திலிருந்து வெள்ளைத் துணியை நீக்கினார்கள்.

மோகினியைப் பார்ப்பதற்கு இப்போது அழகாக இருப்பது போல் அவருக்குப் பட்டது. கழுத்தில் நீலம் பாய்ந்திருந்தது. கண்கள் திறந்தபடியே இருந்தன. பயத்தில் உறைந்து போன கண்கள். இவளையா நான் இதுவரை வெறுத்து வந்தேன்? எதற்காக? — மரணம் என்ற மகத்தான உண்மையின் சந்நிதானத்தில் விருப்பு, வெறுப்பு, ஆகிய எந்த உணர்ச்சிக்குத்தான் அர்த்தமுண்டு? — இவளை நான் கொல்லவில்லை. இதிலுமா எனக்குத் தோல்வி! அதோ அவள் முகத்தில் இது பற்றி ஓர் ஏளனப் புன்னகை தோன்றுவது போல் இருக்கிறது! 'என்னை ஆள முடியாவிட்டாலும் அழிக்கவுமா உங்களால் முடியவில்லை?'— அவள் கேட்பது என் காதில் சன்னமாக ஒலிக்கிறது. இல்லை... நான்தான் உன்னைக் கொன்றேன்... நான்தான் கொன்றேன்...

''ஐ ஆம் ஸாரி மிஸ்டர் கபூர்!'' முகத்தை மூடுகிறார்கள். யார் யாரோ வருகிறார்கள். கையைப் பற்றுகிறார்கள். தோளைத் தொடுகிறார்கள். அவர் கண்களை மூடிக்கொண்டார்.

இப்பொழுதே ஒப்புக் கொள்ளலாமா? வேண்டாம். ரவோஜாவைத் தனியாகச் சந்தித்துச் சொன்னால் போதும். ரவோஜா நம்ப மாட்டார். ஆனால் நம்பித்தான் ஆக வேண்டும். சாட்சியங்கள் எனக்கு எதிராக— இல்லை சாதகமாக! — இருக்கின்றன. மனைவி காணாமல் போனாள் என்பதைப் பற்றி நான் அலட்டிக் கொள்ளவில்லை. அவள் என்னை எப்படிக் கொடுமைப் படுத்தியிருக்கிறாள் என்று எல்லோருக்கும் தெரியும். நேற்று மாலை பெரிய சண்டை நடந்திருக்கிறது. ஆஃபீஸில் எனக்காக அவள் காத்துக் கொண்டிருந்தாள் என்று மணி கூறியதும், அவளைப் பார்க்காமலே நான் போய்விட்டேன். இரவு அவளைக் கொலை செய்தேன். 'பாடி'யை எடுத்துக் கொண்டு போய் 'ரிட்ஜ்' அருகே போட்டுவிட்டுத் திரும்பி விட்டேன். இதுதான் என்னுடைய வாக்குமூலம். ரத்தன்லால் கொலை செய்திருந்தானானால் அவன் இந்தப் பக்கம் தலைவைத்தே படுக்கப் போவதில்லை... ஷம்மியும் ஓடிவிட்டான். பாதிப் பணத்தை எடுத்துக் கொண்டு ஷம்மீன் எங்கே ஓடியிருப்பான் என்று தேடுவதில் ரத்தன்லால் முனைந்திருப்பான்... எஸ்... இவளை நான்தான் கொன்றேன்.. நான்தான் கொன்றேன். இவளைக் கொன்று இவளிடமிருந்து இவளைக் காப்பாற்றினேன். இது பெரிய சேவையல்லவா? செத்துப் போனது இவளுக்கு எப்பேர்ப்பட்ட நிம்மதி! என் மனைவிக்கு இந்த நிம்மதியைத் தரக்கூடவா எனக்கு உரிமையில்லை? யுவர் வார்ட், இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் உங்களுடைய மனைவியைக் கொன்று பாருங்கள். அது அவளுக்கு எப்பேர்ப்பட்ட நிம்மதி தெரியுமா? வாழ்க்கையில் இறப்பது என்பதுதான் ஒரே உண்மை. அந்த உண்மையைச் சந்திப்பதில்

தான் நிம்மதி இருக்கிறது. யுவர் லார்ட்... நீங்கள் எனக்குத் தூக்குத் தண்டனை கொடுக்க வேண்டாம்.... நீங்களே என் கழுத்தை நெரித்துக் கொல்லுங்கள்... தண்டனையைக் கொடுப்பது நீங்கள்... அதை நிறைவேற்று பவன் இன்னொருவனா? இது என்ன நியாயம்? நீங்களே என் கழுத்தை நெரித்துக் கொல்லுங்கள்.

அஷோக்கும் சசியும் வருகின்றனர். அஷோக் ரவோஜாவிடம் ஏதோ பேசுகிறான். சசி அருகில் நின்று மிகவும் உன்னிப்பாகக் கேட்கிறாள். அஷோக் ஈரக் கண்களால் என்னைப் பார்க்கிறான். ரவோஜா என்ன சொல்லியிருப்பார்? — அவர் அஞ்சலியைச் சுட்டிக் காட்டி ஏதோ சொல்லுகிறார்.

அஷோக் மோகினி அருகில் வந்து நிற்கிறான். முகத்திலிருந்து வெள்ளைத் துணியை நீக்க யாரோ முன்வரும்போது அஷோக் வேண்டாம் என்று கையினாலேயே சொல்லுகிறான். அஞ்சலி வெளியே செல்கிறாள். சசி அவளைப் பின்தொடர்ந்து செல்லுகிறாள். சசி பின்னால் சென்று அவள் தோளைத் தொடுகிறாள். அஞ்சலி திடுக்கிட்டது போல் திரும்புகிறாள். அவள் முகத்தில் கோபம் வெளிப்படையாகத் தெரிகிறது. அவள் கோபத்தில் ஏதோ சொல்லியிருக்க வேண்டும். சசி திரும்பி விடுகிறாள். அஞ்சலிக்கு என்ன கோபம்? யார் மீது? அம்மாவின் மரணம் அவளை எந்த விதத்தில் பாதித்திருக்கக்கூடும்? ரவோஜா அவளைச் சுட்டிக் காட்டி என்ன சொல்லியிருப்பார்? — ஷம்மி அஞ்சலி அருகில் போய் நிற்கிறான். அவள் அவனை ஏதோ கேட்கிறாள். அவன் தயக்கத்துடன் உள்ளே பார்க்கிறான். பிறகு பையிலிருந்து ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்து நீட்டுகிறான். அவள் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொள்கிறாள். இதுதான் அவள் எதிர்ப்பு உணர்ச்சி. யாரை எதிர்த்து? மரணத்தையா?

ராகேஷ் வருகிறான். அவன் அஞ்சலியை ஒரு விநாடி ஏற இறங்கப் பார்த்துவிட்டு உள்ளே நுழைகிறான். அவன் அம்மா அருகில் நின்று சிறிது நேரம் 'அதை'யே உற்றுப் பார்க்கிறான். பிறகு சுற்றியிருந்த அனைவரையும் பார்க்கிறான். ரவோஜாவைக் கேட்கிறான்: ''கொலையா?''

''ஆமாம். கழுத்தை நெரித்துக் கொன்றிருக்கிறார்கள்.'' அவன் என்னைப் பார்க்கிறான். அவன் பார்வையைச் சந்திக்க எனக்குத் துணிவில்லை.

அஷோக் என் அருகில் வருகிறான். ''மேலே ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.''

''என்னை ஒன்றும் கேட்காதே. செய்.''

இந்த இடத்தை விட்டு வெளியேற வேண்டும். எல்லோருடைய கண்களும் என்மீது தான் இருக்கின்றன.

வெளியே ஆகாயம் நிர்மால்யமாக இருக்கிறது. ஆகாயத்தையே பார்த்துக் கொண்டு நிற்கலாம் போலிருக்கிறது. 'மார்க்கி'ன் பக்கத்திலிருந்த செடிகள் பூத்துக் குலுங்கின. எத்தனை வண்ணம் வண்ணமான மலர்கள்! இத்தனை அழகான செடிகளை இங்கு வைத்திருக்கிறார்களே. இது யாருடைய குரூரமான ஹாஸ்யம்!



அடிக்கல் நாட்டு விழா!

''டாடி...''

அஞ்சலி அருகில் வந்து நிற்கிறாள்.

''நீங்கள்தான் கொன்றீர்களா?''

''அஞ்சலி! என்ன அப்படிக் கேள்வி?'' என்று அவளை ஷம்மி கண்டிக்கிறான்.

அவள் வார்த்தைகளை வைத்துக் கொண்டு குழப்பவில்லை. நேரடியாகக் கேட்கிறாள். இதற்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்?—

வீட்டுக்குப் போக வேண்டும். இனி இந்த இடத்தில் இருக்க முடியாது. ரவோஜா விசாரிக்க எப்படியும் வீட்டுக்குத்தான் வருவார். எனக்கு இப்பொழுது தனிமை தேவை. நாலா பக்கமும் கண்கள் என்னைத் துளைக்கின்றன. கண்கள்... கண்கள்... மோகினியின் கண்கள் பயத்தில் எப்படி மலர்ந்திருந்தன! அந்தப் பயம் அவள் முகத்துக்கு ஒரு தனி அழகைத் தந்தது. சாவைக் கண்டு பயமா? உலகில் அவள் பயந்த விஷயமும் ஒன்றிருக்கிறது. தான் சாகவே மாட்டோம் என்று அவள் நினைத்திருக்க வேண்டும். உலகை ஆக்கிரமிக்க நினைப்பவர்கள் யாருமே தாங்கள் சாகமாட்டோம் என்றுதான் உறுதியாக இருப்பார்கள் போலிருக்கிறது. மரணந்தான் அவர்களுக்குச் சரியான சவால்....

வீட்டுக்குப் போவதற்கு முன்னால் 'கிளப்'புக்குப் போய்விட்டுச் சென்றால் என்ன? ஒரு நீட் ஆ ட்ரிங்க்! 'கிளப்'பில் ரத்தன்லால் இருந்தாலும் இருப்பான். அவன் மோகினியைக் கொலை செய்திருந்தால் 'கிளப்'பில் இருப்பான் என்பது என்ன நிச்சயம்? அவன் மோகினியை எதற்காகக் கொலை செய்திருப்பான்? ஒன்றுமே புரியவில்லை... என்னால் மோகினி சாகவில்லை என்று ஷம்மீன் சாதிக்கிறான். எது உண்மை?

'கிளப்'பில் வழக்கப்படி வருகின்ற கூட்டம்தான். பத்ரா அவரைக் கண்டதும் வேகமாக அவரிடம் வந்தான்.

''குட் ஈவினிங் மிஸ்டர் கபூர்... உள்ளே சதீஷ் அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கிறான்.''

ooooooooooooooooooooooooooo

## 62–ம் பக்க விடை



.....நல்ல மாடுகளின் லட்சணம் என்று குமுதினி எழுதித் தொகுத்துள்ள ஆயிரம் விஷயங்கள் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது! -ப. ஜெயராஜா

oooooooooooooooooooooooooooooo

''என்ன செய்கிறான்?''

''ஹி ஈஸ் டெரிபிளி டிரங்க்... அவனுடைய அம்மா வீட்டை விட்டுப் போய்விட்டாளாம். அதைக் கொண்டாடுகிறானாம்.. கன்னா, மல்ஹோத்ரா இன்னும் இரண்டு மூன்று பேர்கள் சேர்ந்து கொண்டு அவனைக் கிளப்பி விட்டு வேடிக்கை பார்க்கிறார்கள்.''

''ஐஸீ...''

உள்ளே போகலாமா வேண்டாமா? இவனைக் கேட்டால் தெரியும், ரத்தன்லால் இருக்கிறானா என்று...

''ரத்தன்லால் இருக்கிறானா?''

''இருக்கிறான்...''

''அவனைக் கூப்பிடுங்கள்... நான் அவனை அவசரமாகப் பார்க்க வேண்டும்.''

ரத்தன்லால் வந்தான். அவனும் நிறையக் குடித்திருந்தான்.

''வாட் எ ப்ளஷர், மிஸ்டர் கபூர்...''

''காருக்குப் போகலாம் வா... உன்னுடன் பேச வேண்டும்.''

''மகன் கதாநாயகனாக இருக்கும் இடத்துக்குப் போகக் கூடாதா?''

கபூர் பதில் சொல்லவில்லை. அவர் காரில் போய் உட்கார்ந்தார். ரத்தன்லால் அவர் அருகில் அமர்ந்தான்.

''மோகினியை நீதான் கொன்றாயா?''

''இல்லை; நீதான் அதைச் செய்தாய்!''

''ஷம்மீன் எல்லாவற்றையும் சொல்லிவிட்டாள்.''

''ஷம்மீனா?''

''ஆமாம். ஷம்மீன்தான்... நீ இனிமேல் அவளைப் பார்க்க முடியாது. அவள் போய் விட்டாள்.''

''நீ என்ன சொல்கிறாய்?''

''அது கிடக்கட்டும்... சொல்... நீதான் கொன்றாயா?''

''இல்லை; நீதான் அதைச் செய்தாய்?''

''மோகினியின் 'பாடி' கிடைத்துவிட்டது. ஆஸ்பத்திரியில் இருக்கிறது. நான் அங்கு போயிருந்தேன். நான்தான் கொன்றேன் என்று போலீஸாரிடம் சொல்லப் போகிறேன். உன்னைச் சம்பந்தப்படுத்தப் போவதில்லை... பயப்படாதே... ஆனால் எனக்குத் தகவல் தெரிய வேண்டும். நீதான் கொன்றாயா?''

ரத்தன்லால் பேசாமல் இருந்தான்.

''சத்தியமாகச் சொல்கிறேன். உன்னை இதில் சம்பந்தப்படுத்த மாட்டேன். உண்மையை எனக்காகச் சொல்.''

''நான் கொல்லவில்லை! நீதான் அதைச் செய்தாய்!''

''கிளிப்பிள்ளை மாதிரி சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லாதே... நான் வாக்குறுதி அளித்தும் என் மீது உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''உங்கள் மனைவி கொலை செய்யப்பட்டு விட்டாளா?'' என்று அவன் மிகவும் பலஹீனமான குரலில் கேட்பது ஆச்சரியமாக இருந்தது.

''என்ன சொல்கிறாய் நீ?''

''நான் இதை எதிர்பார்க்கவில்லை.''

''என்ன சொல்லுகிறாய் நீ?''

ரத்தன்லால் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். அவனால் இப்பொழுது பொய் சொல்ல முடியாது. மிகவும் முயற்சி செய்ய வேண்டும்; அவ்வளவு குடித்திருந்தான்.

''நீங்கள் செய்யாத குற்றத்தை ஏன் செய்ததாகச் சொல்லப் போகிறீர்கள்?''

''அதைப் பற்றி நீ கவலைப்படாதே... நீ உண்மையைச் சொல்.''

ரத்தன்லால் சிறிது நேரம் பேசாமலிருந்தான்.

''நான்தான் உங்கள் மனைவியை போன் செய்து அவளை ஹோட்டலுக்கு அழைத்துக் கொண்டு வந்தேன். டாக்ஸியில் வந்தோம்.''

''தெரியும்.''

''எப்படி?''

''அதைப் பற்றிக் கவலைப்படாதே. மேலே சொல்.''

''நீங்கள் தாக்கியதும் அவள் மயங்கி விழுந்தாள். மயக்கம் தெளிந்ததும் அல்லது மயக்கம் தெளியாத ஒரு நிலையில் அவளை என் இருப்பிடத்துக்கு அழைத்துக் கொண்டு போனேன்.''

''அவளை மறைத்துவைத்துவிட்டு என்மீது கொலைக் குற்றம் சுமத்திப் பணம் பறிக்க வேண்டும் என்பது உன் திட்டம். அப்படித் தானே?''

''இல்லை... அவளிடம் பேசி விவாகரத்துக்கு உடன்படச் செய்ய வேண்டும் என்பது தான் என் யோசனை. அப்படி விவாகரத்துக்கு அவள் உடன்பட்டால் ஷம்மீனை மணக்கும்படி உங்களைக் கட்டாயப் படுத்த வேண்டும் என்பது என் திட்டம். ஆனால் நீங்கள் அவளைக் கொலை செய்து விட்டதாக உங்களை நம்பச் செய்ய வேண்டும் என்று உங்கள் மனைவிதான் யோசனை சொன்னாள். அடிப்படையில் நீங்கள் கோழை என்பதால் இதுவே உங்களைச் சில நாட்களாவது சித்திரவதை செய்யப் போதுமானது என்பது அவள் கருத்து. அதுவரையில் அவள் தலைமறைவாக இருப்பதாக வாக்களித்தாள். இதை நான் எனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டேன். அவள் இதற்குப் பிறகு எங்கே போனாள் என்று எனக்குச் சத்தியமாகத் தெரியாது'' என்றான் ரத்தன்லால்.

(தொடரும்)

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...



# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர், உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம்.
வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலைத் தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்



அமரர் கல்கி
நினைவுச்சிறுகதைப்
போட்டி



## 250 ரூபாய்: மூன்றாவது பரிசுக்கதை-2

# கழுகு

### சிவசங்கரி



கழுகுகளின் கத்தல் காதைத் துளைத்தது. எழுத்தில் விவரிக்க முடியாதபடி ஓர் அமானுஷ்ய கத்தல் — காலை இல்லை, இரவு இல்லை என்று எப்போதும் சகிக்க முடியாதபடி ஒரு கத்தல் — என்ன ஜன்மங்கள் இவை ?

சப்தம் அதிகமாகிப் போனதால் எழுந்து ஜன்னல் வழியாகப் பார்த்தேன். எங்கள் வீட்டை ஒட்டியிருந்த வயற் காட்டைத் தாண்டிச் சின்னச் சவுக்குத் தோப்பு. அங்கு கூடு கட்டி வாழும் பறவைகளில் இந்தக் கழுகுகளும் சில.

சவுக்கு மரத்தில் அமர்ந்திருந்த ஒரு கழுகு சிறகுகளை விரித்து விமானம் பறப்பதுபோல் பறந்து வீட்டைச் சுற்றியிருந்த வேலியின் முதுகில் உட்காரவும் எங்கிருந்தோ இன்னும் இரண்டு கழுகுகள் கிளம்பி ஆகாசத்தில் வட்டமடித்துக் கொண்டே அடிவயிற்றிலிருந்து ஆங்காரத்துடன் கத்த ஆரம்பித்தன—

என்னத்துக்காக இப்படி ஓர் ஆர்ப்பாட்டம் ? நன்றாய் எட்டிப் பார்த்தவள் வேலியில் உட்கார்ந்திருந்த கழுகு தன் கால்களில் பந்து போன்ற ஒரு பொருளை இடுக்கிக் கொண்டிருந்ததை அப்போதுதான் கவனித்தேன்.

என்ன அது ?

சாம்பல் நிறத்தில் 'புசு, புசு' வென்று — அது என்ன ?

மேலே வட்டம் அடித்துக் கொண்டிருந்த கழுகுகளைச் சற்றும் லட்சியம் செய்யாமல் கீழே இருந்தது தன் கூரிய அலகால் அந்தச் சாம்பல் நிறப் பொருளைக் குத்தி இழுத்தது.

ஒரு தரம் — இரண்டு தரம் —

ஆ! இந்தத் தடவை இழுத்தபோது நூல் போல் ஏதோ ஒன்று அதன் மூக்கோடு சேர்ந்து வந்தது. வெளியே இழுத்ததை 'லபக்' கென்று உண்டுவிட்ட அந்தக் கழுகு மறுபடி மூக்கால் குத்தி இழுக்கவும் இந்த முறை சிவந்த நிறத்தில் ரப்பர்க் குழாய்போல் ஒன்று வெளியே வந்தது —

எனக்குப் புரிந்து போயிற்று —

வயலில் செத்துக் கிடந்த பெருச்சாளியையோ, எலியையோ கால்களால் எடுத்து வந்து இது இங்கு அமர்ந்து சுகமாய் உண்ணுகிறதா ?

காலின் நகங்களால் அந்த எலியை அலாக்காகப் பிடித்துக் கொண்டு இது மூக்கால் அதன் உடம்பைப் பல இடங்களில் குத்திக் கொறுவதைக் கண்டபோது எனக்குக் குமட்டியது.

ஹுக் ! — சும்மாவா சொன்னார்கள், பிணம் தின்னும் கழுகுகள் என்று !

சனியன் — வேறு எங்கேயாவது போய்த் தின்னக் கூடாது ? இங்கு வந்து என் கண்ணில் பட வேண்டுமா ?

'ஷூ' — என்று கத்தி அந்தக் கழுகை விரட்ட முயற்சி செய்தேன் —

அது அசையக்கூட இல்லை.

மேலே வட்டமிட்ட கழுகுகளின் இரைச்சல் தாங்க முடியாது போகவே ஜன்னல் கதவுகளைச் சாத்திவிட்டு உள்ளே திரும்பினேன்—

"இன்னிக்கு என்ன சமையல்?" என்றாள் சமையல்காரப் பாட்டி.

சற்றுமுன் கண்ட கோரக் காட்சி நெஞ்சிலேயே நின்று கசந்ததால் பாட்டிக்கு உடனடியாய்ப் பதில் சொல்ல எனக்குப் பிடிக்கவில்லை.

"எஜமானர் ஊரிலே இல்லையே —வத்தக் குழம்பு இட்டு, பருப்புத் துவையல் அரைக் கட்டுமா ?...."

"ம்...."

பாட்டி போய்விட்டாள்.

போனவளை நான் பார்த்துக் கொண்டு நின்றேன்.

மழித்த தலை; பட்டையாய் விபூதி ; வெள்ளைப் புடவை; ஒரு காலத்தில் மிக அழகாக இருந்திருக்கக் கூடியவள் என்பதை உணர்த்தும் தீர்க்கமான மூக்கு, சிவந்த மேனி.

பாட்டிக்கு இப்போது அறுபத்தைந்து வயசு இருக்குமா ?

இருக்கும்; இருக்கும்.

என்னிடம் வேலைக்கு வரும்போதே அறுபதைத் தாண்டி விட்டது என்றாள். வந்து ஐந்து வருடங்கள் ஆகிவிட்டன. அறுபத்தைந்துக்கு மேலேயே இருக்கும்.

பாவம்.

இந்தத் தள்ளாத வயதில் ஒருத்தர் வீட்டில் ஊழியம் புரிந்து கொண்டு...

அவள் தலை எழுத்து.

ஐந்து வருடங்களுக்கு முன்னால் சமையலுக்கு ஆள் தேடி நான் அலைந்து கொண்டிருந்த போது திருநெல்வேலி பெரியம்மா கடிதம் போட்டாள்.

"இங்கு ஒரு வயசான அம்மாள் சமையல் வேலைக்கு வருகிறேன் என்று சொல்லுகிறாள். நல்லவள். வாழ்ந்துகெட்ட குடும்பம். அமிருதமாய்ச் சமைப்பாள். உன்னிடம் அனுப்பட்டுமா ?" என்று எழுதியிருந்தாள்.

''உடனே அனுப்புங்கள்'' என்று பதில் போட்டு ரயில் செலவுக்குப் பணமும் அனுப்பிவிட்டேன்.

நான்காம் நாள் வந்து சேர்ந்தாள் பாட்டி.

வயசான அம்மாள் என்றால் ஐம்பது வயசு வாக்கில் இருப்பாள் என்று நம்பியிருந்த எனக்கு வந்து இறங்கிய பாட்டியைக் கண்டதும் 'திக்'கென்றது.

'' ரொம்ப வயசாகியிருக்கே !.... வீட்டு வேலைகளைச் செய்ய முடியுமா? எங்க வீட்டிலே மேஜையிலே பரிமாறணும். ரொம்ப ஆசாரம் பார்க்கக் கூடாது. குழந்தைகள் விஷமம் பண்ணினா பொறுத்துக்கணும்... உங்களால் முடியுமா பாட்டி ?'' என் மனசைத் திறந்து கேட்டுவிட்டேன்.

அமைதியாய்ச் சிரித்தாள் பாட்டி. பிறகு, ''எல்லாத்துக்கும் ஒத்துண்டுதானே வந்திருக்கேன்'' என்றாள்.

சும்மா சொல்லக் கூடாது.

வயசாயிடுத்தே ஒழிய, பாட்டியின் காரியங்கள் வெகு விதரணை.

அருமையான சமையல்.

எங்களுக்கெல்லாம் பரம திருப்தி.

**பா**ட்டி குடும்பத்தைப்பற்றி நான் ரொம்ப கேட்கவில்லை. 'வாழ்ந்து கெட்ட குடும்பம்' என்று பெரியம்மாள் எழுதி இருந்ததால் ஏதாவது கேட்டு மனசைப் புண்படுத்திவிட வேண்டாம் என்று பேசாமல் இருந்தேன்.

முதல் மாதம் முடிந்ததும் பாட்டியின் சம்பளப் பணத்தை நீட்டினேன்.

''என்கிட்டே கொடுக்க வேண்டாம்மா. விலாசம் தரேன். கொஞ்சம் மணியார்டர் அனுப்பிடறியா !''

பாட்டியின் பிள்ளை ராமுவுக்குப் பணத்தை அனுப்பச் சொன்னாள். கூடவே நாலு வரிகள் என்னையே எழுதச் சொன்னாள். ''நான் சௌக்கியமா யிருக்கேன். உன் உடம்பைப் பார்த்துக் கொள்.... — இப்படிக்கு...''

இந்தக் கடிதாசும், மணியார்டரும் போய்ச் சேர்ந்ததற்கான ரசீது வந்து சேர்ந்ததே ஒழிய அவனிடமிருந்து பதில் கடிதம் ஒரு வரிகூட இல்லை.

''ஏன் பாட்டி உங்க பிள்ளை பதில் கடுதாசி போடலே ?''

''அவனுக்கு ஒழிஞ்சிருக்காது... கள்ளக் குறிச்சியிலேயிருந்து நித்தமும் சைக்கிளைப் பத்து மைல் ஓட்டிண்டு பள்ளிக்கூடத்துக்குப் போகணும்... ஒழிஞ்சிருக்காது....''

அன்று தெரிந்து கொண்டேன், பாட்டியின் பிள்ளை கள்ளக்குறிச்சியில் ஜாகை வைத்துக் கொண்டு அருகிலிருந்த கிராமத்து ஆரம்பப் பள்ளியில் ஆசிரியர் வேலை பார்க்கிறான் என்று.

அடுத்த மாசம் முப்பத்தியொன்றும் தேதி பாட்டி பிள்ளையிடமிருந்து கடிதம் வந்தது.

''கையில் கட்டி வந்திருக்கிறது. இந்த மாசம் ஐந்து ரூபாய் சேர்த்து அனுப்பு'' என்று எழுதியிருந்தான்.

பாட்டி கேட்டுக் கொண்டபடி ஐந்து ரூபாய் சேர்த்து அனுப்பினேன்.

மறுமாசமும் இதே கதை. கொஞ்சம் மாறி, ''காலில் ஆணி வந்திருக்கிறது; வைத்தியம் பார்க்கணும். பத்து ரூபாய் கூட அனுப்பு'' என்று இருந்தது.

முதல் மாச அட்வான்ஸ் ஐந்து ரூபாயை இன்னும் கழிக்கவில்லை; அதற்குள் மேலும் பத்து ரூபாய் என்றால் ?

'' என்ன பாட்டி, உங்க பிள்ளை இப்படி மாசா மாசம் பணம் அனுப்பச் சொல்றான்? அவனுக்குச் சம்பளம் வரதோன்னோ ? ஒண்டிக் கட்டைக்கு அதுக்கு மேலே என்னத்துக்கு ? இப்படி மேலே கொஞ்சம் போட்டு அனுப்பிண்டே இருந்தா, எப்போ அட்வான்ஸைக் கழிக்கிறது ?''

'' இந்த மாசம் கொடுத்துடும்மா... காலில் ஆணின்னு எழுதி யிருக்கானே.... பாவம்... அடுத்த மாசம் கண்டிப்பாய்ப் பிடிச்சுக்கோ. அவனுக்கு நூத்தி எழுபது ரூபாய் வர்றது.... இதுலே வீட்டு வாடகை கொடுத்து, சீட்டு கட்டி, சாப்பிட்டு....ம்... அவனாலே எப்படி முடியும் ?.....''

பாட்டியின் பேச்சு எனக்குச் சமாதானத்தைக் கொடுக்கவில்லை.

ஒரு தனி ஆண் பிள்ளைக்கு நூத்தி எழுபது ரூபாய் சம்பளம் போதாதா, என்ன?

இப்படி வயசான காலத்தில் தாயை வேலை பண்ணவிட்டுப் பணம் பிடுங்குகிறானே, என்ன பிள்ளை இவன் ?

எனக்கு ராமுவின் மேல் நல்ல அபிப்பிராயம் தோன்றவில்லை.

அடுத்தடுத்து வந்த மாசங்களிலும், இதே பல்லவிதான்.

'பரீட்சைக்குப் படிக்கணும் ; சைக்கிள் ரிப்பேர்; தேள் கொட்டியது, ஜுரமாய்ப் படுத்து விட்டதால் சம்பளம் பிடித்துவிட்டார்கள்' — இப்படி ஏதோ நம்ப முடியாமல் ஒன்று மாற்றி ஒன்று.

பணம் வந்து சேர்ந்ததுக்கோ, மற்றபடி, 'அம்மா நீ சௌக்கியமா ?' என்றோ ஒரு வரி கிடையாது. மாசக் கடைசியில் மட்டும் 'கூடப் பணம் வேணும்' என்று கட்டளையிடும் ஒரு கடிதம்.

''என்ன பிள்ளை இவன், பாட்டி? உங்களை உட்கார வைச்சுக் காப்பாத்தாட்டாலும் சும்மா இருக்கலாமே! என்னத்துக்காக இப்படிப் பிடுங்கறான் ?''

ஆட்டுக் கல்லில் அரிசியை அரித்துப் போட்டுக் கொண்டிருந்தாள் பாட்டி.

தலையை நிமிர்த்தவேயில்லை.

''பத்து பெத்தேன். துக்கிரியாட்டம் ஒண்ணொண்ணா வாரிக் குழியில் போட்டேன். மிஞ்சினது இவன் ஒருத்தன்தான். எப்படியோ போகட்டும்.... அவன் நன்னா இருந்தால் சரி. எனக்குக் கொள்ளி போட இவன் ஒருத்தனாவது இருக்கானே.... எப்படியோ நன்னா இருந்தா சரி.....''

ஓ ! விஷயம் இதுவா ? பத்துப் பிள்ளைகளில் தங்கினது இவன் ஒருத்தன்தான் என்பதால் பீறிடும் தாய்ப் பாசமா ?

'' பத்தா பெத்தேள் ? பாக்கிப் பேரெல்லாம் என்ன ஆறு பாட்டி ?''

அரைத்துக் கொண்டே பேசினாள் பாட்டி.

''தலைச்சன் பெண். தங்க விக்கிரகம் மாதிரி இருப்பா. மூணு வயசு இருக்கும். அக்கா பெண் கல்யாணத்துக்குப் போக வேண்டியிருந்தது.

'' 'கொழந்தைக்கு உடம்பு சரியாயில்லே. நீ போகாதே'ன்னுர் எங்காத்துக்காரர்.... மீறிண்டு போனேன். ஜானவாசம் நடக்கிறது. என் பொண்ணுக்கு மாந்தம் கண்டு உடம்பு ஜாஸ்தியாயிடுத்து... அது அந்தக் காலம்... பட்டிக்காடு... வைத்தியமா, — டாக்டரா? ரொம்ப ஜாஸ்தியாறதுக்கு முன்னே நம்ப ஊருக்குப் போயிடுவோம்னு கிளம்பிட்டேன். வண்டி தெரு முனை திரும்பலே. கொழந்தை பிராணன் போயிடுத்து... அக்ரகாரத்து மனுஷா பொணத்தை ஊர் விட்டு ஊர் எடுத்துண்டு போகப்படாதுன்னு தடுத்துட்டா... தெருக் கடைசியிலே இருந்த ஆலமரத்தடியிலே குழந்தை பொணத்தை வச்சிண்டு தவிச்சேன்.... ஒரு மம்மட்டியும், கடப்பாரையும் கொடுத்து அங்கேயே தோண்டிப் பொதைக்கச் சொன்னு அக்கா மாமியார்.... அவர்கள் வீட்டுக் கவலே அவளுக்கு.... என் மனசு ஆருக்குப் புரிஞ்சது?... கொழந்தையை அனுதைப் பொணமா பொதைச்சுட்டு எங்கண்ணுவோடு ஊருக்குத் திரும்பிப் போனேன்.... பாவி...''

பாட்டியின் கண்கள் கலங்கிக் குரல் கரகரத்து விட்டது.

அடுத்த பிள்ளை வயிற்றில் கட்டி வந்து போயிற்றும்; மூன்றும் பெண்ணை அவள் நகைகளுக்கு ஆசைப்பட்டுக் கடத்திக் கொண்டுபோன தயிர்க்காரி, நகைகளைக் கழற்றிக்கொண்டு கழுத்தை நெரித்துக் கிணத்தில் போட்டு விட்டாளாம். இரண்டு நாட்கள் தேடினபிறகு ஊதி, உப்பிப் போன சடலம் கிடைத்ததாம். இப்படியே குற்றுயிராய் ஒன்று; அரைகுறையாய் ஒன்று....

கனிஷ்ட புத்திரன் ராஜா, பேருக்கு ஏத்த மாதிரி ராஜாவாய் இருப்பானும். அம்மா மேல் உசிராம். ''நீ எப்பவும் என் கூடவே இரும்மா...'' என்று அம்மா தலைப்பைப் பிடித்துக் கொண்டு சுற்றி வருவானும். அவனுக்கு இருபத்தி மூணு வயசில் கல்யாணம். இருபத்தி நாலு வயசில் டைபாய்ட்....

''கூடப் கொள்ளாமல் ராஜாவைக் கிடத்தியிருந்தது. 'அம்மா—அம்மா'ன்னு துடியாய் இருந்தவன் கட்டையாய்க் கிடந்தான்.''

பாட்டியின் கண்களில் நீர் வழிந்தது.

எல்லாம் போய் மிஞ்சினது இந்தத் தத்தாரிப் பிள்ளை ராமுதான்.

பாட்டி சொன்னவைகளை என்னுல் நம்பவே முடியவில்லே. ஒரு மனுஷிக்கு அடுக்கடுக்காய் இத்தனை துன்பங்களா? இது சாத்தியமா? தன் மேல் பரிதாபம் வரவேண்டும் என்பதற்காக இல்லாததையும் பொல்லாததையும் சேர்த்துச் சொல்லுகிருளோ?

என் சந்தேகம் தவறுனது என்று சில நாட்களுக்குள் தெரிந்து விட்டது.

திருநெல்வேலி பெரியம்மா சென்னையில் ஒரு கல்யாணத்துக்குப் போகும் வழியில் இங்கு தங்கினுள். ஸ்டேஷனிலிருந்து வீட்டுக்கு வரும்போது காரிலேயே கேட்டுவிட்டாள் —

''பாட்டி நன்னுப் பண்ணைறுளா?''

''ஓ'' என்று தலையாட்டினேன். பிறகு ''பாட்டி நல்லவதான்; ஆனு அவ பிள்ளை ஏன் இப்படி இருக்கான் பெரியம்மா?'' என்றேன்.

''ச்'' கொட்டினுள் பெரியம்மா.

''பாட்டி வாழ்ந்த காலத்திலே நீ பார்த்திருக்கணும்... ஒரு கையில் சிவப்பு முத்து வளை, இன்னொரு கையில் பச்சை, தங்க வளை, காதிலே பாம்படம், கெட்டி ஜரிகைப்புடவை அவ ஆத்துக்காரர் வக்கீலாக இருந்து கொழிச்சார்... அவர் கூடப் பிறந்தவா எல்லாத்தையும் அழிச்சா... இவ தேமேன்னு வாயை மூடிண்டு இருந்தா... பத்துப் பிள்ளைகளைப் பெத்து ஒண்ணை மாந்தத்துலே, ஒண்ணை வயத்துக் கட்டியிலேனு வாரிக் கொடுத்தா... பாவம்.. பிள்ளைகளும் போயி, ஆம்படையானும் போயி சொத்து பத்தெல்லாம் போயி இன்னிக்கு இப்படி இருக்கா...''

அப்போ, பாட்டி சொன்னதெல்லாம் நிஜம்தானு? என் கண்கள் கசிந்தன.

பெரியம்மா கெகிகெத்தாள். — ''நல்ல பிள்ளையெல்லாம் போயிடுத்து... இப்போ தத்தாரி தங்கியிருக்கான்.... அவ தலையெழுத்து. அந்தப் பிள்ளை ஒரு வேறு ஜாதிக்காரியை அழைச்சுவைச்சுண்டு இருக்கான். பாட்டிக்கும் தெரியும். தெருவே சிரிக்கிறது. ... என்ன சொல்லி என்ன?... நீ பாட்டிகிட்டே கேட்டுடாதே... அவள் மானி...''

பிள்ளை அடிக்கடி பணம் கேட்கும் காரணம் இப்போது புரிந்தது.

முடியாத வயசில் பாட்டி ஈட்டும் பணம் அவனது ஆசை மனைவிக்குப் போறதா? என்ன பிள்ளை!

**பா**ட்டி வந்து இரண்டு வருஷங்கள் ஆனதும் ''பிள்ளையைப் பார்த்துட்டு வரேளா? சம்பளத்தோட லீவு தரேன்'' என்றேன்.



**பெட்ரோல் விலை ஏற்றத்துக்குப் பிறகு...**



மெல்போர்ன் (ஆஸ்திரேலியா) நகரிலுள்ள ஒரு பால் நிறுவனம் பால் சப்ளை செய்வதற்காக அவர்களிடம் இருந்த 'வான்'களை விற்று விட்டு அதற்குப் பதில் குதிரைகளை வாங்கியிருக்கிறது. ''வா'னை விடக் குதிரை மலிவு! 5000 ரூபாய்க்கு ஒரு குதிரை வாங்கினால் அது 15 வருஷம் உழைக்கிறது. ஒரு 'வா'ன் அதைப்போல் 5 மடங்கு விலை; உழைப்பது ஐந்தாறு வருஷங்கள் தான்'' என்று அவர்கள் சொல்கிறார்கள்!

—சரோஜா ராமச்சந்திரன்

---

''வேண்டாம்மா... அலைஞ்சா எனக்கு ஒத்துக்குமோ, ஒத்துக்காதோ. அவன் சௌக்கியம்னு கடிதாக வரதே அது போதும்...''

பாட்டி போகாததற்கு எனக்குக் காரணம் புரிந்ததால் மேற்கொண்டு பேசவில்லை.

பாட்டியின் பிள்ளை குணம் நன்றாய்த் தெளிவானபிறகு பாட்டிக்குச் சம்பளத்தைப் பத்து ரூபாய் ஏற்றி அதை அவளிடம் கொடுக்காமல் தனியாய் என்னிடமே வைத்திருந்தேன். ''உங்க பிள்ளைக்குத் தெரிஞ்சா இதையும் அனுப்பும்பான் பாட்டி அதனாலே என் கிட்டேயே இருக்கட்டும்'' என்றபோது ''அவனுக்குச் செலவு —பாவம்... வாடகை, சீட்டு கட்டணும் — என்ன பண்ணுவான்?... நான் சேர்த்து வைச்சு என்ன பண்ணப் போறேன்? எனக்கு அவன் கொள்ளி போட நான் முன்னாலே போகணும்... அவ்வளவுதான்'' என்றாள் வழக்கம் போல.

இந்தத் தீபாவளி வந்தால் பாட்டி என்னிடம் வந்து ஆறு வருடங்கள் பூர்த்தியாகி விடும்.

இன்று காலையிலே நான் விழித்துக்கொண்டது இந்தக் கழுகுகள் செய்த ஆர்ப்பாட்டத்தால்தான். என்ன கத்தல் வேண்டிக் கிடக்கிறது? காரணமில்லாமல்? இப்படியா இரவு பகல் பார்க்காமல் கத்தும்? சலித்துக் கொண்டே எழுந்தவள் மணியைப் பார்த்தேன் — ஐந்து. இந்தக் காலைப் பொழுதில் கழுகுகளின் அவலக் கத்தல் என் காதுகளில் நாராசமாய்க் கேட்கவே இனி உறங்க முடியாது என்று எழுந்து விட்டேன்.

பல்லைத் தேய்த்து விட்டுச் சமையற்கட்டுக்குப் போனேன்.

சாதாரணமாய் நாலு மணிக்கெல்லாம் பாட்டி எழுந்து, ஸ்வாமி விளக்கை ஏற்றி, காப்பி டிகாக்ஷன் போட்டு, குளித்துவிடுவாளாதலால் உள்ளே இருந்த இருட்டு எனக்குப் புதிதாக இருந்தது.

ஸ்வாமி விளக்கு ஏற்றப்படவில்லை. சமையல் அறை நிசப்தமாய் இருந்தது.

என்னாயிற்று?

''பாட்டி!''

பதிலில்லை.

மின்விளக்கைப் போட்டுத் திரும்பினவள் பாட்டி படுத்திருந்த நிலையைக் கண்டு பதறிப் போனேன்.

என் கணவரை எழுப்ப அவர் வந்து பார்த்தார்.

பாட்டி உறக்கத்திலேயே அமைதியாய் இறந்து விட்டது புரிந்தது.

என்ன பண்ணுவது?

பெரியம்மாவுக்கு ஓர் அவசர போன் கால் 'புக்' செய்தோம். தொடர்பு கிடைத்தது.

''பாட்டியின் பிள்ளைகிட்டே விஷயத்தைச் சொல்லி உடனே அனுப்புங்கோ.''

ஒரு மணி நேரம் போல் சென்ற பிறகு அங்கேயிருந்து போன் வந்தது.

பெரியம்மா பேசினாள்.

''அவா வீட்டுக்குப் போனேன். அவன் இல்லை. அந்தப் பெண் இருந்தா. விஷயத்தைச் சொன்னேன். சரியாப் பதில்கூடச் சொல்லாமல் 'கிழம் மண்டையைப் போட்டுடுத்தா?'ன்னு கேட்டுட்டு உள்ளே போயிட்டா.... அவன் வரட்டும். விஷயம் தெரிஞ்சா வந்துடுவான்.''

மதியம் போய் மாலை இருள் சூழ ஆரம்பித்து விட்டது.

அப்போதுதான் அந்தத் தந்தி வந்தது.

''எனக்கு உடம்பு சரியில்லை. இப்போது வரமுடியாது. காரியங்களை நீங்களே கவனித்து விடுங்கள் — ராமு.''

யார் காரியத்தை யார் கவனிப்பது? 'கொள்ளி போட ஒருத்தனாவது தக்கினானே' என்று கடவுளுக்கு நன்றி செலுத்தி, ஓடாய்த் தேய்ந்து உழைத்த தாய்க்கு அவள் மகன் வந்து காரியங்களைக் கவனிக்காமல், யார் கவனிப்பது?

ஒரே ஒரு நிமிடம் நிலைகுலைந்து போன என் கணவர், ஏதோ தீர்மானித்தவராய் அக்கம் பக்கத்து ஆட்களைச் சேர்த்தார். ஆக வேண்டிய காரியங்களைப் பார்த்தார். ''அவள் கையாலே இத்தனை வருஷமாச் சாப்பிட்ட நானும் ஒரு பிள்ளைதான்—நான் காரியத்தைப் பண்ணறேன்'' என்று சொல்லிக் கொண்டு கிளம்பி விட்டார்.

போகட்டும்; பாட்டிக்குக் கடைசிக் காலத்தில் ஓர் உத்தமமான பிள்ளை கிடைத்து விட்டார். — அந்த மட்டும் அவள் கொடுத்து வைத்தவள்தான்.

ஆனால், ராமு? அவனை நினைக்கையில் என் உடம்பே கசந்து ஆடியது.

பிள்ளையா அவன்?

மனுஷனா அவன்?

பாட்டியை உயிரோடு கொத்திக் கொத்தித் தின்ற பயங்கரக் கழுகு — உயிர் போன பிறகு லட்சியம் பண்ணாமல் பறந்து விட்டான்.

பின்னால் கழுகுகள் கத்துவது எனக்குக் கேட்கிறது.

உயிரோடு ஒரு ஜீவனைக் கொத்தித் தின்ற ராமுவை விட, உயிரில்லாப் பிணங்களைத் தின்று வாழும் அந்தக் கழுகுகள் ஒருபடி மேல்தான்.

கழுகுகளின் சத்தம் இப்போது எனக்கு அவ்வளவு நாராசமாக ஒலிக்கவில்லை.

## கடைசிப் பக்கம் கண்ணதாசன்

# உடம்பார் அழியின்...

**உ**டல், இறைவன் கொடுத்த ஒரு யந்திரம்.

பிறப்பில் இருந்து பருவத்துக்குப் பருவம் வளர்ந்து வரும் அந்த யந்திரம், நாற்பது வயதுக்குப் பிறகு தேயத் தொடங்குகிறது.

**"விசையுறு பந்தினைப் போல்–மனம்**
**வேண்டிய படிசெல்லும் உடல் வேண்டும்!"**

—என்றார் பாரதி.

'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்' என்றார்கள் பெரியோர்.

உடம்பு தன் சக்தியை இழந்து விடும்போது உலகமே மயங்கித் தெரிகிறது.

யந்திரம், அசல் யந்திரமாகவே ஆகி விடுகிறது.

அதிலே மனித உணர்ச்சிகள் செத்துப் போகின்றன.

ஆகவே, ஆரோக்கியமான இளைஞர்களைச் சமுதாயம் பெற, எனது அனுபவங்களை யோசனைகளாகச் சொல்ல விரும்புகிறேன்.

முதலில், ஒரு நாளைக்கு நான்கு மைல் தூரமாவது நடந்து கொண்டிருக்க வேண்டும்; அல்லது காலையிலும் மாலையிலும் விளையாட வேண்டும்.

முப்பது வயதுக்கு மேல் நிச்சயமாக நடந்தே தீரவேண்டும்.

முட்டை, பட்டாணி, மூளை, முருங்கைக் கீரை, உருளைக் கிழங்கு, தட்டைப் பயிறு, மொச்சை, பலாப்பழம், பலாக் கொட்டை, ஆடு, மாடுகளின் மாமிசம், எறும், நண்டு, பன்றி இறைச்சி இவற்றைத் தொடவே கூடாது.

பூமிக்கு அடியில் விளையும் கிழங்குகளில் முள்ளங்கி, காரெட், பீட்ரூட், தவிர எதையும் தொடக்கூடாது. புகை பிடிப்பது அறவே கூடாது. மதுப் பழக்கங்களின்கெடுதல் பற்றிக் கால காலங்களாகப் பெரியோர் சொல்லி வந்திருக்கிறார்கள். பெதடின் ஊசி, மயக்க மருந்துகளைக் கனவிலும் கருதக் கூடாது.

இந்தப் பக்குவத்தோடு உடம்பை வைத்திருந்தால், தானும் ஆரோக்யமாக இருந்து ஆரோக்கியமான குழந்தைகளையும் பெற முடியும். மருந்து மாத்திரைகளுக்கு வேலை இருக்காது.

உணவைக் குறைத்துச் சாப்பிடுவது போன்ற ஆரோக்கியம் வேறு எதுவும் கிடையாது. நமது மூதாதையர்கள் இவ்வளவு மருந்து மாத்திரைகளையா சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்?

நோயை ஏழு வகையாகப் பிரித்தார்கள்: வாயு, பித்தம், கபம், சீதம், உஷ்ணம், சிலேட்டுமம், வாதம் என்பனவையே அவை.

சாப்பிடும் உணவிலேயே இவற்றுக்குப் பரிகாரம் வைத்தார்கள்: தூதுவளை, பிரண்டை, வெள்ளைப் பூண்டு, வெங்காயம், தேன், இஞ்சி போன்றவற்றை உணவிலேயே சேர்த்தார்கள்.

'நாளுக்கிருமுறை; வாரம் இருமுறை; மாதம் இருமுறை; வருஷம் இருமுறை' என்று பழமொழி சொல்வார்கள்.

நாளுக்கு இரு முறை - காலையிலும் மாலையிலும் மல ஜலம் கழிக்க வேண்டும். வாரம் இரு முறை - புதன், சனி எண்ணெய் நீராட வேண்டும். மாதம் இரு முறைதான் மனைவியோடு உறவு கொள்ள வேண்டும். வருஷம் இரு முறை பேதிக்குச் சாப்பிட வேண்டும்.

இந்த இலக்கணத்தோடு குதிரை ஏற்றமும், கால்நடையும் இருந்ததால் அவர்கள் நீண்ட நாட்கள் ஆரோக்கியத்தோடு வாழ்ந்தார்கள்.

நாமோ தின்னக் கூடாததைத் தின்கிறோம்; செய்யக் கூடாததைச் செய்கிறோம்; மருத்துவரையும் மருந்தையும் தேடி அலைகிறோம்.

தீய பழக்க வழக்கங்கள், உணவுகள் உடம்பை எவ்வளவு கெடுத்து விடுகின்றன என்பதற்கு, என் அனுபவமே போதும்.

இப்போது நான் நல்ல திடகாத்திரமான ஆரோக்கியத்துக்கு ஏங்குகிறேன்.

சுறுசுறுப்பும் ஞாபகசக்தியும் குறைவதைக் காண்கிறேன்.

முறைப்படி வாழாததால் வந்த கொடுமையை உணர்கிறேன்.

என் கையில் இருந்த உடம்பை மருத்துவர் கையில் ஒப்படைத்திருக்கிறேன்.

வீண் தொல்லை; வீண் செலவு; விரயம்.

எந்த விவசாயிக்கோ, தொழிலாளிக்கோ சர்க்கரை நீர், அல்லது ரத்தக் கொதிப்பு வந்ததாக நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா!

அறுபது வயதுத் தொழிலாளி, இருபது மூட்டை அரிசியை ஏற்றிக் கை வண்டி இழுக்கிறான்.

நாற்பது வயது நோயாளி, சாப்பிட்ட பிளேட்டைக் கூடத் தூக்கி வைக்க முடியாமல் தடுமாறுகிறான்.

வியர்வை வெளியேற வெளியேறத்தான் வியாதியும் வெளியேறுகிறது.

இனி எதிர்காலத்தில் நாம் சாகிறவரை உழைக்க வேண்டியிருக்கும். பெரும் பொருளைச் சேமித்து வைத்துக் கொண்டு சுகவாசம் நடத்த முடியாது.

அதற்கு முக்கியத் தேவை, ஆரோக்கியம்.

காந்தியடிகள் இதுபற்றி எவ்வளவோ எழுதியிருக்கிறார். அதைப் படித்தும் நான் அதன்படி நடக்கவில்லை. விளைவு எனக்குத்தான் தெரியும்.

சந்நியாசியின் ஆரோக்கியம் சம்சாரிக்கு இல்லாமற் போனதற்குக் காரணம் என்ன?

சந்நியாசி அளந்து வாழ்கிறான்; சம்சாரி அளவுக்கு மீறி வாழ்கிறான்.

வந்தபின் வருந்திப் பயனில்லை; வருமுன்பாகவே பாதுகாப்பாக இருங்கள்.

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று சொன்னார்களே, அவளை நான் இப்பொழுதுதான் நினைக்கிறேன்!

நீங்கள் இப்பொழுதிருந்தே நினையுங்கள்.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran




# ஒவ்வொரு மாதமும் உங்கள் மனைவிக்கு ஒருபரிசு கொடுங்கள் -யூகோபாங்க்சேமிப்பு

எல்லோரையும் கவரத்தக்க ஒரு ஆச்சர்யம்! எதிர் பாராத பரிசு-ஆபரணத்தின் மினுக்குதலோ சேலையின் பளபளப்போ இல்லாதது. இருந்தும் அவளால் எதிர்க்க முடியாத ஒரு பரிசு. எக்காலத்திலும் அவளைச் சந்தோஷப் படுத்தும் சேமிப்பு.

விவரங்களுக்கு உங்கள் அருகில் உள்ள யூகோ பாங்க் கிளையை அணுகவும்




**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)